# பைந்தமிழ் வாசகம்

## பகுதி-2




நான்குநேரி போர்டு ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்
தொகுத்தது.




பிரசுர கர்த்தர்:
இ. மா. கோபால கிருஷ்ணக்கோன்,
புத்தக வர்த்தகர், மதுரை.
1930
[விலை அணா 10.

# பைந்தமிழ் வாசகம்

## பகுதி–2

நான்குநேரி போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்
தொகுத்தது.

பிரசுர கர்த்தர்:
இ. மா. கோபால கிருஷ்ணக்கோன்,
புத்தக வர்த்தகர், மதுரை.


1930
[விலை அணா 10.




# முகவுரை

---

இப்பைந்தமிழ் வாசகம் ஐந்தாவது பாரம் என்று சொல்லப்பெறுகின்ற ஒன்பதாவது வகுப்புக்குப் பாடமாக வைக்க உரியது. இக்காலத்தில் உயர்தரப் பள்ளிக்கூடங்களில் பாடமாக வைக்கத் தகுந்த வாசகங்கள் போதிய அளவு இன்மை தமிழ்ப் போதகாசிரியர் உணர்ந்த உண்மையே. நிகழும் பள்ளிக்கூட ஆண்டு 1929-30லிருந்து நடைமுறைக்கு வந்திருக்கும் சீர்திருத்தப்பெற்ற ஸ்கூல் பைனல் முறைக்கேற்ப இன்னும் பாடப் புத்தகங்கள் வெளிவரவில்லை. ஆதலின், இப்புது முறைக்கேற்பப் பாடப் புத்தகங்கள் வெளியிட எண்ணியிருந்த எம்மைப் புலவர்களுக்கு வள்ளலாகவிளங்கும் மதுரைத் திருவாளர் இ. மா. கோபால கிருஷ்ணக்கோனாரவர்கள் ஊக்கப்படுத்தி, இதனைத் தொகுக்கச் செய்து, அன்புடன் வெளிப்படுத்துகிறார்கள். அவர்களுக்கு எமது நன்றி உரியது.

இவ்வாண்டில் நடைமுறைக்கு வந்திருக்கும் புதியஸ்கூல் பைனல் முறையில் பத்தாவது வகுப்புக்கு நுணுகி ஆராய்ந்து படிக்கவேண்டிய பாடங்கள் செய்யுட்பகுதியில் எண்ணூறு வரிகளும், உரைநடைப் பகுதியில் எண்பது பக்கங்களுமாம். இஃது ஒன்பதாம் வகுப்புக்குரிய நூலாதலாலே இதிலிருக்கிற செய்யுட்பகுதியிலிருந்து ஒன்பதாம் வகுப்புக்கு எழுநூற்றைம்பது வரிகளுக்குக் குறையாமல் நடைபெறவேண்டும். நடக்கும் பாடல்களில் இருநூறு வரி மாணவர்களால் மனப்பாடம் செய்யப் பெறவேண்டியவை. இந்நூலைத் தங்கள் பள்ளிக்கூடங்களில் பாடமாகவைத்து எம்மை ஆதரித்தருளுமாறு தமிழ்ப் போதகாசிரியர்களை வேண்டிக்கொள்கின்றோம்.

நான்குநேரி,
20—12—1929.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை

# பொருளடக்கம்

## செய்யுட் பகுதி:



## உரைநடைப் பகுதி:

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 48 | 10 | நமன | நமன் |
| 61 | 22 | ஆண்டிருந்து | ஆண்டிருந்த |
| 62 | 2 | முறை | "முறை |
| 64 | 26 | அறிவேன் | அறிவேன். |
| 66 | 9 | பொருதிருந் | பொருதிருந் |
| 102 | 19 | நாடாள்வர் | நாடாள்வர். |
| 123 | 16 | முக்களாலிங்கர் தம் அன்னையாரை | அத்தம்பிரான்களில் ஒருவர் அவ்வம்மையாரை |
| 128 | 14 | செவ்வில் | செவ்வல் |
| 131 | 18 | நந்தி | காந்தி |
| 142 | 14 | கல்வியேயாம் | கல்வியேயாம். |
| 144 | 7 | தெய்வாக | தெய்வமாக |
| 149 | 21 | பிறர்க்குறைத்துந் | பிறர்க்குரைத்துந் |

ஸ்ரீ :

# பைந்தமிழ் வாசகம்



## செய்யுட் பகுதி

I

## கடவுள் வாழ்த்து

### 1. தேவாரம்

திருவிருத்தம்

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடம்
நெருங்கிஎங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல்
தில்லைதன்னுள்
ஆள வுடைக்கழல் சிற்றம்ப லத்தரன்
ஆடல்கண்டால்
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர்
காண்பதென்னே? 1

போருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி
புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாளன்
உலகுக்கெல்லாம்

திருவுடை அந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே ? 2

தொடுத்த மலரொடு தூபமும் சாந்தும்கொண்
டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்கும்
காண்பரியான்
பொடிக்கொண் டணிந்துபொன் னாகிய தில்லைச்சிற்
றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே ? 3

வைச்ச பொருள்நமக் காகுமென் றெண்ணி
நமச்சிவாய
அச்சம் ஒழிந்தேன் அணிதில்லை அம்பலத்
தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி உந்தியின்
மேலசைத்த
கச்சின் அழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே ? 4

செய்ஞ்ஞின்ற நீலம் மலர்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
மைஞ்ஞின்ற ஒண்கண் மலைமகள் கண்டு
மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல
மணிமிடற்றான்

கைஞ்ஞின்ற ஆடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே ? 5

ஊனத்தை நீக்கி உலகறி யஎன்னை
ஆட்கொண்டவன்
தேனைத் தெனக்கினி யான்தில்லைச் சிற்றம்
பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை உண்டகண்
டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே ? 6

தெரித்த கணையால் திரிபுரம் மூன்றும்செந்
தீயின்மூழ்க
எரித்த இறைவன் இமையவர் கோமான்
இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே ? 7

சுற்றும் அமரர் சுரபதி, 'நின்திருப்
பாதமல்லாமல்,
பற்றொன் றிலோம்,'என் றழைப்பப் பரவையுள்
நஞ்சையுண்டான்
செற்றங் கனங்களைத் தீவிழித் தான்தில்லை
யம்பலவன்
நெற்றியில் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே ? 8

சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன
சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
முத்தும் வயிரமும் மாணிக்கந் தன்னுள்
விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே? 9

தருக்கு மிகுத்துத்தன் தோள்வலி உன்னித்
தடவரையை
வரைக்கைக ளாலெடுத் தார்ப்ப மலைமகள்
கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்தும் அணிதில்லை
அம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு
காண்பதென்னே? 10

—திருநாவுக்கரசு நாயனார்

## 2. பெரிய திருமொழி

### முதற்பத்து

2-ம் திருமொழி—'வாலி மாவலத்து.'

வாலி மாவலத் தொருவன(து) உடல்கெட
வரிசிலை வளைவித்தன்(று)
ஏலம் நாறுதண் தடம்பொழில் இடம்பெற
இருந்தநல் இமயத்துள்

ஆலி மாமுகில் அதிர்தர அருவரை
அகடுற முகடேறிப்
பீலி மாமயில் நடஞ்செயும் தடஞ்சுனைப்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 1

கலங்க மாக்கடல் அரிகுலம் பணிசெய
அருவரை அணைகட்டி
இலங்கை மாநகர் பொடிசெய்த அடிகள்தாம்
இருந்தநல் இமயத்து
விலங்கல் போல்வன விறலிருஞ் சினத்தன
வேழங்கள் துயர்கூரப்
பிலங்கொள் வாளெயிற்(று) அரியவை திரிதரு
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 2

துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல் துளங்கெயிற்(று)
இளங்கொடி திறத்(து) ஆயர்
இடிகொள் வெங்குரல் இனவிடை அடர்த்தவன்
இருந்தநல் இமயத்துக்
கடிகொள் வேங்கையின் நறுமலர் அமளியின்
மணியறை மிசைவேழம்
பிடியி னோடுவண்(டு) இசைசொலத் துயில்கொளும்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 3

மறங்கொள் ஆளரி உருவென வெருவர
ஒருவன(து) அகல்மார்வம்
திறந்து வானவர் மணிமுடி பணிதர
இருந்தநல் இமயத்துள்
இறங்கி ஏனங்கள் வளைமருப்(பு) இடந்திடக்
கிடந்தரு(கு) எரிவீசும்

பிறங்கு மாமணி அருவியொ(டு) இழிதரு
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 4

கரைசெய் மாக்கடல் கிடந்தவன் கனைகழல்
அமரர்கள் தொழுதேத்த
அரைசெய் மேகலை அலர்மக ளவளொடும்
அமர்ந்தநல் இமயத்து
வரைசெய் மாக்களி(று) இளவெதிர் வளர்முளை
அளைமிகு தேன்தோய்த்துப்
பிரச வாரிதன் இளம்பிடிக்(கு) அருள்செயும்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 5

'பணங்கள் ஆயிரம் உடையநல் அரவணைப்
பள்ளிகொள் பரமா!' என்(று)
இணங்கி வானவர் மணிமுடி பணிதர
இருந்தநல் இமயத்து
மணங்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற
நிமிர்ந்தவை முகில்பற்றிப்
பிணங்கு பூம்பொழில் நுழைந்துவண்(டு)இசைசொலும்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 6

கார்கொள் வேங்கைகள் கனவரை தழுவிய
கறிவளர் கொடிதுன்னிப்
போர்கொள் வேங்கைகள் புனவரை தழுவிய
பூம்பொழில் இமயத்துள்
ஏர்கொள் பூஞ்சுனைத் தடம்படிந்(து) இனமலர்
எட்டுமிட்(டு) இமையோர்கள்
பேர்க ளாயிரம் பரவிநின்(று) அடிதொழும்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 7

இரவு கூர்ந்திருள் பெருகிய வரைமுழை
இரும்பசி யதுகூற
அரவம் ஆவிக்கும் அகன்பொழில் தழுவிய
அருவரை இமயத்துப்
பரமன் ஆதிஎம் பனிமுகில் வண்ணனென்(று)
எண்ணிநின்(று) இமையோர்கள்
பிரம னேடுசென்(று) அடிதொழும் பெருந்தகைப்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 8

ஓதி ஆயிர நாமங்கள் உணர்ந்தவர்க்(கு)
உறுதுயர் அடையாமல்
ஏதம் இன்றிநின்(று) அருளும்நம் பெருந்தகை
இருந்தநல் இமயத்துத்
தாது மல்கிய பிண்டிவிண்(டு) அலர்கின்ற
தழல்புரை எழில்நோக்கிப்
பேதை வண்டுகள் எரியென வெருவரும்
பிரிதிசென்(று) அடைநெஞ்சே! 9

கரிய மாமுகிற் படலங்கள் கிடந்தவை
முழங்கிடக் களிறென்று
பெரிய மாசுணம் வரைஎனப் பெயர்தரு
பிரிதிஎம் பெருமானை
வரிகொள் வண்டறை பைம்பொழில் மங்கையர்
கலியன(து) ஒலிமாலை
அரிய இன்னிசை பாடும்நல் அடியவர்க்(கு)
அருவினை அடையாவே. 10

—திருமங்கையாழ்வார்

II

# நீதி

## 1. நீதிநெறி விளக்கம்

### உலக இயல்பு

இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினும்,ஒன் றில்லானேல்,
வன்சொல்லின் அல்லது வாய்திறவா;—என்சொலினும்,
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய அல்ல பிற. 1

### தாழ்மை

ஆக்கம் பெரியார், சிறியார் இடைப்பட்ட
மீச்செலவு காணின், நனிதாழ்ப:—தூக்கின்,
மெலியது மேன்மேல் எழுச்செல்லச் செல்ல
வலியதன்றே தாழும் துலைக்கு? 2

### தற்புகழ்ச்சி

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல், தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்;—தன்னை
வியவாமை அன்றே வியப்பாவ(து)? இன்பம்
நயவாமை அன்றே நலம்? 3

### விழன்மொழி பேசல்

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு:—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல். 4

## கேடறிதல்

ஏதிலார் யாதும் புகல, இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு : நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார்? தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு. 5

## மேன்மக்கள் குணம்

கண்ணேக் கரும்பா, நகைமுகமே நாண்மலரா,
இன்மொழியின் வாய்மையே தீங்காயா,—வண்மை
பலமா நலம்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு? 6

## மானம் இழத்தல்

களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய(து)
ஊனுடம் பென்று புகழுடம்(பு) ஓம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம். 7

தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும், ஓம்புக;—பின்னர்ச்
சிறுவரை ஆயினும், மன்ற தமக்காங்
கிறுவரை இல்லை எனின். 8

## சாவு அஞ்சாமை

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும்,—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர்; மெய்ப்பயன் கொண்டார்
களியார் சுமைபோ டுதற்கு. 9

## முயற்சி விடாமை

உறுதி பயப்ப கடைபோகா எனும்,
இறுவரை காறும் முயல்ப:—இறும்உயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் ; அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில. 10

## ஊழ்வினை வேறல்

உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே :—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலும் கரி. 11

## கருமம் கண்ணுதல்

காலம் அறிந்தாங் கிடமறிந்து, செய்வினையின்
மூலம் அறிந்து, விளைவறிந்து,—மேலும்தாம்
சூழ்வன சூழ்ந்து, துணைமை வலிதெரிந்(து),
ஆள்வினை ஆளப் படும். 12

மெய்வருத்தம் பாரார், பசிநோக்கார், கண்துஞ்சார்,
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்,—செவ்வி
அருமையும் பாரார், அவமதிப்பும் கொள்ளார்,
கருமமே கண்ணாயி னார். 13

## மொழி இயல்பு

மனத்த கறுப்பெனில் அல்ல செயினும்,
அனைத்தெவையும் தீயவே ஆகும் ;—எனைத்துணையும்
தீயவே செய்யினும், நல்லவாக் காண்பவே
மாசில் மனத்தி னவர். 14

## ஒழுக்கம் இழுக்காமை

தத்தம் நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தாளூன்றி—எய்த்தும்
அறங்கடையில் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள். 15

## ஈகை இன்மை

வள்ளன்மை இல்லாதான் செல்வத்தில் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல : கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான். 16

## தீயவர் சாதுரியம்

'செயக்கடவ அல்லனவும் செய்துமன்,' என்பார்
நயத்தகு நாகரிகம் என்னாம்?—செயிர்த்துரைப்பின்,
நெஞ்சுநோம் என்று தலைதுமிப்பான் தண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று. 17

## தீய வெளி வரல்

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள்! 'யாவரையும்
வஞ்சித்தோம்!' என்று மகிழன்மின் ;—'வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொல்?' என்றஞ்சி
அங்கம் குலைவ தறிவு. 18

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும் : கழிமுடைப்
புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்,
சென்றுதைக்கும் சேயார் முகத்து. 19

மேலோர் செயல் இயல்பு

மெலியார் விழினும், ஒருவாற்றான் உய்ப ;
வலியார்மற் றென்றானும் உய்யார்:—நிலைதப
நொய்ய சழக்கென வீழாவாம்; வீழினும்,
உய்யுமால்; உய்யா பிற. 20

—குமரகுருபரர்

## 2. திருக்குறள்

அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். 1

அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 2

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்
கணிஅல்ல மற்றுப் பிற. 3

கொன்றன்ன இன்னா செயினும், அவர்செய்த
ஒன்றுநன்(று) உள்ளக் கெடும். 4

எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. 5

ஒழுக்கம் உடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல். 6

அறிவினுள் எல்லாம் தலைஎன்ப, தீய
செறுவார்க்கும் செய்யா விடல். 7

மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வாற் கில்என்ப,
தன்னுயிர் அஞ்சும் வினை. 8

அவிசொரிந்(து) ஆயிரம் வேட்டலின், ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. 9

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி,
எல்லா உயிரும் தொழும். 10

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. 11

வாய்மை எனப்படுவ தியாதெனின், யாதொன்றும்
தீமை இலாத சொலல். 12

பொய்ம்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். 13

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்,
புணரின் வெகுளாமை நன்று. 14

சிறப்பீனும் செல்வம் பெறினும், பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 15

கறுத்தின்னா செய்தஅக் கண்ணும், மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 16

இன்னாசெய் தாரை ஒறுத்தல், அவர்நாண
நன்னயம் செய்து விடல். 17

அறிவினால் ஆகுவ துண்டோ, பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை? 18

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். 19

செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. 20

தாம்இன் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 21

எனைத்தானும் நல்லவை கேட்க, அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 22

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. 23

சென்ற இடத்தால் செலவிடா, தீதொரீஇ,
நன்றின்பால் உய்ப்ப தறிவு. 24

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின், நெடுஞ்செல்வம்
நீடின்றி, ஆங்கே கெடும். 25

இடுக்கண் வரும்கால் நகுக; அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். 26

இன்பம் விழையான், இடும்பை இயல்பென்பான்,
துன்பம் உறுதல் இலன். 27

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய், கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். 28

ஆற்றுவார் ஆற்றல், பணிதல்; அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 29

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்,
என்ன பயத்ததோ சால்பு! 30

—திருவள்ளுவர்

III

# காதை

## 1. நைடதம்

### i. பிரிவுறு படலம்

விண்படு மின்னென மிளிரும் ஆகமும்
மண்படத் துயரொரு வடிவு கொண்டென
கண்படு தோகையை நோக்கிக் காவலன்
புண்படு நெஞ்சொடும் புலம்பி எண்ணினன்: 1

"நண்ணருங் கானெலாம் தொடர்ந்து நண்ணுமேல்,
கண்ணினல் இவள்துயர் காணல் ஆவதே ?
பெண்ணருங் கலத்தினைப் பிரியில், தந்தையூர்
அண்ணிய தவ்வழி அடைந்து வைகுமால். 2

"விரிமலர்ப் பூங்குழல் விழிக்கில், ஈங்கிவட்
பிரிகுவ தரிதினிப் பிரிய எண்ணிலோ,
ஒருதுகில் ஆயதித் துகிலை ஊறுசெய்
கருவிஇங் கே(து)?" எனக் கருத்தில் எண்ணினன். 3

எண்ணிய துணர்ந்திவர்ப் பிரிப்ப முன்னமே
கண்ணிய வஞ்சகக் கலியும் வாளதாய்
நண்ணிமுற் கிடத்தலும், எடுத்து, நாமவேல்
அண்ணலும் துகில்நடு அரிந்திட் டானரோ. 4

சில்லரி நெடுங்கணாள் தெருளு றுவகை
மெல்லெனக் கொடுங்கையில் நீக்கி, வெய்துயிர்த்(து),
ஒல்லையில் உயிர்விடும் உடம்பு போன்மென
அல்லலங் கடலிடை அழுந்தி னனரோ. 5

எழூம்;'அகன் றூல்இனி என்கொல் ஆம் ?' என
அழூம்; உயிர் துறந்தென அவசம் மேற்கொளா,
விழூம்; 'இவட் காக்'கென மெலிந்து தெய்வதம்
தொழூம்;இனை யனபல துன்பம் எய்துமால். 6

செல்லும்வெந் துயரொடும் ; செல்லக் காலெழா(து)
ஒல்லையில் மீளும்;வெய் துயிர்க்கும் ; 'ஒண் ணுதல்
கல்லத ரிடைத்தனி ஏகில், பேய்க்கணம்
கொல்லும்,'என் றுருயிர் குழைந்து சாம்புமால். 7

ஆயிடை இன்னணம் வருந்தி, அன்புகூர்
வேயுறழ் தோளியைப் பிரிந்து, வெஞ்சினம்
மாயவெங் கொடுங்கலி வயத்தன் ஆதலில்,
போயினன் பித்தரில் பொருவில் வாய்மையான். 8

நள்ளிருட் போதுவெங் கானில் நாமவேல்
அள்ளிலைப் பூணினன் அகன்று போதலும்,
விள்ளருந் துயரொடும் மெலிந்து கண்படும்
பிள்ளைமான் நோக்கிதன் செய்கை பேசுவாம் : 9

நீடிய துயில்சிறி(து) உணர்ந்து, நேரிழை
ஆடகத் தொடிக்கையால் அணைக்கக் காண்கிலாள்,
ஊடினள், பதைத்தனள், உயிர்ப்பு வீங்கினள்,
தேடினள் காந்தளம் செங்கை நீட்டியே. 10

ஆயிடைக் காண்கிலா(து) அழுங்கிச் செங்கடை
பாயரி நெடுங்கணீர் அருவி பாய்தரத்
தூயமென் மலர்க்கரம் நெரித்து, துண்ணென
வாய்வெரீஇ, ஆல்வயி றதுக்கி, மாழ்கினள். 11

"தெளித்தபூம் பள்ளியில் சிறிது நீங்கினும்,
அளப்பருந் துயரொடும் அவலம் எய்துவேன்!
தளிப்பெயல் கங்குலில் தமியள் மாழ்குற
ஒளித்துநீ தனிவிளை யாடில், உய்வனோ? 12

(வேறு)

"கான்று ருயிரொழுக, கண்ணீர் கவுள்அலைப்ப,
ஊன்தோய் கணைபட்(டு) உழலும் பிணைஒத்தேன்!
மான்தேர் அரசர் முடியுழுத வார்கழற்கால்
தோன்றல்! என் கண்களிப்ப இன்னமுமென் தோன்றிலையே?

"நேரலார் போரேறே! நிடதத்தார் கோமானே!
ஆர வரைமார்பா! அளியேன் உயிர்க்குயிரே!
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்,
சாரலையால் இன்னும்! இதுவோநின் தண்ணளியே? 14

"நெஞ்சம் மெலிவேன் நினது தடந்தோளும்
கஞ்ச மலர்முகமும் காணாது, கண்பனிப்ப!
மஞ்சுதவழ் வெற்பெறிந்த வச்சிரத்தோன் அன்றளித்த
விஞ்சை பயின்று விளையாட்(டு) அயருதியோ? 15

"ஞாலத் திருள்நடப்ப, நாட்கமலம் வாய்நெகிழ,
வேலைத் திரைமுகட்டில் வெய்யோன் எழுந்தனனால்
மாலைக் கதிர்வடிவேல் மன்னர் பெருமானே!
காலைக் கடவ கடன்கழிக்க வாராயே! 16

"வாவும் இளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்!
கூவும் கரிய குயில்காள்! மென் புள்ளினங்காள்!
ஆவி எனமேவி, 'அகலேம்' என அகன்ற
காவலன்தான் போன வழிஎனக்குக் காட்டீரே!" 17

என்று உருகி, இருகண்ணீர் ஆலிஉகத்
தன்னுத் தழும்பப் புலம்பித் தமியளாய்,
மின்னார் இடைநுடங்கச் செல்வாள், விறல்வேந்தன்
பொன்னார் அடிநோக்கிப் பூங்கொடிபோல் வீழ்ந்தழுதாள் 18

ஐயன் கமல அடிச்சுவடு காண்டலுமே
வெய்ய துயரவிடம் மீதூர வாய்புலரா,
செய்ய கமல மலரில் திருவனையாள்
கையறவா, நெஞ்சம் கலுழா, உயிர்சோர்ந்தாள். 19

இவ்வாறு துன்பக் கடலி னிடைமூழ்கும்
மைவார் தடங்கண் மடமாதின் செவ்விமுகம்
செவ்வாள் மதியமெனச் செங்கண் துளை எயிற்று
வெவ்வாய் அரவம் உருத்து விழுங்கியதே. 20

"நேய்த்தோரின் மூழ்கி நிணம்பருகும் வைவேலோய்!
பைத்தோர் கொடுந்தறுகண் பாந்தள் விழுங்கியதால்,
எய்த்தேன்! உயிர்காத்தற்(கு) எய்தாய்!" எனஅழுதாள்,
மைத்தோய் குவளை மதர்நெடுங்கண் வாணுதலே. 21

போங்கழல்வெங் கானகத்துப் பூவைஅழுங் குரல்கேட்(டு),
அங்கோர் சிலைக்கை அடல்வேடன் வந்தணுகி,
வெங்கண் அரவெறிந்து, வெவ்வா யிடைநின்றும்
கொங்கவிழு மென்கூந்தல் கோதைதனை நீக்கினனால். 22

(பின்பு தமயந்தி, அவ்வேடன் பல அடாத மொழிகளைக் கூற அவனை எரித்து, வணிகரோடும் வழிச் சென்று, சேதிபதி வளநகரில் அரண்மனையிலே தோழியாக அமர்ந்திருந்தாள்.)

## ii. வேற்றுரு அமைந்த படலம்

கள்ளு யிர்க்கும்மென் மலர்க்குழற் காமர்பூங் கொடியை
நள்ளி ருட்பொழு(து) அகன்றனன், நண்ணருங் கானில்
தள்ளு தற்கருந் துயரொடு போதலும், தழலும்
ஒள்ள ழற்புகைக் கொழுந்தெழக் கண்டனன் உரவோன். 1

செஞ்சு டர்ச்சிகை வளைதலின் தெருமரல் எய்தி,
நஞ்சு யிர்க்கும்வாள் அரவொன்று, " நாமவேல் இறைவ!
தஞ்சம்; நீயெனை அளித்தி," என்(று) உரைத்தலும், தாழா(து),
'அஞ்சல்! அஞ்சல்!!' என்(று) அடைந்தனன் மடங்கல்வ றனையான்.

கனைசெழுஞ்சுடர்க் கொழுங்கனல் படர்தலின் கரிந்து,
பனைமறிந்தெனக் கிடந்ததோர் பாந்தளை நோக்க,
"வனைபொ லன்கழற் குரிசில்!ஓர் மறையவன் முனிவால்,
நினைவினும்தனிப் பெயர்ந்திடும் நிலைமையொன் றிலனால். 3

"அழலி னின்றெடுத் தையிரண் டடிப்புறத் தகற்றின்,
முழுவல் அன்பொடு நன்கிழைக் குவல்," என மொழிந்து,
தழற்கண் பாம்புடல் சுருக்கலும், தழலருள் வரத்தால்,
எழுவில் நீள்கரத் தாலெடுத்(து) அழற்புறத்(து) இட்டான். 4

கதழெ ரிக்கணின்(று) அகற்றலும், கதிரொளி விரிக்கும்
அதிர்பொ லன்கழல் அரசர்கோன் மெய்யுறத் தீண்டி,
முதிர்சி னத்தவாள் அரவுதன் முன்னுரு எடுப்ப,
விதுகு லத்துயர் வேந்தனும் வேற்றுரு அமைந்தான். 5

"கருணை செய்தெனைப் புரந்தநிற் கடித்தது, முன்னை
உருவு கண்ணுறில் ஒன்னலர் செகுப்பரென் பதனால்.
பொருவி லோய்!இனி வாகுவன் எனும்பெயர் புனையா,
இருது பன்னன்வாழ் அயோத்திமா நகரின்வ குதியால். 6

"ஏந்தல்! ஏகி,அம் மன்னவன் சூதனு இயைந்து,
கூந்தல் மாஉளம் தெரிதரு விஞ்சைநீ கொடுப்பில்,
ஆய்ந்த சூதுவெல் விஞ்சைநின் பால்அவன் அளிக்கும்,
சாந்த மென்மலர்த் தமயந்தி தன்னொடும் சார்வாய். 7

"பின்னர் மன்ன!நின் பெருநிலக் கிழமையும் பெறுதி.
முன்னை மாணுரு எளிதினில் பெற்றிட முன்னில்,
இன்ன பூந்துகில் புனைதி," என்(று) இருதுகில் அளித்து,
தன்னு ருக்கொடு போயது தழல்விழிப் பாந்தள். 8

"ஆவி அன்னவோர் அணங்கினை அரைஇருள் நீத்த
பாவி யேன்முகம் நோக்குறில் பழிவரும் என்றே
மேவு சேக்கையில் குருகிளம் பேட்டினம் வெருவிச்
சேவ லோடகன்(று) ஏகுவ(து)?" எனமனம் திகைத்தான். 9

இன்ன தன்மையன் வைகல்ஈ ரைந்துபோய் இறப்ப,
கன்னல் வேலியம் கழனியில் களிச்சுரும்(பு) அரற்றும்
பொன்னம் தாமரைப் பொகுட்டின்மேல் மடப்பெடை புல்லி
அன்னம் கண்படு வெள்ளநீர் அயோத்திநா(டு) அடைந்தான். 10

இருது பன்னனைக் காண்டலும், "எத்தொழில் வல்லை?
மருவு நாமமென்? கூ(று)" என, "வாகுவன் என்பேர்;
உருவ வாம்பரித் தேரினி(து) ஊர்குவன்; உம்பர்
அரும ருந்தென அடுதொழில் புரிவன்," என்(று) அறைந்தான். 11

வேந்தன் அவ்வுரை கேட்டலும், "வியன்மணி நெடுந்தேர்க்
கூந்தல் மாஉளம் அறிந்தனை, குறிப்பின்ஊர் குதியேல்,
ஆய்ந்த செம்பொனேர் ஆயிரம் வைகலும் அளிப்பல்,
ஏய்ந்த என்இரு பாகரோ(டு) இருத்தி," என்(று) இசைத்தான். 12

அன்ன ஆறுநேர்ந்(து) அலங்குளைப் புரவிமான் தேர்க்கு
மன்ன ளுகிய நிடதர்கோன் வைகலும் புலம்பி,
"துன்னு கானிடை நீத்தவள் துயரமீக் கூர
என்னள் ஆயின ளோ!"என இரங்கிவெய் துயிர்ப்பான். 13

உயிர்த்து மெய்தளர்ந்(து) உருகிய வேந்தனை உளத்தில்
அயிர்த்தொர் சாரதி, "உற்றதை எவன்கொல்?"என் றறைய,
"வெயிற்கொ டுங்கதிர் மறைந்துழி வெவ்வழற் கானில்
பயிர்ப்பில் கோதையைத் தீர்ந்தனன் பாவிலேன்!" என்றான். 14

—அதிவீர ராம பாண்டியர்

## 2. பெரிய புராணம்

### இளையான்குடி மாற நாயனார் புராணம்

அம்பொன் நீடிய அம்ப லத்தினில் ஆடு வார்அடி சூடுவார்
தம்பிரானடி மைத்தி றத்துயர் சால்பின்மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையின் நீடும் ஏர்த்தொழில் நற்கு லம்செய் தவத்தினால்
இம்பர் ஞாலம் விளக்கி னார்இளை யான்கு டிப்பதி மாறனார். 1

ஏரின் மல்கு வளத்தி னால்வரும்எல்லை இல்லதொர்செல்வமும்
நீரின் மல்கிய வேணி யார்அடி யார்தி றத்துநி றைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்கவி ரும்பி மற்றவை பெற்ற நீடுப யன்கொள்வார் 2

ஆரம் என்பு புனைந்த ஐயர்தமன்பர் என்பதொர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினும் நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள்கு வித்து நின்று செவிப்புலத்(து)
ஈர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின், 3

கோண்டு வந்தும ணைப்பு குந்துகு லாவு பாதம்வி ளக்கியே
மண்டு காதலின் ஆத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலுவி தத்தில் ஆறுசு வைத்தி றத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டரிச்சையில் அமுதுசெய்ய அளித்துளார். 4

ஆளும் நாயகர் அன்ப ரானவர் அளவி லார்உளம் மகிழவே
நாளும் நாளும்நி றைந்து வந்துநு கர்ந்த தன்மையின் நன்மையால்,
நீளும் மாநிதி யின்ப ரப்புநெ ருங்கு செல்வம்நி லாவிஎண்
தோளி னார்அள கைக்கி ருத்திய தோழ னார்என வாழுநாள், 5

செல்வ மேவிய நாளிலிச்செயல் செய்வதன்றியும் மெய்யினால்
அல்லல் நல்குர வான போதினும் வல்லர் என்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வம் மெல்லம றைந்து நாடொறும் மாறிவந்(து)
ஒல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னினார்,தில்லை மன்னினார். 6

இன்ன ஆறுவ ளம்சு ருங்கவும் எம்பி ரான்இளை யான்குடி
மன்னன் மாறன் மனம்சு ருங்குதல் இன்றி உள்ளன மாறியும்
தன்னை மாறிஇ றுக்க உள்ளக டன்கள் தக்கன கொண்டுபின்
முன்னை மாறில்தி ருப்பணிக்கண் முதிர்ந்த செய்கையர் ஆயினார். 7

மற்ற வன்செயல் இன்ன தன்மைய தாக மால்அயன் ஆனஅக்
கொற்ற ஏனமு மன்ன மும்தெரி யாத கொள்கையர் ஆயினார்
பெற்றம் ஊர்வதும் இன்றி நீடிய பேதை யாளுடன் இன்றிஓர்
நற்ற வத்தவர் வேட மேகொடு ஞாலம் உய்ந்திட நண்ணினார். 8

(வேறு)

மாரிக் காலத் திரவினில் வைகிஓர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைத்தபின் பண்புற
வேரித் தாரன் விருந்தெதிர் கொண்டனன். 9

ஈர மேனியை நீக்கி,இ டங்கொடுத்(து),
ஆர இன்னமு தூட்டுதற் காசையால்
தார மாதரை நோக்கி,"த போதனர்
தீர வேடசித் தார் செய்வ தென்?"என, 10

"நமக்கு முன்பிங்கு ணவிலை ஆயினும்,
இமக்கு லக்கொடி பாகர்க்கி னியவர்
தமக்கு நாம்இன்ன டிசில்த கவுற
அமைக்கும் ஆறெங்ங னே!அணங் கே!"என, 11

மாது கூறுவள் : "மற்றொன் றும் காண்கிலேன்.
ஏதி லாரும்இ னித்தரு வார்இல்லை.
போது வைகிற்று ; போம்இடம் வேறிலை,
தீது செய்வினை யேற்கென்செ யல்?"என்று, 12

"செல்லல் நீங்கப் பகல்வித்தி யசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக்கொ டுவந்தால்,
வல்ல வாறமு(து) ஆக்கலும் ஆகும்; மற்(று)
அல்ல தொன்றறி யேன்,"என்ற யர்வுற, 13

மற்றம் மாற்றம் மனைவியார் கூறமுன்
பெற்ற செல்வம்எ னப்பெரி(து) உள்மகிழ்ந்(து),
உற்ற காதலி னல்ஒருப் பட்டனர்,
சுற்று நீர்வயல் செல்லத்தொ டங்குவார். 14

பெருகு வானம்பி றங்கம ழைபொழிந்(து)
அருகு நாப்பண்அ றிவருங் கங்குல்தான்
கருகு மையிரு ளின்கணம் கட்டுவிட்(டு)
உருகு கின்றது போன்ற(து) உலகெலாம். 15

எண்ணும் இல்வுல கத்தவர் யாவரும்
துண்ணெ னும்படி தோன்றமுன் தோன்றிடல்
வண்ணம் நீடிய மைக்குழம் பாம்என்று
நண்ணல் செய்யாந டுஇருள் யாமத்து, 16

உள்ளம் அன்புகொண்(டு) ஊக்க,ஓர் பேர்இடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்உ றங்கும்வ யல்புகப் போயினர்
வள்ள லார்இளை யான்குடி மாறனர். 17

காலி னல்தட விச்சென்று, கைகளால்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரிஇ டாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச்சு மந்தொல்லை மீண்டனர். 18

(வேறு)

வந்தபின் மனைவி யாரும் வாய்தலின் நின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி, நீரில் சேற்றினை அலம்பி ஊற்றி,
"வெந்தழல் அடுப்பின் மாட்ட விறகில்லை," என்ன, மேலோர்
அந்தமில் மனையில் நீடும் அலக்கினை அறுத்து வீழ்த்தார். 19

முறித்தவை அடுப்பின் மாட்டி, முளைவித்துப் பதம்முன் கொள்ள
வறுத்தபின் அரிசி ஆக்கி, வாக்கிய உலையில் பெய்து,
வெறுப்பில்இன் அடிசில் ஆக்கி, மேம்படு கற்பின் மிக்கார்,
"கறிக்கினி என்செய் கோம்?" என்(று) இறைஞ்சினர் கணவனரை.

வழிவரும் இளைப்பி னோடும் வருந்திய பசியினாலே
அழிவுறும் ஐயன் என்னும் அன்பினில் பொலிந்து சென்று,
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க, 21

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிகள் ஆய்ந்து,
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினில் வேறு வேறு கறிஅமு(து) ஆக்கிப் பண்டை
நினைவினால் குறையை நேர்ந்து, திருஅமு(து)அமைத்துநின்று,

கணவனார் தம்மை நோக்கிக் கறிஅமு தான காட்டி,
"இணையிலா தவரை ஈண்ட அமுதுசெய் விப்போம்," என்ன,
உணர்வினால் உணர ஒண்ணா ஒருவரை உணர்த்த வேண்டி,
அணையமுன் சென்று நின்றங் கவர்துயில் அகற்றல் உற்றார்.

"அழுந்திய இடருள் நீங்கி அடியனேன் உய்ய, என்பால்
எழுந்தருள் பெரியோய்! ஈண்ட அமுதுசெய் தருள்க," என்று
தொழும்பனார் உரைத்த போதில் சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும் தொண்டரும் திகைத்து நின்றார்.

மாலயற்(கு) அரிய நாதன் வடிவொரு சோதி ஆகச்
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் தான்ம கிழ்ந்தே
ஏலவார் குழலாள் தன்னோ(டு) இடபவா கனனாய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி, 25

"அன்பனே! அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெருந் தலத்தை எய்தி, இருநிதிக் கிழவன் தானே
முன்பெரு நிதியம் ஏந்தி மொழிவழி ஏவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க," என்றே அருள்செய்தான் எவர்க்கும் மிக்கான்.

—சேக்கிழார்

## 3. பாரதம்

### ஆரணிய பருவம்

### அருச்சுனன் தவநிலைச் சருக்கம்

(அருச்சுனன் தவநிலை கண்டு மகிழ்ந்து, அவனுக்கு அருள் புரியுமாறு சிவபெருமானார் உமா தேவியாரோடும் வேட்டுவ உருக்கொண்டு தோன்றி, அருச்சுனனைக் கொல்ல வந்த பன்றித் தானவனை அம்பெய்து கொன்றனர். மகவான் மகனும் அப் பன்றிமீது அம்பெய்தனன். அதனைக் காரணமாகக் கொண்டு, சிவபெருமானார் அவனோடும் திருவிளையாடல் புரிய எண்ணிப் போர் தொடுத்தனர்.)

பீலிமுடி யோன்விடு பிறைக்கணையை வேறொரு
பிறைக்கணையி னால்வி லகி,வில்
கோலி,வடி வாளிமழை சிந்தினன்ம ழைக்கரிய
கொண்டலென நின்ற குமரன் ;
மூலிவடி வாம்எயினன் மேல்அவைப டாமல்முனை
மண்மிசை குளிக்க முரணார்
வேலியிடு மாறென விழுந்தனவி ழுந்ததனை
விசயன்நனி கண்டு வெகுளா, 1

வேணிமுடி வேடன்மிசை வேறுமொரு சாயகம்
விடுத்தனன்; விடுத்த கணைவில்
நாணியற முன்பினொடு பின்புதொடு கின்றகணை
நடுவண்அற வெட்டு தனுமே,
கோணியஇ ளம்பிறைமு டித்தவன்வெ குண்டுபல
கோள்கள்விட, இந்த்ர குமரன்
பாணியுட னேதொடை நடுங்கிஅயல் நின்றதொரு
பாதவம் மருங்க ணுகினான். 2

கோண்டதவ மேதனம் எனப்புரியும் வில்லிமெய்
குலைந்தயரு கின்ற நிலையைக்
கண்டருகு நின்றஇம வான்மகள்உ ரைக்க,மிகு
கருணையொ டிரங்கி அவனைப்
பண்டுதவ மேபுரிஇ ளைப்பறம னத்தின்மிகு
பரிவுடையன் ஆகி வெகுளா,
எண்டிசையும் வென்றனல்அ ளித்தசிலை நாணிஅற
எயினர்பதி எய்த னன்அரோ. 3

உழுந்துருளும் எல்லைதனில் வில்லின்நெடு நாண்அற
உரத்தொடெதிர் ஓடி, வரிவில்
கழுந்துகொடு மாமுடியில் மோதுமுன்இ ழுந்ததுயர்
கண்ணிபடு பீலி மதியின்
கொழுந்தமுது சோரவிட, நாகர்சுடி கைத்தலை
குலைந்துமணி சிந்த, நதியாள்
எழுந்துதடு மாறி அகல் வானில்உற, வேடனும்
இளைத்தவசம் உற்ற னன்அரோ. 4

விண்ணில்உறை வானவரில் யாரடிப டாதவர்?
விரிஞ்சன் முதலோர் உததிசூழ்
மண்ணில்உறை மானவரில் யாரடிப டாதவர்?
மனுக்கள்முத லோர்கள் அதலக்
கண்ணில் உறை நாகர்களில் யாரடிப டாதவர்கள்?
கட்செவிம கீபன் முதலோர்
எண்ணில்பல வாம்உயிர்கள் யாஅடிப டாதன?
இருந்துழிஇ ருந்து ழிஅரோ. 5

வேதம்அடி உண்டன; விரிந்தபல ஆகம
விதங்கள்அடி உண்ட ன;ஒரைம்

பூதம்அடி உண்டன; விநாழிகைமு தற்புகல்செய்
பொழுதொடுச லிப்பில் பொருளின்
பேதம்அடி உண்டன; பிறப்பிலி இறப்பிலி
பிறங்கல்அர சன்தன் மகளார்
நாதன்அம லன்சமர வேடவடி வம்கொடு
நரன்கைஅடி யுண்ட பொழுதே. 6

மல்லமர்தொ டங்கிஇவர் இருவரும்வெ குண்டுபொர
மாதிரமும் மாநி லமுமேல்
எல்லையும்அ திர்ந்துசுழல் கின்றபொழு தத்திமைய
இன்பமயில் கேள்வன் வெகுளா,
நல்லிசைபு னைந்தமணி நூபுரவி சாலஒளி
நண்ணுபத நாள்ம லரினால்
வில்லியரில் எண்ணுதிறல் வில்லுடைய காளைதனை
விண்ணின்உற வீசி னன்அரோ. 7

விண்ணவர்தம் ஊர்புகுத விண்ணவர்பி ரான்மதலை
விசையுடன்எ ழுந்து, முகில்போல்
மண்ணினிடை வீழ்தருமுன் மார்பகலம் அல்லதை
வயங்குபுயம் என்று தெரியான்
எண்ணரிய ஞானஒளி ஆகிவெளி யாகிவரும்
எயினர்பதி யான கருணைப்
புண்ணியன்ம கிழ்ந்துருக நின்றுலியு டன்பழைய
பூசல்பொர எண்ணி எதிர்வான்: 8

வெய்யகண நாதர்,கண தேவர்விபு தாதியர்,
விரிஞ்சி,சிவ யோகி யர்,அருஞ்
செய்யசுட ரோன்,அளகை ஆதிபதி, கின்னரர்கள்,
சித்தர், பல சார ணர், மணிப்

பையரவின் ஆடி, புரு கூதன் இவர் சூழ்தரவொர்
பச்சைமயில் பாதி யுடனே
துய்யவிடை மீதொரு செழுஞ்சுடர் எழுந்தது
தொழும்தகைய தாகும் அளவோ ? 9

கைவிலுட னேஎயினர் கோடிபலர் சூழ்வரக்
கன்னிமயில் பின்னர் வரவே
தெய்வமறை ஞானிகள்தொ டர்ந்துவர வந்துபொரு
செய்யசிவ வேடன் முடிமேல்
சைவமுறை யேஇறைவர் தண்மலரி னோடறுகு
சாத்திஒளிர் நாள்ம லரெலாம்
மெய்வடிவு கொண்டனைய கரியதவ வேடன்இணை
விழிமலர் பரப்பி மகிழா, 10

தும்பைவகை மாலைசெறி வில்வமொடு கொன்றைமலர்
சூதம்அறு கேக மழ்தரும்
செம்பவள வேணிமிசை திங்கள்நதி சூடிஅருள்
செம்பொன்வட மேரு அனையான்,
உம்பர்மணி யாழினெடு தும்புருவும் நாரதனும்
உருகிஇசை பாட, அருள்கூர்
அம்பையுட னேவிடையின் மீதொளிர நின்றதனை
அஞ்சலிசெய் தன்பொ டுதொழா, 11

(வேறு)

ஆடினன், களித்தனன், அயர்ந்து நின்றனன்,
ஓடினன், குதித்தனன், உருகி மாழ்கினன்,
பாடினன், பதைத்தனன், பவள மேனியை
நாடினன், நடுங்கினன், நயந்த சிந்தையான். 12

"விழுந்தரு வினையினில் மெலிந்து நாயினும்
அழுந்திய பிறவியின் அயரு வேன்முனம்
செழுஞ்சுடர் மணிப்பணித் திங்கள் மௌலியாய் !
எழுந்தரு ளியஇஃ தென்ன மாயமோ ? 13

"ஆதியே ! அண்டமும் அனைத்து மாய்ஒளிர்
சோதியே! கொன்றைஅம் தொங்கல் மௌலியாய் !
வாதியே! மரகத வல்லி யாள்ஒரு
பாதியே ! பவளமாம் பரம ரூபியே ! 14

"பையரா அணிமணிப் பவள மேனியாய் !
செய்யவாய் மரகதச் செல்வி பாகனே !
ஐயனே ! சேவடி அடைந்த வர்க்கெலாம்
மெய்யனே ! எங்குமாய் விளங்குஞ்சோ தியே ! 15

"முக்கணும், நிலவெழ முகிழ்த்த மூரலும்,
சக்கர வதனமும், தயங்கு வேணியும்,
மைக்கயல் மரகத வல்லி வாழ்வுறு
செக்கர்மெய் வடிவமும் சிறந்து வாழியே. 16

"அன்புறு தருமனுக் கநுசன் ஆயினேன்;
நன்பரம் பொருளுக்கு நண்பும் ஆயினேன்;
பொன்புரை மேனியாய்! போற்றி னேன்உனை;
என்பெருந் தவப்பயன் யார்பெற் றார்களோ?" 17

என்றுகொண் டிம்முறை இவன்இ யம்பவே
மன்றல்அம் கொன்றைஅம் மாலை மௌலியான்,
ஒன்றிய தவம்புரி உம்பர் தம்பிரான்
தன்திரு மதலையைத் தழுவி னான்அரோ. 18

தழுவினன் பெருந்துயர் அகற்றித் தண்ணளி
பொழிதரு கண்ணினன் புரக்கும் சிந்தையன்
அழிவற ஒழிவற அமர்ந்த சோதியன்
பழுதறு மொழிசில பகர்ந்து தேற்றினன்: 19

"சூதினில் யாவையும் தோற்றுக் கானிடை
ஏதிலர் போலநீர் இளைத்து வாடினீர்.
வாதுசெய் புலன்களை அடக்கி மண்ணின்மேல்
நீதவம் புரிந்தமை நினையல் ஆகுமோ? 20

"மூகன்என் றுரைக்கும்அம் மூக தானவன்
வேகமோ டேனமாய் விரைவில் வந்தனன்,
நாகவெங் கொடியவன் நவின்ற வாய்மையால்
யோகுசெய் உனதுயிர் உண்ண எண்ணியே. 21

"வந்தவன் முந்துமுன் மங்கை தன்னுடன்
இந்தவெற் புறைதரும் எயின வேடமாய்ச்
சுந்தர மரகதச் சோதி வீரனே!
அந்தவல் அசுரனை அம்பின் வீழ்த்தினேன். 22

"நின்னுடன் அமர்செய்து, நின்வில் நாண்அறுத்(து),
அந்நெடு வில்லினால் அடியும் உண்டனன்;
உன்னரு மல்லினால் உதையும் உண்டனன்;
என்னினி உன்கருத்(து)?" என்று கூறினன். 23

அந்தவில் விசயனும் அரன்ப தம்பணிந்(து),
"எந்தை!பா ரதஅமர்க் கிசைந்த வீரர்மெய்
சிந்தநின் பேர்பெறு தெய்வ வாளியைத்
தந்தருள்," என்றனன் தவத்தின் மேல்நின்றான். 24

ஐயனும் அம்மையோ டருள்பு ரிந்து,பின்
வெய்யபொன் தூணியும், வில்லும், மந்த்ரமும்,
துய்யபா சுபதமெய்த் தொடையும், முட்டியும்,
ஒய்யென நிலையுடன் உதவி னன்அரோ. 25

பெற்றனன் விசயனும்; பேயும், பூதமும்,
சுற்றிய கணங்களும், சுருதி ஓசையும்,
வெற்றிகொள் பெற்றமும் விரைந்து சூழவே
கற்றைஅம் சடையவன் கயிலை ஏகினன். 26

ஏகிய பின்னர்ஆ யிரங்கண் நாதனும்
மோகர துந்துபி முழங்கத் தேரின்மேல்
நாகரும் முனிவரும் நண்ணி வாழ்த்தவே
வாகைகொள் விசயனை வந்து புல்லியே, 27

“நீபுரி தவப்பயன் நீடு வாழியே.
சாபமும், தூணியும், சரமும் வாழியே.
தீபமெய் ஒளியுடன் சேர்ந்து போர்செயும்
மாபெரு நீலமெய் வாழி, வாழியே.” 28

என்றுகொண் டிணையடி இறைஞ்சும் மைந்தனைத்
தன்திருத் தேரின்மேல் தாழ்ந்த கைகளால்
ஒன்றிய உவகையோ டேற்றி, உம்பர்கோன்
சென்றனன் தன்பெருந் தெய்வ வானமே. 29

—வில்லிபுத்தூராழ்வார்

# 4. கந்த புராணம்

## அசுர காண்டம்

### மார்க்கண்டேயப் படலம்

#### தரும தத்தனும் இரச வாதியும்

மாவ தத்தினை இழைத்திடும் பூட்கையின் மதநீர்
காவ தத்தினும் கமழ்தரு கலிங்கநாட் டதன்பால்
ஆவ(து) அத்தம்நேர் மாக்கள்வாழ் அரிபுரம் அதனில்
தேவ தத்தன்என் றுளன்ஒரு வணிகரில் திலகன். 1

தவத்தின் அன்னவன் பெறுமகன் தருமதத் தன்எனப்
புவிக்கண் மேலவர் புகழ்செய அறம்புரி புகழோன்;
கவற்சி இன்றியே மூவகைப் பொருளையும் காண்போன்;
உவப்பு நீடிய இருநிதிக் கிறையினும் உயர்ந்தோன்; 2

தந்தை அன்னையும் இறத்தலும், தமியனே ஆகி,
சிந்தை வெந்துயர் உழந்து,பின் ஒருவகை தேற,
அந்த வேலையில் அவன்பெருந் திருவினை அகற்ற,
வந்து தோன்றினன் மனம்மருள் செய்வதோர் வாதி. 3

முண்டி தப்படு சென்னியன், தாதுவின் முயங்கு
குண்ட லத்தினன், கோலநூல் மார்பினன், நீற்றுப்
புண்ட ரத்தியல் நெற்றியன், கஞ்சுகன், புதியோன்,
கண்டி கைக்கலன் புனைந்துளோன், வேத்திரக் கரத்தோன். 4

அவனைக் கண்டனன், அடிமுறை வணங்கினன், அருவாம்
சிவனைக் கண்டனன் ஆம்எனப் பெருமகிழ் சிறந்தான்.
"புவனிக் குள்ளவர் என்னினும், சாலவும் புதியர்
தவமிக் கோர்இவர்," என்றுகொண் டுறையுளில் சார்ந்தான். 5

பொன்ன ருங்கலம் திருத்துபு குய்யுடைப் புழுக்கல்
நன்ன லம்பெற அருத்தினன், முகமனும் நவின்றான்.
பின்னர் அன்னவன் தனைஎதிர் நோக்கினன், "பெரியோய்!
என்இ வண்வந்த(து)?" என்றனன் வணிகருக் கிறைவன். 6

"ஈசன் தந்திடு விஞ்சைஒன் றெமக்குள தெவர்க்கும்
பேசும் தன்மைய தன்றது; குரவர்பால் பெரிது
நேசம் பூண்டவர்க் குரைப்பது; நெஞ்சினில் சிறிதும்
மாசின் றாயநிற் குணர்த்துவன் அஃ(து)," என வகுத்தான். 7

"சரத மேஇது சம்புவின் வந்ததோர் தகைசால்
இரதம் உண்டது பொன்எனச் செய்தனம். எமக்கோர்
அரிதும் அன்றது போல்வன பலஉள. அவைதாம்
விரத மாதவர் அல்லது யார்கொலோ விரும்பார்? 8

"காரி ரும்பையும் நாகத்தில் காட்டுதும்; கரிய
சீரி ரும்பினைப் பொன்என உரைபெறச் செய்வாம்;
மேரு வும்கயி லாயமும் என்றிரு வெற்பை
யாரும் நோக்கவே காட்டுதும்; இவைநமக் கரிதோ? 9

"எய்தும் ஈயமும் இரதமும் வெள்ளிய தெனவே
செய்தும்; அன்றியும், வங்கத்தில் செம்பொனும் தெரிப்பாம்;
நொய்தின் அன்னது வலிஉறக் காட்டுதும்; நவலும்
கைத வம்பயில் மாக்களுக் கினையன கழறும். 10

"இரும்பி னில்செம்பு வாங்குவம்; ஈயமும் அற்றே;
வரம்பி லாததோர் தரணிஅண் டங்களை மரபின்
அரும்பொன் வண்ணம தாக்குவம்; வல்லவா றறைய
விரும்பி னும்எனில், யாண்டுமோர் அளப்பில வேண்டும். 11

"ஒன்று கோடிபொன் ஆக்குவம்; கோடிய துளவேல்,
குன்று போலவே கோடியில் கோடிசெய் குவமால்;
நின்ற னக்குள பொருளெலாம் தருதியேல், நினது
மன்றல் மாளிகை நிதிக்கிடம் இல்லென வகுப்பாம்." 12

என்ன வேமொழி சோரனை வணங்கினன், இமைப்பில்
முன்னர் உள்ளதும், தான்தன துரிமையால் முயலப்
பின்னர் எய்திய நிதியமும், பேழையா னவற்றில்
மன்னு பூண்களும் கொணர்ந்தனன், முன்புற வைத்தான். 13

வைத்த மாநிதி நோக்கலும், "வணிகரில் திலகர்
உய்த்த செல்வமும் இதுகொலோ? ஓ!" என உரையா,
கைத்த லம்கொடு கைத்தலம் புடைத்துடுக் கணங்கள்
நத்த வேலையில் ஒருங்குபட் டால்என நகைத்தான். 14

"இந்த நின்பொருள் நம்முடை விஞ்சையில் இறைக்கும்
வந்தி டாது;நாம் உருக்குறு முகந்தனில் வழுவிச்
சிந்து கின்றதற் கிலைஇது. நமதுபின் திரியின்,
அந்த மில்பொருள் கொடுக்குவம்;வைத்தி," என் றறைந்தான்.

"முனியல், ஐய! நீ வேண்டிய பெருநிதி முழுதும்
இனிது நாடியே கொணருவன்; இருத்தி," என் றுரைத்து,
புனையும் ஆடையும், நிலங்களும், மணிகளும், பூணும்,
மனையும், மாக்களும் பகர்ந்தனன் நிகர்இலா வணிகன். 16

போரும தத்தினை இழைத்திடும் மருப்புயர் புழைக்கைப்
பெரும தக்கரி என்னவே மயங்கினன் பெரிதும்
வருவ(து) அத்தம்என் றறத்தையும் பகர்ந்து,மெய் வணிகன்
தரும தத்தனும் பெயரினை நிறுவினன் தரைமேல். 17

இத்தி றத்தினில் தேடிய பெருநிதி எனைத்தும்
கைத்த லம்கொடு தாங்கியே கரவன்முன் காண
வைத்து நிற்றலும், மகிழ்ந்தனன், அவையெலாம் வாங்கி,
மொய்த்த செங்கனல் தீயிடை உருக்குதல் முயன்றான். 18

திரட்டி யாவையும் ஓர்உரு ஆக்கினன், செழும்பொன்
இரட்டி தாக்கிய இரதமாங் கொருசிலை இட்டு,
மருட்டி, ஆடகம் முழுவதும் உரைத்தவை வலிதா
உருட்டி, மட்பெருங் குகையினில் மருந்தைஉள்உறுத்தான்.

பண்உ றுத்திய கனகம்உள் இட்டதன் பாலும்
எண்உ றுத்திய மிசைக்கணும் களங்கமொன் றிட்டு,
மண்உ றுத்தி,நல் துகில்கொடு பொதிந்தனன், மருங்கில்
கண்உ றுத்திய செந்தழற் புடைமிசை கரந்தான். 20

நூற்று நான்கொடு நான்குகுக் குடபுடம் நொய்தில்
வீற்று வீற்றதா இட்டது நோக்கினன், "மிகவும்
மாற்று வந்தது; பழுக்குமோர் வராகியில்; மருளேல்;
காற்றி லாததோர் உறையுள்காட்(டு)," என்றனன் கரவன். 21

சேமம் செய்ததோர் உறையுளைக் காட்டலும், சென்று,
வாமம் செய்ததோர் இந்தனக் குவால்மிசை மறவோர்
ஈமம் செய்தசெந் தழல்கொடு வராகிமேல் இட்டுத்
தூமம் செய்தனன், அங்கியும் அவன்எதிர் துரந்தான். 22

ஓங்கி நாட்டநீர் பொழிதர, ஆருயிர் உலைய,
வீங்கு கின்றமெய் வெதும்புற, எங்கணும் வியர்ப்ப,
மூங்கை ஆம்என மொழிகிலான், போவதும் முயலான்,
பாங்கி ருந்திடு வணிகர்கோன் பட்டதார் பகர்வார்? 23

எல்லை அன்னதில் பொதிந்திடு பொற்குகை எடுத்து,
மெல்லெ னத்தன தாடையில் கரந்தனன் வெய்யோன்;
வல்லை அக்குகை போலஒன் றிருந்தது மருங்கில்
செல்ல வைத்தனன், அழற்பெரும் புகையையும் தீர்த்தான். 24

"'தத்த! இக்குகை நின்கையில் தாங்கினை, தழல்மேல்
வைத்தி,'' என்றனன். அவன்அது புரிதலும், மரபின்
அத்த கும்செயற் குரியன யாவையும் அமைத்து,
வித்த கம்பெறச் சேமியா, ஒருசெயல் விதித்தான்: 25

(வேறு)

"உண்டி இகந்துறை ஆடலை ஆகி,
மண்டிணி வைய மதில்பிறர் தம்மைக்
கண்டிடல் இன்று, கருத்தினில் எம்மைக்
கொண்டிரு முப்பகல் கோதில்கு ணத்தோய்! 26

"நேய்கமழ் செஞ்சடை நீலிதன் முன்னா்
மொய்கனல் வேள்வி முடித்திடல் உண்டால்;
செய்கடன் அன்னது தீர்த்தபின் நாலாம்
வைகலின் ஏகுதும் மற்றிவண்,'' என்றான். 27

"அம்முறை செய்(க)''என ஆங்கவன் அடியை
மும்முறை தாழ்ந்து முதற்பெரு வணிகச்
செம்மல் அவன்புடை சென்றிலன், நின்றான்.
மைம்மலி சிந்தையன் வல்லை அகன்றான். 28

காவதம் ஓர்ஒரு கன்னலின் ஆகப்
போவது செய்து, புறத்துரு மாறி,
வாவினன், வேறோர் வளாகம துற்றான்.
ஏவலின் வைகினன் இத்தலை வணிகன். 29

"தோகையில் அன்பினுல் இறைவன் துஞ்ச,நீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
வகையில் வஞ்சனுய் அரசு வெளவயான்
பகைவ னேகொலாம்? இறவு பார்க்கின்றேன்! 6

"உந்தை தீமையும், உலகு ருதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை! நீங்கமீண் டரசு செய்(க)"எனச்
சிந்தை ஆவதும் தெரியக் கூறினன். 7

சோற்ற வாசகத் துணிவு ணர்ந்தபின்,
"இற்ற தோஇவன் மனம்?"என் றெண்ணுவான்,
"வெற்றி வீர!யான் விளம்பக் கேள்:"என,
முற்ற நோக்கினன், மொழிதல் மேயினன்: 8

"முறையும், வாய்மையும், முயலும் நீதியும்,
அறையும் மேன்மையோ டறனும் ஆதியாம்
துறையும், யாவையும் சுருதி நூல்விடா
இறைவர் ஏவலால் இயைவ காண்டியால். 9

"பரவு கேள்வியும், பழுதில் ஞானமும்,
விரவு சீலமும், வினையின் மேன்மையும்,
உரவி லோய்!தொழற் குரிய தேவரும்
குரவ ரேஎனப் பெரிது கோடியால். 10

"அந்த நற்பெருங் குரவர் ஆர்எனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்,
தந்தை தாயரென் றிவர்கள் தாம்அலால்,
எந்தை கூறவே றெவரும் இல்லையால். 11

"தாய்வ ரம்கொளத் தந்தை ஏவலால்
மேய நம்குலத் தருமம் மேவினேன்.
நீவ ரம்கொளத் தவிர்தல் நீர்மையோ ?
ஆய்வ ரும்புலத் தறிவு மேவினாய்! 12

"தனையர் ஆயினார் தந்தை தாயரை
வினையின் நல்லதோர் இசையை வேய்தலோ,
நினைய லோ,விடா நெடிய வன்பழி
புனைத லோஜய! புதல்வ ராதல்தான் ? 13

"வரனில் உந்தைசொல் மரபி னால்உடைத்
தரணி நின்னதென் றியைந்த தன்மையால்,
உரனில் நீபிறந் துரிமை ஆதலால்,
அரசு நின்னதே. ஆள்க," என்னவே. 14

"முன்னர் வந்துதித் துலக மூன்றிலும்
நின்னை ஒப்பிலா நீபி றந்தபார்
என்ன தாகில்,யான் இன்று தந்தனென்
மன்ன ! போந்துநீ மகுடம் சூ(டு),"என, 15

"மலங்கி வையகம் வருந்து வைகல்நீ
உலங்கொள் தோள்உனக் குறுவ செய்தியோ ?
கலங்கு றுவணம் காத்தி போந்(து)," என,
பொலங்கு லாவுதாள் பூண்டு வேண்டினான். 16

"பசைந்த சிந்தைநீ பரிவின் வையம்என்
வசம்செய் தால்அது முறைமை யோ? வசைக்(கு)
அசைந்த எந்தையார் அருள, அன்றுநான்
இசைந்த ஆண்டெலாம் இன்றொ டேறுமோ ? 17

"வாய்மை என்றும்ஈ தன்றி வையகம்
தூய்மை என்றும்ஒன் றுண்மை சொல்லுமோ ?
தீய்மை தான்அதில் தீர்தல் அன்றியே
ஆய்மெய் ஆகவே றறையல் ஆவதே ?" 18

"எந்தை ஏவ,ஆண் டேழொ டேழெனு
வந்த காலம்நான் வனத்துள் வைக,நீ
தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்
அந்த நாள்எலாம் ஆள்என் ஆணையால்: 19

(வேறு)

"மன்னவன் இருக்க ஏயும் மணிஅணி மகுடம் சூடு
கென்னயான் இயைந்த தன்னுன் ஏயது மறுக்க அஞ்சி.
அன்னது நினைந்து, நீஎன் ஆணையை மறுக்க லாமோ?
சொன்னது செய்தி ஐய! துயருழந் தயரல்," என்ருன். 20

—கம்பநாடர்

# உரைநடைப் பகுதி



## 1. ஏயர்கோன் கலிக்காம நாயனுர்

**வ**ளப்ப மிக்க சோழ நாட்டிலே வளம் பெருக்குவது காவிரி யாறு. அவ்வாற்றின் வடகரையிலே திருப்பெருமங்கலம் என்னும் பெயரையுடைய ஓர் அணி நகர் இருக்கிறது. அப் பெருநகரில் வாழ்வார் பலர், செல்வ மிக உடையோர். அவ் வூரில் வாழ்ந்த பல குடிகளுள் ஏயர்கோக்குடி என்பதும், ஒன்று. அது சோழ மன்னர்களுக்குச் சேனைத் தலைவராம் உரிமையுடையது. அக்குடி மிகவும் தொன்மையானது.

வேளாண்மையிலுயர்ந்த அப்புகழ்க்குடியிலே கலிக்காமர் என்பவர் ஒருவர் தோன்றினுர். அவர் இறைவ ரடிக்குத் தொண்டு பல புரியும் ஒழுக்கத்திற் சிறந்தார். அவர், தாம் பிறந்த திருப்பெருமங்கல நகருக் கணித்தாயுள்ள திருப்புன் கூரில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவலோக நாத ரிடம் மெய்யன்பு கொண்டு, அவர் கோவிலுக்குத் திருப்பணி கள் அளவிலாதன இயற்றினுர். அவர், தமக்கு நிதியமாவன திருநீறு உகந்தணிந்த பெருமானுர் பொன்னடிகளே எனும் உண்மையுணர்ந்து, அவைகளை நித்தலும் இடையருது போற் றிப் புகழ்ந்து வாழ்ந்திருந்தார்.

தம்பிரான் தோழர் நெஞ்சில் நடுக்கம் இன்றி நின்று தம் மனைவியாராகிய பரவையார்பால் தம்பிரானுரைத் தூது விட் டார் என்னும் செய்தியை ஏயர்கோன் கலிக்காமர் கேட்ட னர்; கேட்டு மனமிகவெம்பினுர்; அதிசயித்தார்; வெருவினுர். அவர், "உடையானை அடியான் ஏவும் செயல் சால நன்று!

இச்செயலைச் செய்வான் தொண்டனும்! பொறுக்க முடியாத இப்பிழையினைப் பேயனேன் செவியால் கேட்ட பின்னரும் என் ஆவி மாயாதிருந்ததே! தன் மனைவிபா லுள்ள அன்பு தூண்ட, அவளை இணக்குமாறு ஒருவன் கட்டளையிட, அதற்கிணங்கித் தம் சிவந்த அடி மலரிணைகள் நோவத் தரைமேல் நடந்து, தேரோடும் தெருக்களினூடே போவதும் வருவதுமாகி, ஓர் இரவெல்லாம் தூதாகி உழன்றுரே ஒப்பற்ற பெருமானார்! தமக்கு வேறு அடியான் ஒருவனு மின்றி, இவனொருவன் கிடைத்தா னென்று மகிழ்ந்து வந்து, அவர் அவனுடைய வேண்டுதலுக் கிசைந்தால், அவரை ஏவுவது மிக அழகிதே! இத்தீய செயலுக்கு நெஞ்சம் நடுக்குறாத அந்நம்பி ஆரூரனை யான் என் முன் காணும் நாள் எந்நாள்? பெண்ணுக்காகத் தன்னை ஆளுடைய பெருமானாரையே இரவில் தூது போக ஏவி மகிழ்ந்திருந்த அவன் இங்கே வர என் முன் காண்பேனேல், எனக்குத் தீமை யாது விளையுமோ!'' என்று சினமிகக் கொண்டு புலம்பி, மனமுடைந்திருந்தார்.

இவ்வாறு ஏயர்கோன் கலிக்காமர் எண்ணமிட்டிருப்பதை நம்பி ஆரூரர் அறிந்து, "அடியார் அகத்தில் துன்பம் தோன்றத் தீராப்பிழை செய்தேனே! இதற்குத் தீர்வும் உண்டோ!'' என்று கவலை கொண்டு, சிவபெருமானார் திருமுன்பு சென்று நின்று, தமது குறையை விண்ணப்பம் செய்தார்.

நாடோறும் அவர் பணிந்து குறை யிரப்ப, நாதனார் அதனைக்கேட்டுத் தம் பெருந்தொண்ட ரிருவரையும் ஒருமைப்பாடுடன் பழகும் நண்பராக்க விரும்பினார். அதற்காக அவர் ஏயர்கோன் கலிக்காமருக்கு உடலை வாட்டும் சூலை நோயை அருளினார். அஃது அவரைச் சென்று பற்றியது. அந்

நோய் தமது வயிற்றிற் புகுந்து நெருப்புப் பொறியை வீசும் வேல் குடைவதுபோன்று வேதனையை மேலும் மேலும் செய்ய, அவர் உளமுடைந்து, கீழ் வீழ்ந்தார். "ஏழைகளாகிய எங்களுக்கு நீரே தஞ்சம். இறைவரே, காத்தருளும்,'' என்று அவர் போற்றிசைத்தார். அடியார் அன்பாலுருகுங் கால் தரியாத வள்ளலாகிய கறைமிடற் றண்ணலார் அவர் முன் தோன்றி, "உன்னை வருத்தும் இச்சூலை நோய் நம் வன்றொண்டன் தீர்க்கிலன்றித் தீராது,'' என்று மொழிந்தருளினர். அதனைச் செவியேற்ற அன்பர், "எந்தையீர், என் தந்தையார், அவர் தந்தையார், அவர் தந்தையார்,மற்றும் எம்மைச்சார்ந்த சுற்றத்தா ரெல்லாரும் உமக்கே அடிமை பூண்டு வழிவழித் தொண்டு செய்யும் வாழ்க்கையையுடைய அடியேனை வருத்தும் இச்சூலை நோயை நீவிர் நேற்று வம்புக்கு ஆண்டுகொண்ட ஒருவனே தீர்ப்பான்? அவன் வந்து தீர்ப்பதிலும் இது தீராதொழிந்து, அடியேனை வருத்துவதே நன்றாம். இறைவரே, நீர் செய்யும் இச்செயலின் பெருமையை அறிந்தார் யாரே! அவ்வன்றொண்டனுக்காகும் நன்மையையே செய்தீர்,'' என மறுமொழி புகன்றார். உடனே சிவனர் திருவுருக் கரந்தார்.

கலிக்காமரை நீங்கிய கடவுளார், தம் தோழர்பால் சென்று, "இன்று நம் ஏவலாலே ஏயர்கோ னிருக்குமிடம் சென்று, அவனை வருத்தும் சூலை நோயைத் தீர்ப்பாயாக,'' என்றருளினர். அவ்வாணையைச் சிரமேற் கொண்ட நாவலூரர் சிந்தை மகிழ்ந்து, புகழ்ந்து, தலைவரடியில் வீழ்ந்து பணிந்தார். பெருமானும் உடன் மறைந்தார். நம்பியாரூரர், நொடிப்பொழுதும் தாமதியாமல், திருவாரூரைவிட்டுப் புறப்பட்டு, ஏவலின் வண்ணம் திருப்பெருமங்கலத்தை

நோக்கி விரைந்து சென்றார். அவர் கலிக்காமரிடத்துத் தாம் கொண்டுள்ள அன்பின் பெருக்கால், அவருடைய சூலை நோயைத் தீர்க்கும்பொருட்டுத் தாம் வருவதைச் சிலரிடம் அவருக்குச் சொல்லி அனுப்பினார்.

கடவுளருளால் தமக்குச் சூலைநோய் வந்ததையும் தமது வேண்டுதலுக் கிணங்கிச் சிவனார் தோன்றித் தமது மனம் வருந்துமாறு இசைத்த மாற்றத்தையும் எண்ணி எண்ணி வருந்தியிருந்த கலிக்காம நாயனார் நெஞ்சம், வன்றொண்டர் வருகையைக் கேட்டதும் துணுக்குற்றது. அப்போது அவர், "எம்பிரானைத் தூதராக ஏவினோன் இந்நோயைத் தீர்க்கும் குற்றம் என்னைச்சேர அவனிங்கு வருகின்றான். யான் செய்வதென்னே அறிகிலேன்! அவனிங்கு வந்து இந்நோயைத் தீர்ப்பதற்கு முன்னர் மாயமாக என்னைப் பற்றி நீங்காது வருத்துகின்ற இக்கொடிய சூலைநோயை இது தங்கும் வயிற்றினோடும் கிழிப்பேன்!" என்று புலம்பினார். உடனே அவர் தம் உடைவாளால் தமது வயிற்றைக் கிழித்தனர். அதனால், அப்பொழுதே அவருடைய உயிரோடு சூலை நோய் தீர்ந்தது.

நினைக்கவும் முடியாத பெருமையையுடைய கலிக்காமர் மனைவியார், தம் கணவனார் இறந்தமை கண்டு, உடனே அவரோடு தாமும் செல்லக் கருதினார். அப்பொழுது அங்கு வந்தார், நம்பியாரூரர் அருகணைந்தமையைப் புகன்றனர். அச்செய்தியை யறிந்த அவ்வம்மையார், அங்கு ஒருவரும் அழுதல் கூடாதென விலக்கி, தம் கணவர் மடிந்த செய்தியை மறைத்து, அங்கு நின்றிருந்த தம் உறவினரை நோக்கி, "நம்பியாரூரர் வரும்பொழுது நமது வீட்டை நன்றாக அலங்கரித்து அவரை எதிர்கொண்டழையுங்கள்," என்று ஏவினர். அவர்கள் தலைவாயிலில் விளக்கேற்றி வைத்து, மலர்

மாலைகளைத் தூக்கி, அணிசெய்து, எதிர்கொள்ளச் சென்ருர்கள். அவர்களைக்கண்டு நம்பியாரூரர் நகைமுகங்கொண்டு, இன்புற்று, உண்மை அன்போடும்வந்து, கலிக்காமருடைய வீட்டினுட்புகுந்து அங்கு அவருக்கென இடப்பெற்றிருந்த உயர்ந்த தவிசின்மேல் முகமலர்ந்திருந்தார். அவர்கள் அவருக்கு இன்சொற்கூறிப் பணிந்து புகழ்ந்தார்கள். அப்புகழுரைகளை அவர் இனிமேதற்று, "என் மனம் மிக வருந்துகின்றது. ஏயர்கோன் கலிக்காமருற்ற சூலைநோயைப்போக்கி அவருடனிருக்க விரும்புகின்றேன்," என்ருர். ஏயர்கோன் கலிக்காமருடைய மனைவியார் ஏவ, வேலைக்காரர்கள் அவரை நோக்கி, "இங்குக் குற்றமொன்றுமில்லை. உடையவர் வீட்டினுள்ளே பள்ளி கொள்ளுகின்ருர்," என்றனர. அவ்வுரை கேட்டு நம்பியாரூரர் மனம் தெளியாமல், "தீமை யொன்றுமில்லையேனும், என்மனம் கவல்கின்றது. ஆதலால், அவரை நான் காணவேண்டும்," என்றருளிச் செய்தார். ஏவலர் அவரை உள்ளே அழைத்துச்சென்று, புண்ணீர் சொரியக் குடர் சரிந்து இறந்து கிடந்த ஏயர்கோன் கலிக்காமரைக் காட்டினர்.

அவரைக் கண்டவுடன் வன்ரெண்டர், நெஞ்சம் துணுக்குற்று, "புகுந்தவாறு மிகநன்று! நானும் இவர் முன்பு இறைவர் பொன்னடியை நண்ணுவேன்," என்று கூறி, ஏயர்கோன் கலிக்காமர் கையிலிருந்த உடைவாளைத் தம்கையிற்பற்றினர். அப்பொழுது சிவபெருமானுருடைய திருவருளினுலே ஏயர்கோன் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து, "உமக்கு நண்பனே ஆகிக் கெட்டேனே!" எனக் கூறி, அவர்கையி லிருந்த வாளினைப் பிடித்துக்கொண்டார். அதுகண்ட நம்பியாரூரர், அவர் காலில் வீழ்ந்து வணங்கினர். கலிக்காமர் வாளினைத் தூர எறிந்துவிட்டுத் தம்பிரான் தோழருடைய திருவடிகளில்

வீழ்ந்து பணிந்தார். பின்னர் இருவருமெழுந்து, ஒருவரை ஒருவர் மார்புறத் தழுவிக்கொண்டு, இணை பிரியா நண்பின ராகி, ஒப்பற்ற மகிழ்ச்சி கூர்ந்து, திருப்புன்கூரை யடைந்த னர்; அடைந்து, கோவிலுட் புகுந்து, பெருமானார் கழலிணை போற்றினர். அப்பொழுது வன்றொண்டர் பெருமானாரை நோக்கி, "திருப்புன்கூர் உள்ளீரே, அந்தணாளராகிய மார்க் கண்டர் உம் அடைக்கலம் புகுத, அவரைக் காப்பது காரண மாக, அவருயிரை வாங்க வந்த காலனுயிரைக் காலால் மிதித்துவாங்கிய உம் வள்ளன்மைகண்டு, அடியேனும் உம்மை யடைந்தேன்; என்னை நமனதமர்வந்து நலியும்போது, 'இவன் என் அடியான்,' எனக் கூறி, விலக்கிக் காத்தருள்வீர். பசுக் களின் பாலைக் கறந்து ஆட்டிய அழகான வெண்மணலா லாகிய சிவலிங்கத்தின்மேற் சென்ற தம் தந்தையாரின் தாள் அற எறிந்த தண்டியடிகளுக்கு உம் சடைமிசை மலர் அருள் செய்தீர். நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தரும், திருநாவுக்கரச ரும், திருநாளைப்போவாரும், கண்ணப்பரும், கணம்புல்லரு மாகிய இவர்கள் குற்றமே செய்யினும், குணமெனக் கருதும் கொள்கையுடையீர். கடலி லெழுந்த நஞ்சினை உண்டு கண் டத்தே வைத்தீர். பித்தரே, உம் சீலங் கண்டு, திருவடி அடைந்தேன்.

"முப்புர மெரித்தபோது பிழைத்த அம்மூவரில் இரு வரை உம் திருக்கோயிலின் வாயிலில் காவலாளர் என்றே விய பின்னர், மற்றொருவனை உம் திருநடனங் கண்டு அதற் கியைய மணி முழா முழக்க அருள் செய்தீர். இலங்கையர் கோனைத் துலங்க மால்வரைக்கீ ழடர்த்திட்டு, அவன் பாட லின் இன்னிசை கேட்டிரங்கி, அவனுக்கு அழகிய வாளோடு நீடிய வாழ் நாளும் கொடுத்தீர். உம் திருவருட் செறிவுகள்

கண்டு, உம் திருவடி அடைந்தேன்," என்று புகழ்ந்து, பாமாலை பாடி, அவ்வூரில் சில பகல் கழித்தார்.

அவ்வூரிலிருந்து நம்பியாரூரர் தம்முடன் நிறைந்த நண் போடு வந்த ஏயர்கோன் கலிக்காமரோடும் புறப்பட்டுத் திரு வாரூரை யடைந்து, பூங்கோயிலமர்ந்த பிரானுர் புனைமலரிணை பணிந்து, போற்றி யிருந்தனர். சில நாட்களின் பின் ஏயர் கோன் கலிக்காம நாயனுர் நம்பியாரூரரிடத்து விடை பெற் றுத் தம்மூரை யடைந்தார். அங்கே அவர் தமக்கு ஏற்ற பல தொண்டுகளும் செய்திருந்து, சிவபெருமானுருடைய திருவருளினுலே அவருடைய பூங்கழலிணைகளைச் சிறப்பி னேடும் சேர்ந்தனர்.

## 2. கோவலன் கதை: பகுதி-1

### மதுரைக் காண்டம்

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் இம்மூவரும் இரவில் உறையூரில் தங்கினர். வைகறை யாமத்தே அவ்வூரை விட்டுப் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்று, ஓர் இளமரச் சோலையின் நடுவ ணிருந்த மண்டபத்தை யடைந்தனர். அங்குத் தம் எதிரே பாண்டியனை வாழ்த்தி ஒரு மறையோன் வருவதைக் கண்டனர். அவன், தான் குடகுமலைப் பக்கத்திலுள்ள மாங் காடு என்னும் ஊரினனென்றும், அரங்கங் காணச் செல்லு கின்றவனென்றும் புகன்றுன். அவர்கள், அவனிடம் உசாவி, மதுரை செல்லும் வழியை அறிந்து, மேற்சென்றுர்கள். அம் மறையோன், தன் வழியே போனுன்.

அவர்கள் முன்போலவே தம் முன்னிருந்த ஊரில்தங்கி, மறுநாட் காலையிற் புறப்பட்டு, வழி நடந்தார்கள்; பின்னர்,

இளைப்பால் வழியில் ஓரிடத்தில் தங்கினார்கள். கோவலன், நீர் வேட்கை மிக்கானாய், பக்கத்திருந்ததொரு பொய்கையை நாடிச் சென்றான். அவன் அக்குளக் கரையை அடைந்த போது அக்காட்டுறை தெய்வம் வயந்தமாலைபோல் உருக் கொண்டு தோன்றி, அவனை மயக்கித் தன் வயப்படுத்து மாறு, "ஐயோ! தலைவரே, நும்மீதுள்ள அன்பின் மிகுதியால், மாதவி மனமிகவாடி, உணவுமுதலியன வெறுத்தாள்; என்னை யும் வெறுத்தாள். அவள் என்னை நோக்கி, "உன்னாலன்றோ என் அன்பர் கோவலனார் திரும்பி வந்திலர்? அன்று நான் மாலையுட்பொதிந்து கொடுத்த ஓலையைக்கொண்டு சென்று நீ அவ்விடம் என்ன வெவ்வுரைகள் கூறினையோ! ஐயோ! அவர் வெறுத்தேகினரே! என் செய்கேன்!" என்று கூறி, என்னைக் கடிந்து ஓட்டினள். நானோ, உம்மைக் கண்டு அடித்தொண்டு செய்து வாழலாமென்று நம் கோவில் நோக்கிப் போந்தேன். போந்த எனக்குச் சிலர் நீவிர் புகார் துறந்து மதுரைநோக்கிச் செல்கின்றீர் எனக்கூறினர். யானோ, மனம்வருந்தி இப்பக்கம் போந்ததொரு வாணிகச் சாத்துடன் கூடி ஓடிவந்தேன். காத் தருள்வீர்!" என்று முறையிட்டது. அதைக் கேட்ட கோவ லன் தான் முன்கண்ட மறையோனால் அத்தகையதொரு தெய் வம் வழியிலுண்டென அறிந்தவனாதலால், அதனைப் போக் குவான் கருதி, அந்தரி மந்திரம் ஓதினான். ஓதலும், அத்தெய் வம் அஞ்சித் தன்னுண்மை கூறி, "நின் மனைவிக்கும் கவுந்தி யடிகட்கும் இச்செய்தியை மொழியாதிருந்தருள்க," என்று இரந்து, தன்னிடம் போயது. கோவலனும் தன் வேட்கை யாற்றித் தண்ணீர் கொண்டுவந்து தன் மனைவியின் வேட்கை யையும் அடிகளின் வேட்கையையுந் தீர்த்தான்.

அவர்கள் மேலும் வழி நடந்து, மறவர் ஊர் ஒன்றை யடைந்தார்கள். அங்கே காளிகோவில் ஒன்று இருந்தது. அக்

காளிக்கு அவ்வூர் மறவர் கூடித் திருவிழாச் செய்து, பலி யிட்டனர். அப்போது சாலினி யென்பா ளொருமாது, அவ் வூர் நடுவாகிய மன்றின்கண்ணே தெய்வமுற்று, மெய்ம்மயிர் சிலிர்த்துக் கைகளை வீசி, அபிநயத்தோடே கூடித் தாளத் துக்கு ஒப்ப அடிபெயர்த்தாடினாள். அங்கே ஒரு புறமிருந்த கண்ணகியைக்கண்ட அப்பெண், 'தமிழ்நாடு முழுவதும் தன் வசப்பட்டு ஒழுகும்படி செய்யவல்ல தெய்வமாவாள் இவள்,' என்று புகழ்ந்துரைத்தாள். அம்மிகையுரை கேட்ட கண்ணகி நாணினள். கோவலன் கவுந்தியடிகளை நோக்கி, 'வெயிலின் கொடுமை மிகுந்திருத்தலால், இனி நாம் இரவிலேயே வழி நடத்தல்வேண்டும்,' என்றனன். அவ்வாறே அவர்கள் அன்று தொடங்கி இரவிலேயே வழி நடந்தார்கள்.

அவர்கள் ஒழுக்கந் தவறி வாழும் ஒரு சிற்றூரடைந்து, அவ்வூரினுட் புகாது, வெளியிலிருந்ததொரு கோவிலில் தங்கினார்கள். கோவலன் காலைக் கடன் கழித்தற்காக ஒரு பொய்கையை யணுகினான். அங்கே அவன் மாதவி ஈந்த ஓலை யைக் கொண்டுவந்த கோசிகன் என்பானைக் கண்டு, அவனால் தன்தாய்தந்தையரும் மாதவியும் படும்பாட்டறிந்து, மாதவியின் ஓலையைப் பிரித்துப்பார்த்து, அவள் மனநிலையை யோர்ந்து, மிக வும் துன்புற்றவனாய், மாதவியைப் பற்றித் தான் நினைத்தது பெருந்தவறு என்றுணர்ந்தான். உடனே அக்கோசிகனைப் புகாரிற்போய் யாவருக்கும் தேறுதல் கூறுமாறு விடுத்தான்.

அங்கிருந்து மீண்டு, அடிகளோடும் மனையாளோடும் புறப்பட்டு, வைகையைப் புணையேறிக் கடந்து, வைகறை யில் அதன் தென்கரையை யடைந்து, மதுரைமூதூரின் புற மதிலின் பக்கத்திலிருந்த முனிவர்வாழிடமாகிய புறஞ்சேரிக் கண்ணே புக்கான். புக்கவன், அடிகளை நோக்கிப் பணிந்து,

அப்பேரூரிலுள்ள வணிகரைக் கண்டு தன் தன்மை யுணர்த்தி வருவதற்கு விடை தர வேண்டினன். அடிகளும் அவனை நோக்கி, "அறிவுடையார் யாவரும் தீவினைப் பயனாக வரும் துன்ப நுகர்ச்சிக்காக மனம் வருந்தார். இவ்வுலக வாழ்வெல்லாம் துன்பமே. இத்துன்பத்தின் வாய்ப்பட்டோர் எண்ணிறந்தோர். ஆதலின், நீ வருந்தாதே. ஊர் கண்டு மீளக் கடவாய்,'' என்றனர். கோவலனும் மதுரைபுக்கு, அவ்விடத்தே பல தெருக்களும் கண்டு வியந்து, அதனால் விளைந்த மகிழ்ச்சியில் ஈடுபட்டவனாய்த் தான் வந்த செயல் மறந்து, மீண்டும் புறஞ்சேரி யடைந்தான்.

அங்கே அவன் தான் மதுரையில் கண்ட காட்சிகளைக் கவுந்தியடிகளுக்கு விவரித்துக் கூறினன். அப்போது காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்மேற்கிலே நான்கு நாழிகைத் தூரத்திலுள்ள தலைச்செங்கோடு என்னும் ஊரினனாகிய மாடலன் என்னும் மறையோன், போதியமலையை வலங்கொண்டு, குமரியாடி, மீண்டு வரும்போது வழி வந்த களைப்பு நீங்கும் பொருட்டு அவ்விடத்தே புகுந்தான். அவனைக் கண்ட கோவலன், சென்று அவனடி வணங்கினன். அவ்வந்தணன் அவனை நோக்கி, "நீ இவ்விடம் வருவதற்குக் காரணம் யாது? முன் நீ மாதவியோடிருக்கும்போது உனக்கு அவள்பால் ஒரு மகள் பிறந்தனளாக, நீ அம்மகளுக்குப் பேரிடும்போது, 'எம் குல தெய்வமாகிய மணிமேகலையின் பெயரையே இட வேண்டும்,' என்று சொல்லக்கேட்ட பெண்டிர் யாவரும் அப்பெயரான் அவளை அழைத்து வாழ்த்தலும், செங்கையாற் செம்பொன்னை மகிழ்ந்து நீ பொழியாநிற்க, அப்போது அது பெற வந்த முதியோனாகிய அந்தண னொருவனை ஒரு மத யானை கைப்பற்றியதாக, அவ்யானையின் கொட்டத்தை

யடக்கி அவனை விடுவித்த பேராற்றல் படைத்தாய். பெருஞ் செல்வ, பசிப்பிணி நீக்கிப் பலரையும் பாதுகாத்தருளிய தலைவ, நீ யானறிய இப்பிறப்பிற் செய்தன வெல்லாம் நல் வினையாகவும், உன் மனையாளோடும் தனியே இங்கு வந்து இவ்வாறு துயர் உழப்பது முன்னைத் தீவினைப் பயனோ?'' என்று வினவினன்.

அதற்கு மறு மொழியாகக் கோவலன் அவனை நோக்கி, 'கண்ணகி நடுங்கித் துயரமுற,யான் உடுத்த கூறை பிறரால் கொள்ளப்பட்டு, யான் கோட்டினையுடைய ஆட்டுக் கடா வின் மேலே ஏறவும், மனையாளோடும் நான் பற்றற்றோர் பெறும் பேற்றைப் பெறவும், மாதவி தன் மகள் மணிமே கலையைப் போதி அறவோரிடத்தே அளிக்கவும், மிக்க இருளை யுடைய வைகறைப்போதில் நான் கனவு கண்டேன். ஆதலால் அது நன்றன்று. இப்பொழுதே அதன் பயன் வந்துறும்,'' என்று சொன்னன்.

அது கேட்ட கவுந்தியடிகளும் மாடலனும், 'இவ்விடம் துறவறத்தாருக்கல்லது தகுந்ததன்று. ஆதலின், நீ நின் மனை யாளோடும் மதுரை புகுக. அங்குள்ள வாணிகர், மாசாத்து வான் மகனென்னும் பெருமையினல், நின்னை எதிரேற்றுக் கொள்ளுவார்,' என்று கூறினர். அப்போது மாதரி யென் னும் ஆயர் குலத்து முதுமகள் ஒருத்தி அங்கே வந்து, கவுந் தியடிகளைக்கண்டு, அடிதொழுதாள். உடனே கவுந்தியடிகள் அவளை நோக்கி, "இடைக்குல நங்காய், இதோ நிற்கின்ற கண்ணகி கற்பரசி; அனைவரும் வழிபடக்கூடிய தெய்வமா வள். கோவலன் ஊருட்புகுந்து, தன் குலம் விளக்கி வணிக ரால் ஏற்றுக்கொள்ளப்படுவான். அதுகாறும் இக்கற்புக் கட வுளை உன்பால் அடைக்கல மாக்கினேன். துறவிகள் தரும்

அடைக்கலப் பொருளைக் காப்போர் பெரும்பயனடைவர்,'' என்று கூறினர். அது கேட்ட மாதரி தான் பெற்ற கையடைக்கு உவந்தனளாய், கண்ணகியும் கோவலனும் உடன் வர, அடிகளைத் தொழுது, சேரி நோக்கிச் சென்றாள். ஞாயிறு மேற்கே மறையும்பொழுது மூவரும் சேரியை யணுகினர். கோவலனும் கண்ணகியும் இருத்தற்குப் புதிதாகச் செம்மண் பூசிய சிற்றில்லாகிய காவல் மனையை மாதரி தந்தாள்; தன் மகள் ஐயை என்பாளைக் கண்ணகிக்கு அடித் தோழி யாக்கினாள்.

ஐயை தந்த புதுப்பானையிலே நன்றாகச் சமைத்துக் கறி யமுதமாக்கிக் கண்ணகி தன் கணவனை யடைந்து பணிந்து, அன்புடன் அழைத்து வந்து, உணவூட்டினாள். உண்ட கோவலன், மகிழ்ந்து, அவளைத் தன் அருகழைத்து, "அன்புருவே, கற்பரசி, வீணரோடும் கூடித் தீய ஒழுக்கத்தைக் கொண்டவனாகிய நான், 'என்னுடன் மதுரை வா,' என்றழைத்தவுடனே சிறிதும் எண்ணாது உடன்பட்டு, என்னுடன் கொடிய காட்டிற்புகுந்து, இங்கு வந்தனையே! இவ்வாறு வருவதற்கு உன் உள்ளம் இடம் தந்ததோ? உன்னடிகள் நோவ, உடல்மெலிய, என் இருமுதுகுரவரும் உளம் வருந்த என்னுடன்வந்த உன்னன்பை என்னெனச் சொல்லுவேன்!'' என்று அகங்குழைந்து சொன்னான். அது கேட்ட கண்ணகி, 'அன்பரே, நீர் உம் மனைவியாகிய அடியாள் வெறுக்கத்தகுந்த செயல்களையே செய்தீ ராயினும், கொழுநரது சொல்லைத் தட்டுதல் தகாது எனக் கொண்ட ஒழுக்கமுடையேன் ஆதலின், உம்முடன் போந்தேன்,' என்றாள்.

கோவலன், "அறிவற்றவனாகிய என்னுடன் போந்த பாவாய், உன் சீறடிக்கு அணியாகிய சிலம்பொன்றைக் கொண்டு

போய் விற்று வருவேன்; வருமளவும் நீ தனிமையால் வருந்தாதிருப்பாயாக,'' என்றான். அப்பொழுது அடக்கமுடியாத துயர மிகுதியால், அவன் கண்களில் நீரரும்பிற்று. அதனை அவள் அறிந்தால் மனம் நோவாள் என்று மறைத்தவனாய்க் கோவலன் பல பசுக்களையும் பல எருமைகளையும் உடைய மாதரி இல்லத்தை விட்டு நீங்கி, மாட்டா நடையோடே தெரு வழியே செல்லத் தொடங்கினான்.

அப்பொழுது அதிகாலை. ஒரு கொல்லேறு அவனையெதிர்த்துப் பாய வந்தது. அச்செயலை அவன் நிமித்த விரோதமென்றறிந்திலன். ஏனெனில், இடையர் குலத்தாரே யன்றி, அவன் குலத்தார் அதனை அறிய ஏது இல்லை.

அவன் பல தெருக்களையும் கடந்து கடைத் தெருவிற் புகுந்தான். உருக்குத் தட்டாரும்கைவினையிற் சிறந்த பணித் தட்டாரும் ஆகிய நூற்றுவர் தன் பின்னே வர, அரசனிடத்துப் பல பரிசுகளைப் பெற்றவனும், அரசன் தந்த சட்டை அணிந்தவனும், மேன்மக்களைக் கண்டு ஒதுங்கி வருபவனும், கைக்கோல் உடையவனும் ஆகிய ஒரு பொற்கொல்லன் தன் எதிர்வர அவன் கண்டான். கண்டவன், 'அரசனிடத்துப் பல பரிசுகளைப் பெற்ற பொற்கொல்லன் இவன்,' என எண்ணி, அவனை யணுகி, 'நீ கோப்பெருந்தேவிக்காவதொரு காற்கணி விலை மதித்தற்கு வல்லையோ?' என்று கேட்டான். அப்பொற் கொல்லன் அது கேட்டு, 'பெண்கள் காலில் அணியும் சிலம்பினை விலைமதிக்க அறியேனாயினும், வேந்தர்முடிக்கணிபலவும் சமைக்கும் ஆற்றல் மிக உடையேன்,' என்றான். கால தூதன் போலவந்த அப்பொற்கொல்லன் கோவலனைக் கையால் தொழுது புகழ,கோவலன் அவனிடம் ஈடுபட்டவனாய்,'யாவர்க்கும் புகழரியசிலம்பினைப் பொதிந்த பொதிவாயை அவிழ்த்தனன்.

தலைசிறந்த மாணிக்கமும் வைரமும் பத்திபடப்பதித்துப் பசும் பொன்னாற் செய்த உட்கருவையுடைய சித்திரத் தொழிலை உடைத்தாகிய அச்சிலம்பின் வேலைப்பாடெல்லாம் கண்ட அப்பொற்கொல்லன் மனம், எவ்வாறு கோவலனை ஏமாற்றி அரசனிடம்சென்று அவன் முன் கவர்ந்துள்ள அரசமாதேவி யின் காற்சிலம்பே இதுவெனக் கூறித் திருட்டுக் குற்றத்தை ஏற்றிக்கொல்விப்பதென ஆராய்ந்தது. அவ்வாறு ஆராய்ந்து, ஒருவாறு முடிவு கட்டிய உள்ளத்தினனாய், அவன் கோவ லனை நோக்கி, 'இப்பெருவிலைச் சிலம்பு அரசர் மனைவியர்க்கல் லது வேறொருவருக்கும் வினைவில்லை. வெற்றி மிக்க வேந்த ரிடம் போய் இச்செய்தி யுணர்த்தி யான் வருமளவும் என் சிறுகுடில் அருகே நீர் இரும்,' என்றான். அது கேட்ட கோவலன் போய் ஒரு தேவ கோட்டத்துள்ளே புகுந்திருந் தான்.

பொற்கொல்லனோ, 'அரண்மனைக்காலணி யான்கவர்ந்து கொண்ட செய்தி பரந்து வெளிப்படா முன்னம் அக்குற் றத்தை வேறொரு தேசத்தினின்றும் வந்தவனாகிய இவன் மீதேற்றி அரசனுக்கு அறிவிப்பேன்,' என்று தன் மனத்தில் தோன்றும் தீய எண்ணங்களெல்லாம் முகத்தில் தெரியாமல் மறைத்தவனாய், அரண்மனை நோக்கி நடந்தான். நாடக மக ளிர் ஆடலினும் பாடலினும் ஈடுபாடு காட்டிய பாண்டியனி டத்து ஊடிய உள்ளத்தவளாய் அரசமாதேவி தலை நோய் என் பதனைத் தன்மேலே யிட்டுக்கொண்டு தன்னிருக்கை சென் றிருப்ப, அவள் மன வாட்டத்தைத் தீர்க்கும்பொருட்டு அவன் போய்க்கொண்டிருந்தான்; அவள் இருக்கை வாயிலை யடைந்தபோது பொய்ம்மையையே ஒழுக்காறாகக் கொண்ட கொல்லன் அவனைக் கண்டு, அவன் அடியில் பணிந்து,

"கன்னக்கோலும் கவைக்கோலு மின்றித் தான் பயின்ற துயின் மந்திரமே துணையாகக் கொண்டு, வாயிலி லுள்ள காவலாளர்களையும் மயக்கித் தூங்கச் செய்து, அரண்மனை யிலிருந்த காற் சிலம்பினைத் திருடிய கள்வன் மிக்க ஒலி யுடையதாகிய இப்பேரூரில் உலாவும் காவலாளருடைய கண்ணுக்கும் மறைத்து, அடியேனுடைய சிறு குடிலகத்தே வந்திருக்கின்றான்,' என்று தெரிவித்தான். அது கேட்ட சினையலர் வேம்பன், ஊர்க்காவலாளரை யழைத்து, 'நீண்ட அழகிய கூந்தலையுடையவளாகிய பெருந்தேவியின் காலணி யாகிய சிலம்பு இவன் சொன்ன களவிற் கைசேர்ந்த கள்வன் கையகத்ததாயின், அவனைக் கொல்லுமாறு அச்சிலம்போடும் இங்கே கொண்டு வாருங்கள்,' என்று சொல்ல எண்ணிய வன், பண்டை வினையின் பயனாகத் தான் சொல்லுவது இது வென ஆராயாதவனாய், அச்சிலம்பு தன் மனையாளுடைய ஊடல் தீர்த்தற்கு மிகப் பொருத்தமானதொரு கருவியாமாத லின், 'அவனைக்கொன்று அச்சிலம்பைக்கொண்டு வாருங்கள்' என்றாணை தந்தான்.

அது கேட்ட பொற்கொல்லன், அரசனால் ஏவப் பட்ட வேற்காரரோடும், 'நாம் எண்ணிய எண்ணம் கை கூடியது!' என மிக மகிழ்ந்து, தீவினையாகிய கொடிய வலையில் அகப்பட்டிருந்த கோவலனை யணுகினான். அணு கியவன், அவனை நோக்கி, "அரசர் ஏவலால் சிலம்பு காணுமாறு வந்தோரிவர்; அதனைக் காட்டுமின்," எனச் சொன்னான். கோவலனும் தன் சிலம்பினை எடுத்துக் காட்டி னான். கொலைத்தொழிலையே கொண்ட கொல்லனே, அரண் மனையிலிருந்த ஒற்றைச் சிலம்போடு பொருந்தியது இதுவே என அதன் பெருமைகளை எடுத்துச் சொல்லுவான் போலப்

பொருத்திக் காட்டினான். ஆனால், மிக்க திறமையையுடைய அவ்வேற்காரரோ, 'இவன் உடல் அமைப்பாலும் இருக்கின்ற முறைமையாலும் கள்வனென்று சொல்வதற்கு உரியவனல்லன்; கொல்லப்படுவானு மல்லன்,' என்றனர். அது கேட்ட கொல்லன் நகைத்து, அவர்கள் சொல்லை இகழ்ந்து, களவு நூலிலுள்ள ஏதுக்களைக் காட்டி, அவர்களை நோக்கி, "கள்வர்களோ, பொல்லா ஒழுக்கத்தினால் களவாடி உண்ணும்மாக்கள். மந்திரம், தெய்வம், மருந்து, நிமித்தம், தந்திரம், இடம், காலம், கருவி ஆகிய எட்டையும் அவர்கள் படையாகக் கொண்டு திரிவார்கள். முன்னொரு கள்வன் தூதனுருக்கொடு பகலெல்லாம் அரண்மனைவாயிலிலிருந்து, இரவில் மாதுருக்கொடு உள்ளே புகுந்து, இளங்கோவேந்தர் மார்பகத்திருந்த வயிர மணி மாலையைப் பறித்து, அவரை ஏமாற்றி ஓடினான் அன்றோ? அக்கள்வனை இதுவரை கண்டவ ருண்டோ? ஆதலின், கள்வர்க்கு நிகராவார் இப்புவியி லில்லை," என்று கூறினன்.

இவ்வுரை கேட்ட ஒருவன், சிறிது காலத்திற்குமுன் தன்னையும் ஒரு கள்வன் ஏமாற்றிச் சென்றானென்றும், தாம் வந்த செய்தியை முட்டின்றி முடிக்காமல் காலங்கடத்தினால் அரசன் ஒறுக்குமென்றும் புகன்றான். அது கேட்ட கல்லாக் களிமக னொருவன், முன்னைப் பழவினை வந்து சூழ்ந்ததாதலின், யாதொன்றும் தேறானைத் தன் வாளை வீசினான். அது கோவலனது கழுத்தை இரு துண்ட மாக்கிற்று. கோவலன் படிமிசை மாண்டு விழுந்தான். பாண்டியன் செங்கோலும் வளைந்தது.

அன்று காலையில் அரண்மனையில் காலை முரசு இயம்பிற்று. அது கேட்ட மாதரி எழுந்து, ஐயையைக்கூவிக்கடை

கயிறும் மத்தும் கொண்டு தயிர் கடையச்சென்றாள்; அங்கே பால் உறையாதிருப்பதைக் கண்டாள். கண்டவள் வெளி வந்து நோக்கப் பசுக்களும் எருமைகளும் கண்ணீர் வடித்து நிற்பதை யறிந்தாள். மறிகள் துள்ளிக் குதியாது அடங்கிச் சோர்ந்து நின்றன. இவை யெல்லாம் விளைய இருக்கும் உற்பாதம் குறிக்கும் தீ நிமித்தங்கள் என்றறிந்து, அச்செய் தியை அவள் தன் மகளிடம் சொன்னாள். மகள் வருந்து வது கண்டு மாதரி அவளைத் தேற்றி, "உற்பாதத்தைத் தீர்க் கும் வழியாக நாம் குரவைக் கூத்தாடுவோம். இக்கூத்து முன்னர்க் கண்ணன் தன் அண்ணனோடும் ஆயர் குல மகளி ரோடும் ஆடிய பல ஆடல்களுள் ஒன்றாம்," எனச் சொல்லி, எழு மகளிரை வரிசைப்பட நிறுத்திக் கைகோத்தாடத் தொடங்கினாள். அவ்வாடலில் கண்ணனை நோக்கிப் பல பாடல்கள் பாடப்பட்டன. அவர்கள் திருமால் புகழைப் பலபடப் புகழ்ந்தார்கள்; இறுதியாக, "இப்பொழுது நாம் ஆடிய குரவைக்கூத்தினுள் நாம் தொழுத தெய்வம் நம் ஆக் களுக்குவரும் பிணிகளைத் தீர்ப்பதாக. வேந்தன் செங்கோல் நீடுழி வாழ்வதாக," எனச் சொல்லி வாழ்த்தி, அக்குரவைக் கூத்தை முடித்தார்கள்.

மாதரி வையையில் நீராடித் திருமால் அடி யேத்தச் சென்றனள். அப்பொழுது குரவைக் கூத்து முடிந்ததாக, ஊருள் நடந்த துன்பச் செய்தி கேட்டாளொருத்தி, அங்கே ஓடி வந்து நின்றாள். அவளை நோக்கிக் கண்ணகி, 'இப் பொழுது நடுப்பகற் பொழுதாகியும் என் கணவர் வந்திலர்! அதனால் என்னையறியாதே என்னெஞ்சம் மிகவும் துன்புறு கின்றது! வஞ்சமேதோ நிகழ்ந்ததுபோலும்! உண்மையை யுரையாயோ தோழி?" என்றனள்.

அது கேட்ட அப்பெண், "அரண்மனைச் சிலம்பைக் களவாடிய கள்வனென்று நின் மணாளரை மன்னர் ஏவலர் மடித்தனர்!" என்றாள். அது கேட்டுக் கண்ணகி மிகவும் துன்புற்று, செங்கண் சிவக்க அழுதாள் "கணவரை யிழந்து, கைம்மையுற்று வாழ்வேனோ! காய்கதிர்ச் செல்வனே, உலகில் நிகழும் செய்தியெல்லாம் நீ அறிதியன்றோ? கள்வரோ என் கணவர்?" என்று கூவினாள். அப்பொழுது விண்ணில் ஒரு குரல், 'உன் கணவன் கள்வ னல்லன். அவனைக் கள்வ னென்ற இவ்வூரை விரைவில் எரியுண்ணும்,' என்றிசைத் தது. அவ்வுரை கேட்ட கண்ணகியோ, நின்றிலள். தன்னிட மிருந்த ஒற்றைச் சிலம்பைக் கையிலேந்தி, ஊருட்புகுந்து, "ஐயோ! நெறியற்ற இந்நெடுஞ்செழியன் ஊரில் வாழும் பத்தி னிப் பெண்டிர்காள், இதுவரை ஒருவரும் படாத துயரம் யான் பட்டேன்! என்சிலம்பு விற்க வந்த தலைவரைக் கொன்றனரே! ஐயோ! நான் என் கணவரைக் காண்பேன். கண்டு அவர் நல் லுரை கேளேனேல், என்னையிகழுமின்," என்று ஆற்றொணாத் துயர் கொண்டு, அழுதாள்.

அம்மதுரையா ரெல்லாரும் அவளைக் கண்டு, "ஐயோ! ஒரு நாளும் வளையாத செங்கோல் இன்று வளைந்ததே! இது வென்னே! ஒரு சிலம்பைக் கையேந்தி இத்தெய்வ மனையாள் இவண் போந்து அரற்றுகின்றாளே!" என்று மனம் கசிந்து புலம்பினர். சிலர் அவளை யழைத்துச் சென்று, கோவலன் மாண்டு கிடந்த இடத்துய்த்தனர். அப்பொழுது செங்கதி ரோன் மேற்கு மலைக்கப்பாற் சென்றொளித்தான்.

கண்ணகி, "ஐயோ! அன்பரே, இன்று காலையில் நும் தலையிலிருந்த மாலையை யெடுத்து என் குழலிற் சூட்டிப் பிரிந்து இந்நிலையுற்றீரே! உம்முடைய அழகு பொருந்திய

மேனி இவ்வாறு புழுதி படிந்து கிடக்கின்றதே! பாண்டியன் செய்த பிழையால் இத்துயர் சூழ்ந்ததே! என்செய்வேன்! தெய்வமே!'' என்று புலம்பி, தன் கணவன்மேல் விழுந்து அவனுடலைத் தன்னுடைய மார்புறத் தழுவினாள். உடனே அவன்எழுந்துநின்றான். நின்றவன் அவளை நோக்கி, 'நிறைமதி போலும் ஒளி மிக்க நின் முகம் வாடியதே!' என்று சொல்லி அவள் கண்ணீரைத் தன் கையால் மாற்றினான். அவள் ஏங்கி யழுது நிலத்தின்மேல் வீழ்ந்து தன் கணவன் கால்களைக் கையாற் பற்றினாள். பற்றலும், அவன் விண்ணிலெழுந்து, அமரர் குழாத்துட் கலந்து, "பெண்ணே, நீ இங்கிருக்க,'' என்று சொல்லி, விண்ணுலகம் போனான்.

அது கண்ட கண்ணகி, 'ஈதென்ன மாயம்! எங்குப் போய்த் தேடுவேன்? அவரை மீட்டுங் கண்டு கூடுதல் எனக்கு எளிதேயாயினும், மிக்க சினம் தணிந்தாலன்றிக் கூடேன். அதனால், தீத்திறம் பூண்ட வேந்தனைக் கண்டு, அவன் தவறிழைத்தமை வினவுவேன்,' என்று புறப்பட்டு, அரசன் கோவிலின்முன் சென்று நின்றாள்.

அரசனுக்கும் ஊருக்கும் வரவிருக்கும் கேட்டையறிவிக்கும் பல தீக் கனாக்களைக் கண்ட கோப்பெருந்தேவி, அவற்றை அரிமா னேந்திய அமளிமிசை யிருந்த அரசனிடம் சென்று உரைத்திருந்தாள். இந்நிலையில் வாயிலில் வந்து நின்ற கண்ணகி, ஆண்டிருந்து காவலனை நோக்கி, "ஒற்றைச் சிலம்பைக் கையிலேந்திக் கணவனை யிழந்த மாதொருத்தி வாயிலில் வந்தாள் என்று அரசனிடம் சென்றறிவிப்பாய்,'' எனலும், அவன் உட்சென்று, வேந்தனது ஆணை பெற்று, அவளை உள்ளே புகுத விட்டான். அவளைக் கண்ட

வேந்தனும், "பெண்ணே, நீ வருந்துமாறு உற்ற துய ரென்ன? உன் பெயரென்ன?" எனலும், அவள், முறை பிறழ்ந்த மன்னா, தன் மகன் ஏறிச் சென்ற தேர்க்காலில் அவன் அறியாது ஒரு சேங்கன்று துள்ளிப் போந்து பட்ட தாக, அதுகண்டு வருந்திய தாய்ப்பசுவின் துயரறிந்து, தான் அவ்வாறு துயரெய்தி, இறந்த கன்றுக் கீடாகத் தன் குலத் துக் கொருமகனைத் தெருவில் கிடத்தித் தன் தேர்க்காலால் ஊர்ந்தமனுச்சோழனது பெரும்புகாரே யெம்மூர். அவ்வூரின் கண் பெருங்குடி வாணிகர் மாசாத்துவானரின் மகனாகி, முன்னை வினையுலப்ப ஊர்துறந்து ஈண்டுப்போந்து, பொருள் தேடுமாறு வாணிபம் செய்தற்குக் கைப்பொருளாம்படி என் காற்சிலம்பொன்றை விற்க வந்து, தீயவனாகிய உன்னால் கொல்லப்பட்ட கோவலர் என் கணவர். என் பெயர், கண் ணகி யென்பது," என்றாள். அவன், 'கள்வனைக் கொல்லுதல் கடுங்கோ லன்றுகாண்,' எனலும், அப்பெண்மணி, "புல்லறி வுடையாய், என் காற் பொற்சிலம்பின் அரி, மணி," என் றாள். அது கேட்ட பாண்டியன் நெடுஞ்செழியன், 'இவள் உரைத்தது மிக நன்று. நம் சிலம்பின் அரியோ, முத்து. களவாடியதாகக் கோவலன் கையிற் பற்றிய சிலம்பை மீண் டுத் தருக,' என்று வாங்கி, அவள் முன் வைத்தலும், அவள் அச்சிலம்பை உடைத்தாள். அதிலிருந்தும் மணிப்பரல் தெரித் தன. அவை கண்ட மன்னவன் மனமிக மலங்கி, "ஐயோ! இழிந்த பொற்கொல்லன் சொற்கேட்ட யானோ அரசன்! யானே கள்வன்! இதுகாறும் பழுதுபடாத என் குலம் என் னால் இன்று மாசுற்றதே! என் ஆயுள் கெடுக!" என மயங்கி வீழ்ந்து இறந்தான். இதுவன்றோ மானமுடைய பெரியார் செய்கை! 'மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே.'

தன் கணவன் மயங்கி வீழ்ந்து இறந்தமைகண்ட கோப் பெருந்தேவி நடுங்கி, 'தெய்வமே, காக்க!' என்று தொழுது, கண்ணகி காலில் வீழ்ந்து பணிந்தனள். கற்பரசியாகிய கண்ணகியோ, அவளை நோக்கி, "அரசன் மனைவியே, தீவினை யாட்டியாகிய நான், ஒன்றும் அறியாத தன்மையேன்.

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யின், தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்."

என்ற பேருரையி னுண்மையை நேரில் கண்டு தெளி. நானோ, கற்பின்மிக்க காரிகையார் பிறந்த பதியிற் பிறந்தேன். நானும் ஒரு பத்தினியேயாகில், அரசோடு இவ்வூரை அழிப்பேன்," என்று வஞ்சினம் கூறி, அவ்வுரை முடியாமுன் கோப்பெருந் தேவி இறந்தமை கண்டு, "நானோ, குற்றமிலேன். குற்றமற்ற என் கணவரைக் கொன்ற இந்நகரைச் சீறினேன்," என்று சொல்லி, அவ்வூரை மும்முறை வலம் வந்து, தன் இட மார்பை வலக்கையால் திருகி யெறிந்தாள்.

அப்பொழுது அங்கியங்கடவுள் அவள்முன் தோன்றி, "பத்தினியே, நீ துயருற்றபோது இவ்வூரை யெரிக்க யான் முன்னரே ஓர் ஏவல் பெற்றுளேன். இவ்வூரில் யார் பிழைப் பார்?" எனக் கேட்டான். அவள், 'நல்லோரை விடுத்துத் தீத்திறத்தோர் பக்கமே சேர்க,' என்று ஆணை தந்தாள். உடனே அக்கூடல் மாநகரில் புகையழல் மண்டிற்று. அப் பொழுது இரவு நாலைந்து நாழிகையே ஆயின.

முதலில் அரசன் கோவிலிலேயே தீப்பற்றியது. குற்ற மற்ற அரசாட்சியினனாகிய பாண்டியன் நெடுஞ்செழியன் உயரிய கற்பினளாகிய தன் மனையாளோடும் அரிமாச் சுமந்த அமளிமிசை மடிந்தமை அறியாத ஏவலர் பலர் அழல

வித்தற்காக அவண்வந்து குழுமினர். அவ்வூரைக் காத்திருந்த வருண பூதங்கள் நான்கும் தோன்றி, 'அரசன் தவறிழைத்த நாளேயில் இவ்வூர் எரிவாய்ப்படும் என்பதுமுன்னரே குறித்த முறைமையாதலின், யாம் இனி இவ்வூரைக் காத்தல் தகுதி யன்று,' என்று சொல்லி நீங்கின. அரண்மனை முழுதும் அழித்த தீ, மற்றத் தெருக்களேயும் அழிக்கத் தொடங்கிற்று. ஊருள்ளிருந்த பசுக்கள், தம் கன்ருேடு வெளியே ஓடி, ஆயர் பாடியிற் புகுந்தன. ஏனைய யானையும் குதிரையும் புறமதி லடைந்தன. பெண்கள் தங்கள் சிறு மகாரோடு தம் இல்லத் திருந்த நரைத்த கிழவியரையுமுடனழைத்து, வெளியேறிச் சென்ருர்கள். நாடக மகளிர் ஆடரங்கிழந்து, தவித்தனர். கற்பின் மிக்க மடந்தையர் பலரும் பெருமகிழ்வெய்தி, 'கற் பின் வெற்றி நன்று! நன்று!!' என்று ஆர்த்தனர். அன்றிரவு நிகழவேண்டிய இன்ப விழாக்களும் ஏனைய செயல்களும் நிகழாதொழிந்தன.

கணவனை யிழந்து கடுந்துயர் கொண்ட கண்ணகியோ, மயங்கிப் பல இடத்தும் திரிந்தாள். திரிந்தவள், எம்பிரானு ருறையும் வெள்ளியம்பலத்தை யடைந்தாள். அப்பொழுது பாண்டியர்களது குல தெய்வமாகிய மதுராபதி, தீயின் வெம் மையைக் கண்டு பொறுக்கலாற்ருது, அவ்வீர பத்தினி முன் தோன்றி, 'நங்காய் வாழி!' என்ருள். அப்பொழுது அவ் விடத்தில் நிகழ்ந்த செயலே அங்கே தூங்கி யிருந்த தண்ட மிழ்ப் புலவர் சாத்தனுர் நேரிற் கண்டனர்.

கண்ணகி மதுராபதியை நோக்கி, "என் பின் வருபவளா கிய நீ யார்? என்னுடைய மிக்க துயரத்தை நீ அறிதியோ?" என்ருள். அவள், "அம்மே, உன் துயரம் அறிவேன் நானே, இவ்வூரின் குல தெய்வமாகிய மதுராபதி. உன் கணவனுக்கு

ஏற்பட்ட துயரத்தை நோக்கிப் பெரிதும் வருந்துகின்றேன். பாண்டியனோ, மிக்க பண்புடையவன்; அற நெறியான். முன்னர் ஒருகால் சேரனிடத்துச் சென்று பெரும் பொருளைப் பரிசாகப் பெற்று மீண்டு தன் ஊர் செல்லுவோனாகிய புலமையிற் சிறந்த அந்தணன் ஒருவன், வழியிலிருந்த திருத்தங்கால் என்னும் ஊரில் இளைப்பாறச் சிறிது பொழுது தங்கினனாக, அவ்வூர்ச் சிறாரெல்லாரும் அவனிடம் வந்து சூழ்ந்தனர். பராசரன் எனும் அப்புலவன், "என்னோடு தொடர்ந்து மறையோதுவானுக்கு யான் பெற்ற பரிசெல்லாம் தருவேன்," என்றான். சிறந்த அறிவினனாகிய தக்கிணன் என்னும் சிறான், அவ்விதமே ஓதி, அவன் கொண்டுவந்த பரிசெல்லாம் பெற்றான். பின்பு அப்புலவன், தன் ஊராகிய வலவைநோக்கிச்சென்றான். தக்கிணன் தான்பெற்ற பரிசைத் தன் தந்தை வார்த்திகன் என்பானிடம் கொடுத்துப் பணிந்தான். வார்த்திகன் அவ்வாறு பெரும்பொருள் பெற்றமை கண்டு, பொறாமை மிக்கோராகிய அரசனுடைய ஏவலரிற் சிலர் அவனைக் கள்வனெனப் பற்றிச் சிறைக் கோட்டத்திலிட்டனர். உடனே மதுரையில் காளி உறையும் கோவிற் கதவம் திறவாதடைத்தது. அது கண்ட இப்பாண்டியன் நெடுஞ்செழியன் மயங்கி, "கொடுங்கோல் உண்டுகொல்? என் செய்கேன் !" எனப் புலம்பினன். அப்பொழுது வார்த்திகனைக் கொணர்ந்த செய்தியை ஏவலிளையவர் சிலர் காவலனைத் தொழுது புகன்றனர். உடனே பாண்டியன் அவனைச் சிறை வீடு செய்து, திருத்தங்காலோடு வயலூரையும் அவனுக்களித்துப் பணிந்து, "பொறுக்க," என வேண்டினன். உடனே யாவருமறியக் காளிகோவிற் கதவம் திறந்தது. அது கண்டு மகிழ்ந்த இப்பாண்டியன், சிறையுள்ளார் பலரையும்

விடுதலை செய்யுமாறு பறை சாற்றுவித்தான். இத்தகைய செங்கோலினனாகிய இம்மன்னவன் முறை தவறிய செய்தி இதுவெனச் சொல்லுவேன். கேட்பாய்: 'ஆடி மாதத்துத் தளர்பிறை எட்டாம்நாள் பரணிக்குமேல்வந்த கார்த்திகையில் வெள்ளியன்று இம்மதுரை எரிவாய்ப்படும்,' என்னும் மூதுரை ஒன்றுண்டு. இன்னும் கேள் நீ: முன் கலிங்க நாட்டில் வசு என்பான் சிங்க புரத்திலும், குமரன் என்பான் கபில புரத்திலும் அரசாண்டிருந்தனர். அவ்விருவரும் தம்மில் தாய வேந்தர். அவர்கள் தம்முட் பகை கொண்டு, பொருதிருந்தார்கள். அக்கால், சங்கமன் என்பான் ஒரு வணிகன், நீலி என்பவளாகிய தன்னுடைய காதலியோடும் சிங்க புரம் சென்று, கடைத் தெருவில் அருங்கலன் விற்றிருந்தான். மா பெரும்பத்தினி, முன்னைப் பிறப்பில் உன் கணவன் கோவலன், பரதன் என்னும் பெயரோடும் வசு என்னு மரசனுக்குப் பணிசெய்திருந்தான். அப்பரதன் சங்கமனைப் பகையரசன் ஒற்றனெனத் தன் மன்னனுக்குக் காட்டிக் கொலை செய்திட்டான். அதுகண்ட அச்சங்கமன் மனைவி நீலி, "குய்யோமுறையோ!" எனக்கூவிப் பதினான்கு நாளளவும் திரிந்து ஒரு மலைமே லேறித் தன் உயிரை மாய்க்கத் துணிந்தவளாய், "இப்பொழுது எனக்கு இத்துன்பம் செய்தோர் பின்னர் இத்துன்பமே பெறுக," என்று ஒரு கொடிய சாபமிட்டுக் கீழ் வீழ்ந்திறந்தாள். இப்பண்டை வினையே உம்மை வந்து சார்ந்ததாம். நீ பதினான்காம்நாள் உன் கணவனைக் கண்டு கூடுவை," எனச் சொல்லி, மறைந்தனள்.

உடனே கண்ணகி மேற்றிசை வாயிலைக் கடந்து, "என் கணவரைக் கண்டாலல்லது இருத்தலுமில்லேன்; நிற்றலுமில்லேன்," என வையைக் கரைவழியே இரவும் பகலும், மயங்கி

விடாது நடந்து சென்று, மேற்றிசை மலையடைந்து, முருகக் கடவுளுறையும் அத்திருச்செங்கோட்டில் அடிவைத்தேறி, அதன்மே லிருந்ததொரு வேங்கைமரத்தை யடைந்து, அதன் கீழே நின்றாள். அன்று அவள் தன் கணவனைப் பிரிந்த பதினன்காவது நாள்.

## 3. கோவலன் கதை: பகுதி-2

### வஞ்சிக் காண்டம்

ஆண்டு இருந்த வேட்டுவ மகளிர் கண்ணகியைக் கண்டு, "அம்மே, இக்கோலத்தோடும் வருந்தி இங்கு வந்து நின்ற நீ யார்?" என்றனர். கண்ணகி, "முன்னைப் பழவினை மூண்டதாகக் கணவனை யிழந்து, மதுரையொடு அரசு கெடச் செய்து போந்த கடுவினையேன் யான்," என்றாள். அது கேட்டார் அவளை வணங்கி, அஞ்சிக் கை கூப்பி நின்றனர். அப்பொழுது எல்லாரும் அறிய மலர் மழை பொழிந்தது. விண்ணவர் வந்து தோன்றி, அவள் கணவனைத் தெய்வ உருவொடு அவளுக்குக்காட்டி, அவளைத் தாம் வந்த விமானத்திடை யேற்றிக்கொண்டு சென்றனர். அது கண்ட வேட்டுவர் அனைவரும் மிகுந்த வியப்பெய்தி மகிழ்ந்து, கண்ணகியைத் தம் குலதெய்வமாக்கிக் கும்பிட்டுக் கூத்து மாடினர். தங்களைக் காத்தருளுமாறும் மழை வளம் சிறக்கச் செய்யுமாறும் அவர்கள் அவளைப் பணிந்திருந்தார்கள். அப்பொழுது வஞ்சி வேந்தன் சேரன் செங்குட்டுவன், தன் மனைவி வேண்மாளோடும், மலைவளம் காணும்பொருட்டு, வஞ்சியின் நீங்கி, ஆங்குப் போந்தனன். அவன் அம்மலைமேல் பரந்தோடிய பேரியாற்றின் கரை யிடத்ததொரு மணற்றிட்டையிலே மனையா

ளோடும் இளங்கோவடிகளோடும் இருந்தனன். அப்பொழுது அச்செய்தி யறிந்த வேட்டுவர் பலரும் பல பொருள்களையும் காணிக்கையாகக் கொணர்ந்து, அவனடியிற் சேர்த்துப் பணிந்து, போற்றி நின்று, தாம் கண்ட விந்தையை யுரைத்தனர். அப்பொழுது எரிந்த மதுரையிலிருந்து அவண் போந்த தண்டமிழாசிரியர் சாத்தனார், அது கேட்டு மிக்க வியப்பும் மகிழ்வும் கொண்டு, மன்னனைப் பார்த்து, "அரசர் ஏறே, அக்கற்புக்கடவுள் மதுரையிலே சிலம்பு காரணமாகத் தன் கணவனை யிழந்து, மன்னன் முன்னர்ச் சிலம்பொடு சென்று வழக்குரைத்துச் சிலம்பால் வென்று, அரசமாதேவி முன் வஞ்சினம் சாற்றி, மதுரைமா நகரைச் சுட்டெரித்தாள். தென்னர் கோமான் நெடுஞ்செழியன், தான் செய்த பெருங் குற்றங் கண்டு மனம் பொறாது, அப்பொழுதே மயங்கி உயிர் விடுத்தனன். அது கண்ட பெருங்கோப்பெண்டும், கற்பிற் சிறந்த காரிகையேயாதலின், மனம் பொறாது, மன்னவனடிக் கண் வீழ்ந்து மடிந்தாள். கண்ணகியோ, கணவனை யிழந்து தனித்துத் தன் நாடு போக எண்ணாதவளாய், உம் நாடடைந் தனள். வாழ்க நுங் கொற்றம்," எனத் தாம் முன்னர்க் கண்டு கேட்டனவற்றையெல்லாம் விளங்க விரித்துரைத்தனர். சேரனும், அப்புலவர்பெருந்தகையாருக்கு நன்கனம்உரைத்து, தன் மனையாளை நோக்கி, "அன்பே, தன்கணவன் உயிர் நீங்க, உடனுயிர் நீங்கிய மா பெருந்தேவியோ, ஈண்டுப் போந்த எம் பெருமாட்டியோ, நீ வியக்கும் நலத்தோர் யார்?" என்றனன். அதுகேட்ட அவன்மனைவி, "காதலன் துயரம் காணாதுகழிந்த கற்பரசி விண்ணில் வாழ்வடைக. நாம் நம்பெருநாடடைந்த பத்தினிக் கடவுளைப் பரவுதல்வேண்டும்," என்றாள். அப்பொழுது மன்னன் பக்கத்திலிருந்த மதி வல்லாரை நோக்கினன்.

அவர்கள், "பொதியிலிலாவது இமயத்தாவது கற்கால்கொண்டு தெய்வவுருச்சமைத்தல் வேண்டும். பொதியிற் குன்றிற் கற் கால் கொண்டால் காவிரியாற்றிலும், இமயத்துக் கற்கால் கொண்டால் கங்கையிலும் நீர்ப்படை செய்தல் முறையாம்," என்றனர். உடனே மன்னன், "நம் பெருமைக்குப் பொதியி லில்கற்கால்கொள்ளுதல்சால்புடைத்தன்று; இமயஞ்சென்றே கொள்ளுதல்வேண்டும்," என்றான். அப்பொழுது வில்லவன் கோதை என்னும் மந்திரி, "சோழபாண்டியர் கொங்கர் செங் களத்து நமக்குத் தோற்றோடிய செய்தி உலகறியும். கோங்க ணர், கலிங்கர், கட்டியர், பங்களர், வடவாரியர் இவரை நீர் வென்ற வெற்றி இன்னும் என் கண்ணை விட்டகலாது நிற் கின்றது. நம்முடைய தாயாராகிய மாபெருந் தேவியாரைக் கங்கைப் பேரியாற்று நீர் ஆட்டச் சென்றபோது நம் மொடு மலைந்த ஆரிய மன்னர் ஆயிரவரையும் நீர் ஒருவராக நின்று வென்ற நமது போர்க்கோலங் கண்டது கூற்ற மன்றோ? நம்மை எதிர்ப்பார் இவ்வுலக முழுவது மில்லை. ஆதலின், வடதிசையுள்ள மன்னவர்க்கெல்லாம் நீர் தெய்வம் எழுத ஒரு கற்கால் பெற இமயஞ் செல்லும் செய்தியை வரைக," என்றனன். அப்பொழுது அழும்பில் வேள் என் பான், அரசனை நோக்கி, "நம் வஞ்சிமா நகரில் பகைவர் பலரும் விடுத்த ஒற்றர் பலரிருப்பார். ஆதலின், இச்செய்தி யைப் பறை சாற்றுவதே சாலும்," என்றனன். அரசனும் அதற்கிசைந்து, வஞ்சியைச் சேர்ந்து, வள்ளுவரைக் கூவி, "எம் கோ இமயத்துக் கற்கால் கொள்ளச் செல்லுகின்றமை யால், வடதிசைக்கண்ணுள்ள மன்ன ரெல்லாரும் எதிரேற் றுத் திறை தந்து காண்மின். அங்ஙனம் புரியீராயின், போர் குறித்திருமின்; அன்றேல், துறவுருக்கொண்டு ஓடிப் பிழை

மின்,'' என்று யானைமேலிருந்து பறை சாற்றுமாறு பணித்தனன். அவ்வாறே பறை சாற்றப்பெற்றது. அம்மன்னர் மன்னன் அரிமானேந்திய கட்டிலில் அமர்ந்திருந்தான். தன்னைச் சூழ்ந்திருந்த பலரையும் நோக்கி, அவன், "வட திசை யுள்ள ஆரிய மன்னர் கனக விசயர் எம்மை யிகழ்ந்தனராம். ஆதலின், அவர்களை வென்று அவர்கள் தலைமேல் கற்காலை யேற்றி யல்லது மீளேம். வறிது மீளுவேமாயின், கொடுங்கோலனென் றெம்மை யிகழுமின்,'' என்றான். அப்பொழுது கணி யெழுந்து, " அரசரே, மன்னர் பலரையும் நீர் வென்று மீளற்குரிய நற்போதிதுவே,'' என்றனன். உடனே மன்னன் தன் சேனை வடக்கு நோக்கிப் புறப்பட ஆணை தந்து, தானும் அதிகாலையிலே சிவபெருமானை அருச்சித்துப் பணிந்து, அவர் திருவடிக்கண் இட்ட மலரைத் தன் முடியிற் சூடிப் புறப்பட்டனன். அப்பொழுது திருமால் சேடங் கொண்டு சிலர் நின்றேத்த, கறைமிடற் றண்ணலார் சேவடி மணிமுடி வைத்தலின், அதனை வாங்கித் தன் தோளிலே யணிந்து முன் சென்றனன்.

சென்றவன் சின்னாளில் நீல கிரியினைத் தானையொடு மடைந்தான். அப்பொழுது இமயத்திருந்து சில அந்தணர், தென்குமரியாடப் போவார், அவனைக் கண்டு, "நீர் இமயஞ் சென்றக்கால், அவணிருக்கும் நோற்றலுடைய அந்தணரைக் காமின்,'' என்றுரை தந்து சென்றனர். செங்குட்டுவனே, அந்நீல கிரியில் பல அரசரு மனுப்பிய திறை கொண்டு, சில தினங்கள் தங்கியிருந்தனன். வேனிற்காலம் வந்தபோது கொங்கணரும் கருநாடரும் திறை தந்து, அவனடி பணிந்து சென்றனர். கார் காலம் வந்தபோது குடகர் திறை கொண்டுவந்து அவனைப் பணிந்தனர். வடவாரிய மன்

னர் நூற்றுவர் கன்னர், தூதுவர் வழியாய் மிக்க திறையை யனுப்பித் தம் பணிவை அறிவித்தனர். அத்தூதுவர் தலைவனை சஞ்சயனை நோக்கி மன்னர் பெருமான், "ஆரியமன்னன் பாலகுமரன் மக்கள் கனகனும், விசயனும் அருந்தமிழாற்றலறியாது,

> "யாகாவா ராயினும், நாகாக்க ; காவாக்கால்,
> சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

என்ற மெய்யுரையும் ஓராது, எம்மை இகழ்ந்தனராதலின், அவர்கட்குக் கூற்றம் போலும் இச்சேனை செல்லுகின்றது. கங்கைப் பேரியாற்றைக் கடத்தற்காவன செய்யுமாறு நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றுக," என்று கட்டளை யிட்டனன்.

அவ்வாணையைச் சிரமேற் கொண்டு சஞ்சயன் விரைந்தனன். அப்பொழுது சில தூதுவர் தென்னரிட்ட திறையாகிய சந்தும் முத்தும் கொணர்ந்தனர். அவ்வாறு கொணர்ந்த தூதுவரிடம் அக்காவல் வேந்தன் ஆணைப்படி அவன் கண்ணெழுத்தாளர் முடங்கல் எழுதி, அம்மன்னவர்க்களிக்கும்படி தந்தனுப்பினர். உடனே மன்னவன் அப்படை வீட்டினின்றும் நீங்கி, விரைந்து சென்று, நூற்றுவர் கன்னர் உதவியால் கங்கையைக் கடந்து, வடமருங்கெய்தி, அவர்கள் எதிர்கொண்டழைக்க அவர்களுடைய நாட்டைக் கடந்து, பகைவராகிய கனக விசயர் புலம் புக்கு, அவர்கள் வரவை எதிர்பார்த்துப் பாசறையி லிருந்தான்.

கனக விசயரோ, தமக்குத் துணை வந்த சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன், உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன் முதலிய மன்னரோடும், "தென்தமி ழாற்றல்

காண்குதும்!'' என்று தானையொடு வந்து பொருதனர். அப்போர் பதினெட்டு நாழிகையில் முடிவடைந்தது. கனக விசயர் தம் துணைவரோடு துறவுருக்கொண்டு மறைந்து ஓடினர். மன்னவன் சேரமான், வில்லவன் கோதையாம் தன் மந்திரியோடு சில வீரரைப் போக்கி, அந்தண ரோம்பி, பொற்கோட்டிமயத்துக் கற்கால் கொண்டு, அதனைக் கனக விசயர் முடிமிசை யேற்றிக் கங்கைக் கரையகம் புகுந்து, பத்தினிக் கடவுளை முறைப்படி நீர்ப்படை செய்தனன்.

பின்னர் அக்கங்கையாற்றின் தென்கரையில் ஆரிய மன்னர் அழகுறவமைத்த வெள்ளிடைப்பாடியிற் புகுந்து, அமளிமிசையிருந்து, வெற்றிவேற் சேரன் செங்குட்டுவன், தனக்கு வெற்றி தந்த வீரர் யாவருக்கும் பெரும்பரிசளித்தான். அப்பொழுது அவனை மாடல மறையோன் வந்து கண்டு வாழ்த்தினன். அவன் அரசனை நோக்கி, "இக்கனக விசயர்தம் முடித்தலை நெரித்தது மாதவி மடந்தை கடல் விளையாட்டிற் பாடிய கானற் பாணி யன்றோ?'' என்றனன். 'என்னை நீர் கூறுவது?' என்றனன் மன்னன். தான் கூறிய உரைப்பொருளாக மாடல மறையோன் மன்னனை நோக்கி, "முன்னர்க் காவிரிப்பூம்பட்டினத்திலே நடந்த கடல் விளையாட்டிலே மாதவி வரிப்பாடல் பாட, அது கேட்ட கோவலன் ஊடல் கொண்டு அவளைப் பிரிந்து, கண்ணகியோடும் மதுரையை யடைந்து, சிலம்பால் மடிந்தனனாக, அவன் மனைவி நின் நாடு புகுந்து இங்ஙன் இவ்வடதிசை மன்னர் முடிமிசை ஏறினள். யான் இவண் வரும் காரணம் கூறுவன்: பொதியின் மலை வலங்கொண்டு குமரிப் பெருந்துறையாடித் தென்னவன் மதுரை சென்றேன். அங்கே பாண்டியன் நெடுஞ்செழியனைக் கண்ணகி சிலம்பின் வென்றதும், மாதரி, "ஐயோ! அடைக்கலம்

இழந்தேனே!" எனப் புலம்பி, மதுரைத் தீயில் இடையிருள் யாமத்துப் புகுந்து விழுந்து மடிந்ததும், கவுந்தியடிகள் உண்ணா நோன்பொடு பெயர்ந்ததும், கொற்கையிலிருந்த பொற்றேர்ச் செழியன் மதுரை புகுந்து அரசு கைக்கொண்டதும் உணர்ந்து, என் ஊரடைந்தேன். ஆங்கே கண்ணகியும் கோவலனும் உற்ற துயருரைத்தேனாக, அது கேட்ட கோவலன் தாதையும் கண்ணகி தாதையும் துறவியராயினர். அவர்தம் மனைக்கிழத்தியர் மிக்க துயரெய்தி, இரங்கியிருந்து, உயிர் நீத்தனர். மாதவி தன் நற்றாயை நோக்கி, 'அம்மே, எம் மகள் மணிமேகலையைக் கணிகையர் கோலம் காணாதொழிக,' என்று சொல்லிக் குழல் களைந்து, துறவெய்தினள். மன்னர் மன்னவ, என் வாய்ச்சொற் கேட்டு இருவர் மடிந்தமையின், அக்குற்றந் தீர இந்நன்னீர்க் கங்கை யாடப் புகுந்தேன் யான்," என்றனன்.

அது கேட்ட மன்னவன், மாடலனை நோக்கி, 'என் மைத்துனன் கிள்ளி வளவன் செய்தி யறிதிரோ? பாண்டியனுடைய தன்மை யாது?' என்றான். அதற்கு மறு மொழியாக மாடலன், 'மன்னவ, நின்மைத்துனன் தன்னொடு ஒத்த பண்பினரான ஒன்பது மன்னரும் பொறாமையால் ஏவல் கேளாது தவறிழைத்தமை கண்டு, அவ்வரை வென்று விளங்குகின்றனன் வெற்றிவேற் செழியன் மதுரையில் வளம்குன்றியமை கண்டு, நாடு செழிக்குமாறு செய்யக் கண்ணகி யருள் பெற நினைந்து, அவளுக்கு ஆயிரம் பொற்கொல்லரை ஒரு பகலெல்லையில் உயிர்ப்பலியூட்டி மகிழ்வித்து, வாழ்வடைந்துளன்,' என்றான்.

அப்பொழுது ஞாயிறு மறைய மாயிருள்சூழ்ந்தது. மன்னன் விண்ணிற்றோன்றிய வெண்பிறையேர் வண்ணம் நோக்

கினன். உடனே, ஒளி நூற் புலவன் எழுந்து, 'மன்னவ, வாழ்க. நாம் வஞ்சி நீங்கி இன்றொடு எண்ணான்கு மதியமாயின,' என்றனன். மறுநாள் மன்னவன் மாடலனுக்குச் செம்பொன்னைப் பரிசாக நல்கி, நூற்றுவர் கன்னரை அவர் நாடு செல்ல விடுத்து, கனக விசயரைக் கொடுபோய் இருபெருந் தமிழ் வேந்தருக்கும் காட்டுமாறு சில தூதரை ஏவிச் செங்கதிர்ச் செல்வன் குண திசைக் குன்றத்துத் தோன்றியபோது தன் தானையோடும் புறப்பட்டு, வஞ்சி வந்து சேர்ந்தான்.

சின்னாளில் சோழனுக்கும் பாண்டியனுக்கும் கனகவிசயரைக் காட்டச் சென்ற தூதுவர் மீண்டும் வஞ்சி வந்து மன்னனைக் கண்டு, செங்குட்டுவன் செய்த அச்செயலை இருபெரு வேந்தரு மிகழ்ந்ததாகக் கூறினர். அது கேட்டுச் சேரன் மிக வெகுண்டான்.

அப்பொழுது நீலன் முதலிய அத்தூதரோடும் போந்த மாடல மறையோன், மன்னனை நோக்கி, "மன்னவ, நின் சீற்றம் தணிக. நீ அரசாளத் தொடங்கி ஐம்பதாண்டுகளாயின. இவ்வைம்பதாண்டுகளிலும் நீ உயிர்க்கு உறுதிபயக்கும் அறவேள்வி ஒன்றும் செய்யாதொழிந்தனை. செல்வம், இளமை, யாக்கை இவை நிலையா. நீயோ, நரை முதிர் யாக்கை யுடையோ னாயினை. ஆதலின், நீ அரசர்க்குரிய பெரு வேள்வி செய்க. அதனை விரைவிற் றொடங்குக," என்றனன்.

மன்னவன் உடனே வேள்வியை முறைப்படி யியற்றவல்லோரை ஏவி, வேள்விக்கு வேண்டுவன இயற்றக் கட்டளையிட்டுக் கனக விசயரைத் தன் வேள்வி முடியுமட்டும் தன் மந்திரியிட மிருக்கச் செய்து, நன்கு வகுக்கப்பெற்ற கோவிலிலே பலரும் புடைசூழச் சென்று, இமயக்கற்காலில் அழகு

பெறச் செதுக்கிய தெய்வஉருவைக் கடவுள்மங்கலம் செய்து, விழாக்கொண்டு, ஆண்டிருந்தனன். காவிரிப்பூம்பட்டினத்தில் காவற்பெண்டும், அடித்தோழியும், தேவந்தியும், 'கணவனை யிழந்த கண்ணகியைக் காண்டும்,' என்று புறப்பட்டு, மதுரை புகுந்து, அவ்வூர் வெந்தபடி யறிந்து, மாதரி மகள் ஐயையை யும் உடனழைத்து, வையைக் கரை வழியே சென்று, மலை யைத் தாண்டிச் சேரநாடு புகுந்து, வஞ்சியில் கண்ணகி கோட் டத்திருந்த செங்குட்டுவனைக் கண்டனர்; கண்டு, தாம் இன் னாரென உரைத்தனர். பின்பு அம்மூவரும் கண்ணகியை நோக்கிப் புலம்பினர். உடனே கண்ணகி, யாவரும் அறிய உருக்கொடு தோன்றிக் காட்சி தந்தாள். அது கண்டு செங் குட்டுவன், "ஆகா! இதுவென்ன தோற்றம்!" என்று வியந்துரைத்தான். கண்ணகி அவர்களை நோக்கி, "பாண்டி யன் தீதிலன். அவன் தேவர் கோனுக்கு நல்விருந்தாயினான். யான் இத்தெய்வ யாக்கையைப் பெறுதற்கு அவனே காரண னாயினான். ஆதலால், நான் அவன் மகள். திருச்செங்கோட் டில் யான் என் விளையாட்டு ஒரு நாளு மகலேன். நீங்கள் எல்லோரும் அங்கே வாருங்கள்," என்றாள்.

அப்பொழுது வஞ்சிமகளிர் பலரும் கூடிக் கண்ணகியை வாழ்த்தினர். யாவரும் சேர்ந்து அம்மானை வரியால் சோழனை யும், கந்துக வரியால் பாண்டியனையும், ஊசல் வரியால் சேரனை யும் பாடிவாழ்த்தினர். உடனே கண்ணகி, "சேரன் செங்குட் டுவன் வாழ்க," என்று வாழ்த்தினாள்.

இவ்வாறு கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்து வணங்கியிருந்தசேரன் செங்குட்டுவன், தேவந்தியை நோக்கி, "நீ கூறிய மணிமேகலை யார்? அவள் துறத்தற்கு ஏது யாது? சொல்," என்றான். அவள், "மாதவி மகளாகிய மணிமேகலை

தகுந்த வயதடைந்தமைகண்டு, நற்றாய் மாதவியை யடைந்து, அச்செய்தி யுரைத்தாள். அது கேட்ட மாதவி, தன் மகளை யழைத்து, அவள் குழல் களைந்து, அவளைத் துறவறம் படுத்தனள். அதனை யறிந்த அரசனும் ஊராரும் மிக வருந்தினர். இல்லறங் கொள்ளவேண்டிய இப்பருவத்து நங்கை மணிமேகலை துறவெய்தியமையால், யான் புலம்பினேன்,'' என்றாள். அப்பொழுது அவளிடம் உறைந்த சாத்தன் என்ற தெய்வம் அவள்மேற் கொள்ளலும், அத்தேவந்தி தெய்வமுற்றெழுந்து, மாடலனை நோக்கி, ''மறையோய், திருச்செங்கோட்டில் ஒரு சுனையுளது. அதில் மூழ்குவோர் முன்னைப் பிறவியராவார். அந்நீர் நின் கரகத்துளது. அதனை இதோ நிற்கும் அரட்டன் என்னும் செட்டியினுடைய இரட்டைப்பெண்களின்மேலும், திருவனந்தையைச் சேர்ந்த சேடக் குடும்பியின் சிறுமகளாகிய இவள் மேலும் தெளிக்கக்கடவாய். நான் பாசண்டச்சாத்தன்,'' என்றாள்.

தேவந்தி தெய்வமுற்றெழுந்து கூறிய இச் செய்திகளைக் கேட்ட மன்னவன் விம்மிதமெய்தி,மாடலன் திருமுகம் நோக்கினன். அந்தணனே, தன் கரக நீரை அம்மூன்று பெண் குழந்தைகள் மேலும் தெளித்தான். உடனே அரட்டன் மகளிராய இரட்டைப் பெண்கள் கோவலன் நற்றாயும் கண்ணகி நற்றாயு மாயினர். சேடக் குடும்பியின் மகளோ, ஆயர் குல மகள் மாதவி யாயினள். இது கண்டு யாவரும் மிக்க விந்தையும் பெருமகிழ்வு மெய்தினர். மாடல மறையோன் அரசனை வாழ்த்தினன். அரசனும் நித்தலும் விழாவணி கண்ணகி கோட்டத்து நிகழுமாறு ஏவி, தேவந்தி கையால் பூவும் புகையுமிட்டுக் கண்ணகியை வழிபடுமாறருளி, மும்முறை வலம் வந்து, வணங்கி நின்றனன்.

அப்பொழுது ஆரிய மன்னர் கனக விசயரும், குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும், இலங்கைக் கயவாகு வேந்தனும் கண்ணகியை நோக்கி, "எங்கள் நாட்டில் யாங்கள் நின்னை நோக்கிச்செய்யும் வேள்வியிலும் வந்தருள வேண்டும்," என்று வேண்டலும், 'தந்தேன் நல்வரம்,' என்று ஒரு குரல் எழுந்தது. அதுகேட்டுச் சேரனும் ஏனையரும் மாடலனோடும் மீட்டும் பணிந்து, வேள்விச் சாலை வந்து புகுந்தனர். அப்பொழுது ஆசிரியர் இளங்கோவடிகள் கண்ணகி முன் வந்து, பணிந்து நின்றனர். உடனே கண்ணகி தேவந்தியின்மேல் தோன்றி, அவரை வாழ்த்தி, "ஐய, நீ நின் தந்தை மடியிலிருந்தபோது வானூற் புலவன் ஒருவன் தோன்றி, நீ மண்டல மாளும் மன்னவனாவாய் என்னலும், நின் முன்னவனாகிய செங்குட்டுவனுக்காக அரச வாழ்க்கையைத் துறந்தாயன்றோ? நீ அந்தமில் இன்ப வீட்டை அரசாளும் பெருவேந்தனாகுவை," என்றுரைத்தருளினள்.

## 4. அறம்

இவ்வுலகத்தே உயிர்கள் அடைதற்கரியதாகி விண்ணவரும் நண்ணுதற் கெண்ணும் பிறப்பு மக்கட் பிறப்பே. அது பெற்றும், கூன் குருடு செவிடு நீங்கிப் பிறத்தல் அரிது. அவ்வாறு நீங்கிப் பிறப்பினும், நல்லாசானை யடுத்து, உற்றுழியுதவி, வழிபாடு செய்து கற்று, கற்றவழி நிற்றல் மிகவரிது.

இறைவர் திருவாய் மலர்ந்தருளிய நல்லற நூல்களிற் கூறியபடி, மனத்துக்கண் மாசில்லாமல், பொறாமை, அவா, வெகுளி, கடுஞ்சொல்லாகிய இந்நான்கினையுங் கடிந்து, வாழ்நாள் வழியடைக்குங் கல்லும் மெய்யின்பந் தருவதும் சிறப்

புஞ் செல்வமும் பயப்பதுமாகிய அறத்தினை, இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையாவாகையால் நாடோறுஞ்செய்ய வேண்டும். அறமென்பது பெரியோரால் வரையறுக்கப்பட்ட வொழுக்கமே. அஃது இல்லறம் துறவறமென இருவகைப் படும்.

இல்லறமென்பது, நற்குண நிறைந்த கற்புடைய மனைவி யோடு அன்பும் அருளும் கொண்டு விருந்தினரையும் அருந்த வரையும் இனிய சொல்லோடு ஏற்று மகிழ்வித்து, பலரும் தன்னைப் புகழும்படி, நல்ல பிள்ளைபெற நோற்றிருக்கும் தன் மையது. இல் வாழ்வான் முன் கூறியபடி இல்லற நடாத்துவ தோடு, இன்னும் பல அரிய குணங்களையும் கொண்டிருக்க வேண்டும். தனக்குப் பிறர் செய்த கொலை யொத்த தீமையை யும் பொறுத்துப் பொன்றுந் துணையும் புகழ் படைத்து, அவர் செய்த தினைத்துணை நன்றியையும் பனைத்துணையாகக் கருதி, அதை எழுமையும் மறவாது, மனத்தைத் தீ நெறிக்கட் செல்லாது அடக்கி, உலகத்தோ டொட்ட வொழுகல் வேண் டும். பிறர் பொருளை வெஃகாது, பிறர்க்குப் பகுத்துண்டு, புறஞ்சொற் கடிந்து, தீமை செய்ய வஞ்சியவனாய், நன்மை யையே நாடவேண்டும். இவ்வாறு இல்லறம் புரிதலின் நல் லறம் பிறிதொன்றின்று. அவ்வில் வாழ்வானே வீடு கருதி முயல்வாரு ளெல்லாந் தலை யாவான்.

துறவறமென்பது, கல்வி கேள்விகளில் முதிர்ந்து, இல் லந் துறந்து, நிலையாமை யுணர்ந்து, பொருளும் இன்பமும் நீக்கி, அருளுடன் உடற்பிணி யாவும் பொறுக்கும் மனவாற் றலோடு விண்ணவரும் வியக்கும் பேரொழுக்கமும் வாய்மை யும் தவமும் தூய்மையுங் கொண்டு, புல் புழு முதலிய துய ருறினும் பரிந்தோம்பி, வெயிலென்றும் மழையென்றும்

பாராது பல விடங்களிலு மலைந்து, ஊனுணவொழித்து, சருகு முண்டு, கானீர் குடித்து, இவ்வாறு ஒழுகும் தன்மையது. இவ்வாறு துறவறத்துப் பிறனாற் பழிக்கப்படாது வாழ்பவ னும், இல் வாழ்வானைப் போலவே வீடு கருதி முயல்வாரு ளெல்லாந் தலையாக வைத்தெண்ணப்படுவான்.

இல்லறந் துறவற மிரண்டும் வீடு தருவனவே. திருநீல கண்டர், இயற்பகையார், இளையான்குடிமாற நாயனார், அமர் நீதிநாயனார், அப்பூதியடிகள் முதலிய சிவனடியார் இல்லறத்தி ருந்தும்; திருநாவுக்கரசு சுவாமிகள், மெய்கண்ட தேவநாயனார், மாபாடியம் சிவஞான சுவாமிகள் முதலிய திருத்தொண்டர் துறவறத்திருந்தும் வீடடைந்தவ ராவர்.

இன்னோர் முன்கூறியபடி அறமியற்றியதால்மட்டும் வீடு பெற்றனரா? இல்லை, இல்லை. அத்துடன் இறைவரடிக்கன்பு செய்தமையாலேயாம். ஒருவன் மேற்கூறியபடி இல்லறத் தேனும் துறவறத்தேனும் நின்று, முன்னைப் பழம்பொருட் கும் முன்னைப் பழம்பொருளாகிய சிவபெருமானாரை மனத் தால் நினைந்து, வாக்காற் றுதித்து, கைகளால் பல மலர்களைக் கொண்டருச்சித்து, வழிபட்டு வாழும் செயலாகிய அற முடையனேல் இறைவரும் அருள்புரிவார். இதனாலே அரனா ரடிக்கன்பு செய்கையே, மாண்பற மெனப்படும். சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியரும்,

"காண்பவன் சிவனே ஆனால் அவனடிக் கன்பு செய்கை
மாண்பறம்; அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்கள் எல்லாம்
வீண்செயல் இறைவன்சொன்ன விதிஅறம் விரும்போன்றில்
[லான்
பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே."

என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார். மேலும், உலகினர் பாவமெனக் கருதும் தீச்செயல்களும், அரனாரடிக்கன்பு காரணமாகச் செய்யின், அறமேயாம். தண்டீச நாயனார் சிவ பூசைக் கிடையூறு செய்த தந்தையார் காலைத் தண்டத்தாற் றடிந்த செய்கை, அதிமேன்மையான புண்ணியமாகச் சிவ பிரானாரற் கொண்டாடப்பட்டு, அவருக்கு அடியார் யாரு மடைய வொண்ணாத பெரும்பதவியை யீந்தது. அரனாடி மறந்து செய்யும் புண்ணியமும் பாவமேயாகும். நான்முகன் மகனாகிய தக்கன்,..இறைவரடி மறந்து செய்த பெருவேள்வி யும், இறைவராற் பெரும்பாவமாக இகழப்பட்டு, அவனுக் குப் பெருங்கேடு தந்தது.

மேலும். இந்திரன் முதலிய விண்ணவர் பதங்களியாவும் அழியும் தன்மையன. இந்திரன் பலகால் சூரபதுமன் முத லிய வசுரரால் தன் பதமிழந்து தவித்தனன். ஒரு காலத்துப் பொன்னாடு பானு கோபனால் சாம்பராக்கப்பட்டது. இந்தி ரன் மகனாகிய சயந்தன் பானு கோபனால் சிறையிடப்பட் டான். ஆகையால், இறைவரருளும் வீட்டின்பமே என்று மழியாச் செல்வமாம். கல்வியிற் பெரியராகிய கச்சியப்ப சிவாசாரியரும், கந்த புராணம் அமரர் சிறைபுகு படலத்து,

"காடு போந்தனன் இந்திரன் ; பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது ; சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான் ;
நாடல் விண்பதச் செய்கையீ தெம்பிரான் நல்கும்
வீட தேயலாற் றன்பறும் ஆக்கம்வே றுண்டோ ?"

என்றார்.

இதுகாறு மெழுதியவற்றால் பெறற்கரிதாகிய மக்கட் பிறவி பெற்றார் இன்பங்கருதிக் கடைப்பிடித் தொழுகவேண்

டுவது இல்லறந் துறவறமெனு மிரண்டுளொன் றென்பதூ உம், மெய்யின்பம் பயப்பன இந்திரன் நான்முகன் முதலிய வானவர் பதங்களல்ல வென்பதூஉம், அழியா இன்பந் தரு வது சிவபிரானாருளும் வீடொன்றே யென்பதூஉம், அவ் வீடு தருவது அரனாடிக்கு அன்பு செய்தலாகிய மாண்பறம் ஒன்றே யென்பதூஉம் உள்ளங்கை நெல்லிக்கனியேபோல வறியலாம். ஆகையால், நமனுடை முறைநா ளாவ திதுவென வறியாத நாம், 'நாளை; நாளை,' என்னாது, நல்லொழுக்கமுடை யவராய், இன்னே இறைவரடிக் கன்பொடு பூசனையாற்றித் திருவருளா லென்றுங் குன்றா வின்பம் பெறுவோ மாக.

## 5. கிறித்தவர் மாதங்கள்

கிறித்தவர்கள் தங்கள் மாதங்களுக்கு ஜனவரி, பேப்ருவரி, மார்ச்சு, ஏப்பிரல், மே, ஜூன், ஜூலை, ஆகஸ்டு, செப்டெம் பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் எனப் பெயரிட்டுள்ளார்கள். இம்மாதங்கள் எவ்வாறு இப்பெயர் பெற்றன என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் பொருள்.

பண்டைக் காலத்து உரோமானியர் பல சிறு தெய்வங் களை வழிபட்டு வந்ததோடு, அவைகளிடத்தில் அளவி லடங் காத அன்பும் கொண்டிருந்தனர். அதனால், அவர்கள் அவை களின் பெயர்களிற் சிலவற்றைத் தங்கள் மாதங்களிற் சிலவற் றுக்குப் பெயராக அமைத்திருக்கின்றார்கள். அதனால், அத் தெய்வங்களின் வழிபாடு வெகு காலத்திற்கு முன்னாலேயே இறந்தொழிந்திருப்பினும், இக்காலத்திலும் உலகத்தா ரனை வரும் அவைகளின் பெயர்களை நினைக்க வேண்டியவ ராகின் றனர்.

அத்தகைய தெய்வங்களுள் ஒன்று 'ஜானஸ்' (Janus) என்பது. அதற்கு முன் பக்கத்தில் ஒரு தலையும் பின் பக்கத்தில் ஒரு தலையுமாக இரண்டு தலைகளிருந்தன. அதனால், அது முன்னும் பார்க்கும் ; பின்னும் பார்க்கும். அதனுடைய கையில்ஒரு திறவுகோலிருந்தது. அத்தெய்வத்தைவானுலகத்தின் வாயிற்காவலனென்றும் தங்கள் வாயில்களையும் கதவுகளையும் பாதுகாப்பவனென்றும் அவர்கள் நம்பி யிருந்தார்கள். அதனால், தெய்வ அன்புள்ள ஒவ்வோர் உரோமானியனும், எச்செயலைச் செய்யத் தொடங்கினாலும், அன்றி எச்செயலை முடிக்கவேண்டினாலும், முதன்முதலில் ஜானஸையே வணங்கி வேண்டுவன்.

ஜானஸுக்குப் பல இடங்களிலும் கோவில்க ளிருந்தன. அவைகள் ஓராண்டுக்குப் பன்னிரண்டு மாதங்க ளிருத்தல் போலப் பன்னிரண்டு கதவுகள் உடையனவா யிருந்தன. நாட்டில் போர் நிகழும் காலங்களிலெல்லாம் அக்கோவில்கள், இரவும் பகலும் அடைக்கப்படாமல், திறந்தே வைக்கப்பட்டிருக்கும். அமைதி நிலவுங் காலங்களிலெல்லாம் ஒரு நாளும் திறக்கப்பெறாமல், அவை அடைத்தே வைக்கப்பட்டிருக்கும்.

அவ்விருதலைத் தெய்வமாகிய ஜானஸ் பெயராலேயே முதல் மாதமாகிய ஜனவரி (January) என்பது அமைந்திருக்கிறது. ஆண்டில், முதல் மாதத்துக்கு முன்னும் பின்னும் பார்க்கக்கூடிய அவ்விருதலைத் தெய்வத்தின் பெயர் அமைந்தது மிகவும் பொருந்தும். எவ்வாறெனில், ஒவ்வொருவரும் ஆண்டின் தொடக்கத்தில் முன் ஆண்டில் நடந்ததைச் சிந்தித்துப் பின் தொடங்கும் ஆண்டில் நடக்க இருக்கும் செயல்களையும் எண்ணிச் செயல்களைத் துணிதல் வேண்டும் என்

பதை அது நினைப்பூட்டத் தகுந்த நிலையிலுள்ளது. இம்மாதம் முப்பத்தொரு நாட்களை யுடையது.

ஜானஸ் என்ற தெய்வத்தைப்போலவே 'உலூப்பேர்க்கஸ்' என்ற தெய்வத்தையும் உரோமானியர் வழிபட்டு வந்தனர். அத்தெய்வத்தை நோக்கிச் சிறந்த திருவிழா நடைபெற்றது. அவ்விழாவின் பெயர், 'பேப்ருவா' (Februa) என்பது. அவ் விழாவின் பெயரால் இரண்டா மாதம் 'பேப்ருவரி' (February) என வழங்கப்பெற்றது. அஃது, அழுக்கைப் போக்கிச் செம்மை செய்யும் விழாவாக அவர்களால் கொண்டாடப்பட்டது. அவர்கள் அதை மன அழுக்கைப் போக்கும் திருநாளாகக் கருதினர்களேனும், அவ்விழாவை அளவுக்கு மிஞ்சி உண்பதிலேயே கொண்டாடினர்கள். இக்காலத்திலும் மேல் நாட்டில் பெப்ருவரி மாதக் கடைசியிலே வீடு வாயில்கள் துப்புரவாக்கப் பெறுகின்றன.

ஒரு காலத்தில் இம்மாதமே இறுதி மாதமாக விருந்தது. அதாவது இற்றைக்கு இரண்டாயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்னர், (கி. பி. 450) இது ஜனவரிக்கு முன் இருந்தது. பின்னர், இஃது இரண்டாவது மாதமாக ஜனவரிக்குப் பின் வைக்கப்பெற்றது. அதற்குச் சில காலத்தின் பின் 'மார்ச்சு' மாதம் முதல் மாதமாக எண்ணப்பெற்றது. அதனல், பெப்ருவரி மாதம் மறுபடியும் கடைசி மாதமாயிற்று. அதற்குச் சில காலத்திற்குப் பின் ஜூலியஸ் சீசர் என்ற அரசர் காலத்திலே பழையபடி ஜனவரி முதன் மாத மாயிற்று. அது முதல் இம்மாதம் இரண்டாவது மாதமாகவே இருந்து வருகிறது. இம்மாதத்தை முதன் முதல் ஏற்படுத்தியவர் நூமா என்பவர் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. இம்மாதத்தின் பதினைந்தா நாளையில் 'பெப்ருவா,

என்ற விழாவானது கொண்டாடப்பெற்றது. இம்மாதம் இருபத்தெட்டு நாட்களையுடையது. ஆனால், நான்காண்டு களுக்கொருமுறை இருபத்தெட்டோடு ஒரு நாள் கூட்டப் பெறுகிறது. இதனால், இஃது ஒன்றுதான் நிலையற்ற மாத மாகவிருக்கிறது. ஓர் ஆண்டு முந்நூற்றறுபத்தைந்து நாள் ஆறு மணிகளைக் கொண்டிருத்தலினாலே, இவ்வாறு மணி களும் நான்காண்டுகளில் ஒரு நாளாகும். அவ்வொரு நாளும் மிகக் குறுகிய அளவையுடைய இம்மாதத்தோடு சேர்க்கப் பெறுகிறது.

உரோமானியரின் போர்க்கடவுளின் பெயர் 'மார்ஸ்' என்பது. இஃது அச்சம், ஓட்டம் என்ற குதிரைகளால் இழுக்கப்பெறும் தேரிலே உலவிச் செல்லும். இஃது ஒரு பெரிய ஈட்டியை வீசிக்கொண்டு, இருப்புப் பரிசையை உய ரத் தூக்கிக்கொண்டு, மேகமண்டிலத்தை அளாவிய தலைக்காப் பணிந்து, பார்ப்பவர் மனத்தில் அச்சத்தை உண்டுபண்ணும்.

உரோமானியர் இத்தெய்வத்தைப் போர்த்திறமையோடு இன்னும் பல தன்மைகளும் பொருந்தியதாக எண்ணினர். இது மிகவும் வல்லமையுடையதாதலால், இதனால் செய்து முடிக்க முடியாத செயலே இல்லையென அவர்கள் நம்பினார் கள். இதனுடைய பீடத்திலே குதிரை, ஆடு, ஓநாய், பற வைகள் இவைகளைப் பலியிட்டு,அவர்கள் மழைபொழியும்படி இதை வேண்டிக்கொள்வார்கள். போர் வீரர்கள் சண்டைக் குப் போகும் காலங்களிலே மார்ஸுக்கு விருப்பமான கோழிக்குஞ்சுகளை ஒரு கூட்டிலடைத்து, அக்கூட்டைத் தம் மோடு கொண்டுபோவார்கள். சண்டை தொடங்குமுன் அவர்கள் அக்கூட்டிலே கொஞ்சம் தானியத்தைப் போட்டு, அவைகளை உற்று நோக்குவார்கள். அவைகள் அவ்வுணவை

ஆவலோடு தின்றால், போர்க் கடவுளுடைய அருள் தங்கள் பக்கம் இருக்கிறதனால் தங்களுக்கு வெற்றி கிடைக்குமென்றும், தின்னவில்லை யானால், அக்கடவுளுடைய அருள் தங்களுக்கில்லையாதலால், தங்களுக்குத் தீமை வருவது உறுதி யென்றும் எண்ணுவார்கள். இடியும் மின்னலும் இத்தெய்வத்தாலே உண்டாயின என்று அவர்கள் நம்பியிருந்தார்கள். அவர்கள் ஏதாவது ஒரு செயலைத் தொடங்குமுன் இக்கடவுளிடம் விடை கேட்கப் போவதுண்டு. அக்காலத்தில் அவர்கள் இருக்கும் இடத்திலுள்ள மரத்திலே மரங் கொத்திப் பறவை வந்து கொத்துதல் வேண்டும். கொத்தினால், அக்கடவுள் தங்களுக்கு நல்ல வாக்குக் கொடுத்ததாகவும், கொத்தவில்லை யென்றால், நல்ல வாக்குக் கொடுக்கவில்லை யென்றும் அவர்கள் எண்ணினார்கள்.

இவ்வழக்கத்தைத் தமிழ் நாட்டில் சில இடங்களில் சிறு தெய்வ வழிபாட்டினரிடம் இக்காலத்தும் நாம் காணலாம். ஆனால், இவர்கள் மரங் கொத்திப் பறவைக்குப் பதிலாகப் பல்லியைக் கொண்டிருக்கின்றார்கள். தாங்கள் குறித்த பக்கத்தில் பல்லி சத்தமிட்ட தென்றால், தங்கள் தெய்வம் நல்ல வாக்கருளியதாக இவர்கள் நம்புகின்றார்கள்.

மேலே குறித்த 'மார்ஸ்' (Mars) என்ற தெய்வத்தின் பெயராலே மூன்றாவது மாதமாகிய 'மார்ச்சு' (March) என்பது வழங்கப் பெறுகிறது. இது முப்பத்தொரு நாட்களையுடையது.

நான்காவது மாதம் 'ஏப்பிரல்' என்பது. இதன் பெயர் கடவுளரின் பெயரால், அல்லது விழாவின் பெயரால் அமைந்த தொன்றன்று. இதுவே இளவேனிற் காலத்தின் தொடக்கம். இம்மாதத்திலே அழிந்துபோன இலைகள்

பூக்களெல்லாம் மறுபடியும் தோன்றி எல்லோருடைய மனத்தையும் மகிழச் செய்யும். இவ்வாறு எல்லாப் பொருள்களும் தோன்றுவதையும் மலர்வதையும் கண்ட உரோமானியர், 'ஓம்னியா ஏப்பிரட்' (Omnia Aperit) என்று மகிழ்ந்து கூவினர். இதன் பொருள், 'இஃது யாவற்றையும் தோற்றுவிக்கிறது,' என்பது. இதனால், தொடக்கம் என்ற பொருளையுடைய உரோமானியச் சொல்லாகிய 'ஏப்பிரட்' (Aperit) என்பதே 'ஏப்பிரல்' (April) என வழங்குவதாயிற்று. இம்மாதம் முப்பது நாட்களையுடையது.

ஐந்தாவது மாதம் 'மே' என்பது. இது, 'மேயா' (Maia) என்றபெண் தெய்வத்தின் பெயரால் வழங்கப்பெறுவது. அட்லாஸ் என்ற தெய்வத்தின் மகளே மேயா என்பவள். அட்லாஸ் நாம் வாழும் பூமியைத் தோளிற் சுமந்துகொண்டிருப்பதாகஉரோமானியர் எண்ணினர். அவனுக்கு ஏழு பெண்மக்களிருந்தார்கள். அவ்வெழுவரும் ஒரு மலையில் வாழ்ந்து வந்தனர். அவர்களிற் சிறந்தவளே மேயா. அவளுடைய மகனே 'மேர்க்குரி' என்பவன். அவன் விண்ணில் வாழும் தெய்வங்களிடமிருந்து தூதுவனாக அடிக்கடி மண்ணுலகத்துக்கு வருவதாகக் கூறுகின்றனர். தெய்வங்களின் தந்தையாகிய ஜூப்பிட்டர் இந்த ஏழு பெண்களையும் தூக்கி, விண்ணில் ஒரு கூட்டமான விண்மீன்களாக வைத்துவிட்டான். விண்ணிற் காணப்படுகின்ற 'பிளையாடிஸ்' (Pleiades) என்று சொல்லப்படுகின்ற ஆறன் கூட்டமாகிய விண்மீன் தொகுதியே மேயாவும் அவளுடன் பிறந்தவர்களுமாகக் கருதப்படுகிறது. அக் கூட்டத்தில் ஏழாவது விண்மீன் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதற்குக் காரணம் பின்வருவது: அட்லாவின் ஏழாவது மகள், 'சிசிபஸ்' என்ற ஒருவனை மணந்

தனள். அவன் எக்காலத்திலும் மலைமேலே ஒரு பெரிய கல்லை ஓயாமல் உருட்டிக்கொண் டிருக்கும்படியாகக் கடவுளரால் வெவ்வுரை வழங்கப்பெற்றபடியால், அவள் கவலையினால் தன் முகத்தை மறைத்துக்கொண்டனள். அதனாலே, அவளைக் குறிக்கும் விண்மீன் தெரிவதில்லை. இந்த 'மே' மாதம் முப்பத்தொரு நாட்களையுடையது.

ஆறாவது மாதம் 'ஜூன்' (June) என்பது. இது 'ஜூனோ' (Juno) என்ற பெண் தெய்வத்தின் பெயரால் வழங்கப்பெறுவது என்று சிலர் கூறுகின்றனர். கடவுளரின் தந்தையான ஜூப்பிட்டர் என்பவன் மனைவியே ஜூனோ என்பவள். அவள் பேரழகுடையவளெனினும், மிக்க பொறாமையுடையாள். பேரிரைச்சலிடும் மயில்களால் இழுக்கப் பெறும் தேரில் அவள் உலாவி வருவாள். வேறு சிலர் ஜூன் என்னும் பெயர் அப்பெண் தெய்வத்தின் பெயரால் அமையவில்லை என்றும், உரோமானியருள் ஒரு சிறந்த குடும்பத்தைச் சார்ந்தவனாகிய 'ஜூனியஸ்' (Junius) என்பவன் பெயராலே வழங்கப்பெறுகிறது என்றும் கூறுகின்றனர். இவன் சிறிதும் அடக்கமாவது நல்லொழுக்கமாவது இல்லாதவன் என்றும், கொடுமை மிக உடையவனென்றும் சொல்லப்படுகிறான். இதனால், இம்மாதம் யார் பெயரால் அமைந்திருந்தாலும் சரி; ஜூனோவும் ஜூனியஸும் தீயவர்களே. இம்மாதம் முப்பது நாட்களையுடையது.

ஏழாவது மாதம் 'ஜூலை' (July) என்பது. இஃது உரோமானியப் பேரரசராகிய 'ஜூலியஸ் சீசர்' (Julius caesar) என்பவரது பெயரால் அமைந்தது. அவர் மிகவும் வல்லமையும் அறிவும் திறமையும் உடையவர். அவர்தான் முதன் முதலிலே இங்கிலாந்தின்மேற் படையெடுத்துச்

சென்று, அங்கு வாழ்ந்திருந்த அறிவு நிரம்பா மக்களை வென்று, சரியான சட்ட திட்டங்களை யெல்லாம் அங்கே ஏற்படுத்தி ஆண்ட பெரியார். அவர் காலத்தில் ஆண்டு மார்ச்சு மாதத்தில் தொடங்கி யிருந்தது. அதை மாற்றிப் பழையபடி ஜனவரி மாதத்தை ஆண்டின் தொடக்கமாகச் செய்தவர் அவரே. இதனால், ஐந்தாவதாக இருந்த இம்மாதம் ஏழாவதாயிற்று. இம்மாற்றத்தின்முன் இம்மாதத்தின் பெயர் 'குவின்டிலிஸ்' (Quintilis) என்பது. உரோமானிய மொழியாகிய இதன் பொருள், ஐந்தாவது மாத மென்பது. பேரரசராகிய சீசர் இம்மாதத்திலே பிறந்தவர். ஆதலின், அவர் தம்முடைய பெயரை இம்மாதத்துக்கு வைத்தார். மேலும், ஜனவரி, பெப்ருவரி, மார்ச்சு, ஏப்பிரல், மே, ஜூன் ஆகிய ஆறு மாதங்களும் வேறு காரணங்களால் அமைந்திருப்பதால், எக்காலத்திலும் அவைகளுக்கே அவை அமையும். ஆனால், அடுத்த இம்மாதமோ, ஐந்தாவது மாத மென்ற பெயரை யுடையதாக இருந்தது. அதனாலே, தமது ஏற்பாட்டின்படி ஏழாவது மாதமான இதற்குத் தம்முடைய பெயரை ஜூலியஸ் சீசர் இட்டார். இது முப்பத்தொரு நாட்களை யுடையது.

எட்டாவது மாதம் 'ஆகஸ்டு' என்பது. இஃது இப் பெயரைப் பெறுவதன் முன், 'சேக்ஸ்டிலிஸ்' (Sextilis) என வழங்கப்பெற்றது. குவின்டிலிஸ் என்ற பெயர் ஜூலை யென மாற்றப்பட்ட பின்னரும், சிலகாலம்வரை எட்டாவது மாதம் செக்ஸ்டிலிஸ் என்ற பெயராலேயே வழங்கப்பெற்றது. உரோமானிய மொழியாகிய செக்ஸ்டிலிஸ் என்பது, ஆறுவது மாதம் எனப் பொருள்படும். ஆதலின், இப்பெயர் இம்மாதம் உண்மையில் எட்டாவது மாதமான பின் இதற்குப்

பொருந்தாதாயிற்று. அதனால், சீசருக்குப் பிறகு அரசாண்ட 'ஆகஸ்டஸ்' (Augustus)என்பவருடைய பெயரால் இம்மாதம் வழங்கப்பெறுவதாயிற்று.

ஆகஸ்டஸ் என்பார் ஜூலியஸ் சீசருடைய மருகர். அவருடைய பழைய பெயர் 'அக்டாவியஸ்' என்பது. அவர் முதலில் 'ஆண்டோனி' என்பவரோடும் 'லேப்பீடியஸ்' என்பவரோடும் சேர்ந்து அரசாண்டார். கடைசியில் அவரே தனி அரச ரானார். அவர் தமது நாட்டு முன்னேற்றத்திற்கு மிகவும் உழைத்தவர். அதனால், குடிகள் அவருடைய பெயரை 'உயர் குடிப் பிறப்பினன்,' என்று பொருள்படும் 'ஆகஸ்டஸ்' என மாற்றி யழைத்தார்கள். குடிகளுடைய வேண்டுதலினாலே அவர் தமது பெயரை இம்மாதத்துக் கிட்டனர். வேறொன்றுக்கிடாமல் இம்மாதத்துக்குத் தமது பெயரை அவர் இடுவதற்குக் காரணம், அவர் இம்மாதத்தை மிகவும் சிறப்பாகக் கருதினதே யாகும். இதை அவர் சிறப்பாகக் கருதிய காரணம், இம்மாதத்திலே போர்முடிந்து வெற்றியுடன் அவர் அரச ரானதே. மேலும், இம்மாதத்திலே அவர் 'ஈஜிப்டு' நாட்டை வென்றார்.

ஆகஸ்டஸுடைய ஆளுகைக் காலம் மிகச் சிறந்ததாக வரலாற்றாசிரியரால் பாராட்டப் பெறுகிறது. உரோமாபுரியைப் பேரழகுடையதாக விளங்குமாறு பளிங்குக் கற்களால் கோவில்களையும் மாளிகைகளையும் கட்டுவித்தவர் அவரே. அந்நாட்டில் பற்பல இடங்களிலும் பெரிய நூல் நிலையங்களைத் தோற்றுவித்தவரும் அவரே. அவர் காலத்திலே மிகச் சிறந்த உரோமானியப் புலவர்கள் திகழ்ந்தார்கள். இத்தனைக்கும் மேலாக அவர் காலத்திலே கிறித்தவச் சமயத் தலைவராகிய ஏசு கிறிஸ்து நாதர் தோன்றினார்.

இம்மாதம் ஆகஸ்டு என்ற பெயரை யடைவதற்கு முன் இது முப்பது நாட்களேயே உடையதாக இருந்தது. "நம் முன்னோரான ஜூலியஸ் சீசர் பெயரா லான மாத மாகிய ஜூலைக்கு முப்பத்தொருநாட்க ளிருக்கின்றன. நம்முடைய பெயராலான மாதத்திற்கு முப்பது நாட்களே உள," என்று ஆகஸ்டஸ் எண்ணுவரோ என எண்ணி, உரோமானியர் முப்பத்தொரு நாட்களையுடைய அடுத்த மாதத்திலிருந்து ஒரு நாளை யெடுத்து ஆகஸ்டோடு சேர்த்து, அதையும் முப்பத்தொரு நாட்களையுடைய மாத மாக்கினர். அது முதல் இதற்கடுத்த 'செப்டெம்பர்' மாதம் முப்பது நாள் மாத மாயிற்று.

ஒன்பதாவது மாதம் 'செப்டெம்பர்' (September) என்பது. இதில் 'செப்டெம்' (Septem) என்பதன் பொருள், 'ஏழு,' என்பது. இஃது இப்போது ஒன்பதாவது மாதமாக இருந்தாலும், ஒரு காலத்தில் ஏழாவது மாதமாக இருந்தது என்பதைக் காட்டுவதற்கு இதன் பெயரே சான்று பகர்கின்றது. இது பேரரசர் ஆகஸ்டஸ் காலத்தில் ஏற்பட்ட மாற்றத்தின் பின் முப்பது நாட்களையுடையதாக இருக்கிறது.

பத்தாவது மாதம் 'அக்டோபர்' (October) என்பது. இதன் பெயரிலுள்ள 'அக்டோ' என்னும் சொல்லின் பொருளால், இது பண்டைக்காலத்து எட்டாவது மாதமாக இருந்தது என்பதை அறியலாம். இது முப்பத்தொரு நாட்களை உடையது.

பதினோராவது மாதம் 'நவம்பர்' (November) என்பது. முன்னொரு காலத்தில் இஃது ஒன்பதாவது மாதமாக இருந்ததென்பதை இதன் பெயரிலுள்ள 'நவம்' என்னும் சொல் காட்டுகிறது. இது முப்பது நாட்களையுடையது.

பன்னிரண்டாவது மாதம் 'டிஸம்பர்' (December) என்பது. இதன் பெயரிலுள்ள 'டிஸம்' என்னும் சொல் 'பத்து,' எனப் பொருள்படும். அதனல், இஃது ஒரு காலத்தில் பத்தாவது மாதமாக இருந்தது என்ற உண்மை புலனுகிறது. இது முப்பத்தொரு நாட்களை யுடையது.

மேலே கண்ட செப்டேம், அக்டோ, நவம், டிஸம் என்ற சொற்கள் அவைகள் குறிக்கும் பொருளுடனே வடமொழியில் 'சப்தமம்' என்றும், 'அஷ்டமம்' என்றும், 'நவமம்' என்றும், 'தசமம்' என்றும் அமைந்து கிடப்பது ஆராய்ச்சியாளர் குறித்துணரற்பாற்று. பொதுவாக மாந்தர் பழமையை மாற்றுவதில் அச்சமுடையவராகவும் துணிவற்றவராகவுமேஇருக்கின்றனர். இதனலேதான் செப்டெம்பர், அக்டோபர், நவம்பர், டிஸம்பர் ஆகிய பெயர்கள் இம்மாதங்களுக்குச் சிறிதும் பொருத்தமற்றவைகளா யிருந்தாலும், இவைகள் யாதொரு மாறுபாடும் செய்யப்பெருமல் அப்பழைய பெயர்களாலேயே இன்றும் வழங்கப்பெறுகின்றன. மேலும், கிழமைகளுக்கு ஏற்பட்ட பெயர்களைப்போலவே மாதங்களின் பெயர்களிற் பல சிறு தெய்வங்களைச் சேர்ந்த பெயர்களாலே அமைத்திருந்தாலும், அவைகளையும் கிறித்தவர்கள் தம்மவைகளாகவே கொண்டு வழங்கி வருகின்ருர்கள்.

## 6. கண்ண பிரானர் தூது : பகுதி-1

(சஞ்சய முனிவரும் உலூக முனிவரும் தூது போய் மீண்டபின், தருமராதியர் அரவக்கொடியோனிடம் கண்ண பிரானரைத் தூதனுப்பி நாடு பெறத் துணிகின்றனர்.)

தருமர்:—(கண்ண பிரானரை நோக்கி) பெரியீர், உமக்கு எல்லாம் தெரியுமன்றே? அரவக்கொடியோன் போர் புரிய

விரும்பினும், நாம் அவ்வாறு செய்தல் நமக்கு அழகாகா தன்றே?

கண்ண பிரானுர்:—இனிச் செய்தற்குரிய செயல் இது வென ஆராய்வதற்கே இங்கு நீவிர் ஐவரும் கூடியிருக்கின் றீர். எவ்வாற்ருனும் நாடு பெற்று அரசாள உங்களுக்கு விருப் பமோ? அன்றி, மறுபடியும் கானகம் புகுந்து வாழ விருப்ப மோ? இதனை நீங்கள் நன்ருக ஆராய்ந்து என்னிடம் கூறுங் கள்.

தருமர்:—செந்தாமரைக் கண்ணரே, பொறுமையின்மை என்ற தீயை மூட்டினுல், சினம் மூளும். அச்சினத் தீயால், இரு திறத்தாரும் போரியற்றி, மூங்கிற்காடு தீயால் அழிவதுபோல, மடிந்து போவோம். ஆதலின், இருவேமும் இக்குரு நாட்டில் ஒரு மனப்பட்டுக் கலந்து உறவாடி வாழு மாறு செய்ய நீர் தூது செல்லும்.

கண்ண பிரானுர்:—அன்று நீவிர் மறு சூதாடி வென்றீ ரல்லவா? அந்நாளில் அவையோரனைவரும் கேட்கத் துரியோ தனன் நீவிர் பன்னீராண்டு கானேகி வாழ்ந்து ஓராண்டு மறைந்துறைந்து வெளிப்பட்டால், உமக்குரிய நாட்டை உம் மிடம் ஒப்புவிப்பதாகக் கூறிய வாக்குறுதியின் வண்ணம் இப் போது உமக்கு நாட்டைக் கொடாதிருப்பானேல், நீவிர் அவ னேடும் சண்டை செய்யத் துணிவதே நலம்.

தருமர்:—ஈதென்ன பேச்சு? எங்கள் ஆசிரியன்மாரை யும், உற்ருர் உறவினரையும் வெஞ்சினப் போரிலே கொன்று நாடாள்வதிலும், கிழங்குகளையும் காய் கனி சருகுகளையும் உண்டு, காட்டில் அலேவதே நலந் தருவதாம்.

கண்ண பிரானுர்:—நீவிர் அவ்வாறு செய்யத் துணி வீரேல், சண்டை செய்வதற்கு அஞ்சிக் காட்டுக்குப் போனீ

ரென உம்மை உலகத்தார் இகழாரோ? மேலும், நீவிர் புகன்ற வஞ்சின உரைகளும் வீணுகாவோ? நீர் கூறுவது முறையாகுமோ?

தருமர்:—கமலக் கண்ணரே, நீர் தூது சென்று கேட்டும் அவன் நாடு கொடானுகில், போர் புரிந்தேனும் நாடு பெறுவோம். அது வசையுமாகாது. நீர் அரவக் கொடியோனிடம் போய், நாட்டினைக் கேளும்; அதற்கு இசையானேல், ஐந்தூர் கேளும்; அவன் அவையும் இல்லையென்பானுகில், ஐந்தில்லங்களாவது தரும்படி கேளும்; அவையும் மறுத்தால், போர் வேண்டும்.

வீமன்:—(அவ்வுரை கேட்டுச் சினந்து) கண்ண பிரானுரே, ஊனமிலார் மானமிலா துரைப்பதற்கு என் செய்வது? (தருமரை நோக்கி),

'விரிகுழற்பைந் தொடிநாணி வேத்தவையில் முறையிடுநாள்
'வெகுளேல்,' என்று
மரபினுக்கும் நமக்கும்உல குள்ளளவும் தீராத
வசையே கண்டீர்;
எரிதழற்கா னகம்அகன்றும், இன்னமும்வெம் பகைமுடிக்க
இளையா நின்றீர்;
அரவுயர்த்தோன் கொடுமையினும், முரசுயர்த்தீர், உமதருளுக்
கஞ்சி னேனே!'

கானுள உமை விடுத்த அருளற்ற குருடன் மகன் ஆளும் உலகை உமக்கு இன்னே தருவேன்; அரவக்கொடி யுயர்த்த மன்னவனும் உம்மை வெறுதபடி அவனை வானுள விடுப்பேன். தாமரைக் கண்ணரே, இவர் போர் முடித்தார்; பாஞ்சாலி கூந்தல் முடித்தார்; இளையோர் புகன்ற வஞ்சினம் முடித்தார். இத்தகைய பீடுடைய இவருடனே பிறந்ததால் நான்

புகழ்பெற்றது போதும்! போதும்!! கொடுமன்னனைவென்று அரசாள நினைப்பதை விடுத்து, அவனோடு உறவுகொண்டாடி வாழ நினைக்கின்றார்! இத்தீவினைக்கு என் செய்வது?

தருமர்:—குருகுலத்தார் போரேறே, குற்றமது பார்க்குங் கால் சுற்றம் இல்லை. ஒரு குலத்திற் பிறந்தவர்கள் உடன் வாழும் வாழ்வினைப்போல் உறுதிஉண்டோ? இருநிலம் காரணமாக எதிர்ப்பது இரு திறத்தாருக்கும் வசை யன்றோ? (கண்ண பிரானுரை நோக்கி,) பெரியீர், தம்பியர் அன்று அவைக்கண் அறியாமையினாற்கூறிய சொற்கள் பரிபவமோ? இழிவென்பது பிறராற் கூறப்பெற்றாலன்றோ? கண் மலரிற் கை படாதோ? அதற்காக அதனை வெட்டிவிடுதல் அறிவுடைமையோ? பொருதொழிலும் கடைநிலத்திற் கிடந்ததன்றோ?

வீமன்:—அண்ணா, கண்ண பிரானார் தம் திருவடி சிவப்பத் தூது போக வேண்டா. வஞ்சின முடிக்க அடியேனைத் தூதனுப்பும்.

‘மலைகண்ட தேனஎன்கை மறத்தண்டின் வலிகண்டும்,
மகவான் மைந்தன்
சிலைகண்டும், இருவர்போரும் திறல்கண்டும், எமக்காகத்
திருமால் நின்ற
நிலைகண்டும், இவள்விரித்த குழல்கண்டும், இமைப்பொழுதில்
நேரார் தம்மைக்
கோலைகண்டு மகிழாமல், அவன்குடைக்கீழ் உயிர்வாழக்
குறிக்கின் றீரே!’

கண்ண பிரானார்:—(வீமனைத் தடுத்து) அம்புவியில் முன் பிறந்தோர் அரசு நெறி முறை உரைத்தால், அதனைக் கேளாமல், தம்பியரும் மறுப்பரோ? வீமா, கடுஞ்சினம் தணிக.

அருச்சுனன் :—(கண்ண பிரானுரை நோக்கி) பெரியீர், பொறுத்ததெல்லாம் போதாதோ? இன்னமும் அறம் பேசினுல், எக்காலம் பகை முடித்து, திரௌபதியும் குழல்முடிக்க இருக்கின்றுள்? யாவரேயாயினும், என் கைவாளி கொல்லும். இதற்குத் தூதேன்? தீண்டாத கற்புடைய திரௌபதியைத் துகிலுரியக் கண்ணுரக் கண்டு யாம் மாண்டார்போல இருந்த மாசு தீர வேண்டாவோ?

'போன்னுரும் திகிரியினுர் போனுலும், போறைவேந்தர்
புகன்ற எல்லாம்
சோன்னுலும், அவன்கேளான்: விதிவலியால் கேடுமேதிகண்
தோன்ரு தன்றே?
எந்நாளும் உவர்நிலத்தில் என்முளைவித் திடினும்விளை
வெய்தி டாது.
பன்னுகம் தனக்கமிர்தம் கோடுத்தாலும், விடமோழியப்
பயன்கோ டாதே!'

நகுலன் :—அண்ணு, நாம் எவ்விதத்திலும் நாடு பெற வேண்டும். கண்ண பிரானுர் தூது சென்ருலும், அவன் நாடு கொடான். நம்மையொத்த அரசர்கள் நாம் நாடிரந்தோமென்று நம்மை இகழாம லிருக்குமாறு நாம் போர் புரிவதே நலம். நம் மனைவியைத் துகிலுரிந்த கொடியோனிடம் இன்னும் நாம் போர் தொடங்காதிருந்தால், உலகம் நம்மை என் சொல்லாது? 'காடுபோய்க் குற்றமற்று வந்தார் நம் துணைவர்' என மனம் இரங்காமலும், சொன்னபடி நாடு கொடாமலும் இருக்கின்றுன் வணங்கா முடியான். தானே அறியாதவன், பிறர் போய்க் கற்பித்தால் அறிவனே?

கண்ண பிரானுர்:—மற்றெல்லோரும் கூறிய வெல்லாம் கேட்டோம். சகாதேவ, உன் எண்ணம் என்? சொல்.

சகாதேவன்:—பெரியீர், நீர் தூது போனாலென், போகா திருந்தால் என் ? பாம்புக்கொடியோன் நாடு கொடுத்தாலென், கொடாதிருந்தால் என் ? இவள் கூந்தல் முடித்தாலென், முடியாதிருந்தால் என் ? உம்முடைய எண்ணப்படியே எல்லாம் முடியும். உம் எண்ணத்தை மற்றையோர் அறியார் ; யான் அறிவேன். உம்முடைய திருவுளம் எப்படியோ, அப்படியே என் மனமும்.

கண்ண பிரானார்:—(தமக்குள்) இவன் விரகுரைத்தான். (சகாதேவனைத் தனியிடத்துக்கு அழைத்துச் சென்று) சகாதேவ, வரப்போகும் பாரதப் போரை நிறுத்த ஒரு சூழ்ச்சியைச் சொல்லுக.

சகாதேவன்:—ஐயன்மீர், நீர் யாவரையும் அழித்து உலகச் சுமையைக் குறைக்க வந்தீர். பாரதப் போரை நிறுத்துவது உம்மாலன்றி வேறு யாரால் இயலும்? வேண்டுமானால் அதற்கொரு வழி கூறுகிறேன்: முதலில் அருச்சுனனைக் கொல்லவேண்டும் ; பின்பு பாஞ்சாலிக்கு மொட்டையடித்து கன்னனுக்கு முடி சூட்டவேண்டும். அதன்பின் நீர் அங்குமிங்கும் அசைய முடியாமல் உம்முடைய காலிலும் விலங்கிட வேண்டும். இவையெல்லாம் செய்தால், பாரதப் போர் நிற்பதற்குத் தடை என்ன ?

கண்ண பிரானார்:—நீ மற்றவையெல்லாம் செய்வாய். எனினும், என்னை எவ்வாறு பிணிப்பாய் ? கூடுமானால் கட்டு; பார்க்கலாம்! (கண்ணபிரானார் எண்ணிறந்த உரு எடுப்ப, சகாதேவன் மூல உருவினை அறிந்து, மனத்தால் அவர் கால்களைப் பிணிக்கின்றான்.) சகாதேவா, என் அடிகளை விடு, விடு.

சகாதேவன்:—வரும் பாரதப்போரில் ஐவரையும் காத்தருள வாக்களித்தால் விடுவேன்.

கண்ண பிரானார்:—அவ்வாறே ஆகுக; ஐவரையுங் காப்பேன். (சகாதேவன் கால்களை விட) நீ இங்கே நடந்த செய்திகளையெல்லாம் வெளிப்படுத்தாதிரு. (அவனோடு மற்றவர் இருந்த இடம் சென்று, பிறரைப் பார்த்து,) சகாதேவனும் தூது நன்றே என்றான்.

திரௌபதி:—என் கூந்தல் என்று முடிப்பது? (அழுகின்றாள்.)

சாத்தகி:—உங்கள் ஒவ்வொருவருடைய கைகளிலுள்ள வில், தடி முதலிய படைகளினாலே யாதும் பயனென்ன? இவள் தலைவிரி கோலமானாள். இவ்வாறு ஊர் வேண்டுவது கண்ண பிரானார் மதியோ? அன்றித் தருமர் மதியோ?

கண்ண பிரானார்:—அம்மா, பாஞ்சாலி, நீ அழாதே. வணங்காமுடி மன்னவனிடம் தூது போய்வந்து நானே உன் குழல் முடிப்பேன். அம்மா, உன் மகன் அபிமன்னியு உனது பகையை முடியாதிருப்பானா? நோயாளிகள், துறவிகள், அடங்காதோர், சினங் கொள்பவர், கல்லாதவர், சிறியோர், முறைமை தெரியாதவர்கள், பெண்கள் ஆகிய இவர்கள் ஆராய்ச்சிக் கழகங்களிலே என்றும் இருக்கத் தகுதி யில்லாதவர்கள். ஆதலின், நீ இவ்விடத்தை விட்டுச் செல்.

தருமர்:—(கண்ணபிரானாரை நோக்கி)பெரியீர், நீர் காலந் தாழ்க்காமல் அரவக்கொடியோனிடம் தூது சென்று வாரும்.

(கண்ண பிரானார் தேரேறிச்சென்று இரண்டு நாட்களில் அத்தின புரியை அடைகின்றார்.)

## 7. கண்ண பிரானுர் தூது: பகுதி-2

(அத்தினபுரியை அடுத்துள்ள ஒரு சோலையில் கண்ண பிரானுர் வந்து தங்கினரெனத் தூதர் கூறக் கேட்ட வணங்கா முடி மன்னன், நகரை அணிபெறச் செய்து, எதிர்கோள்ளப் புறப்படுகின்றனன். சகுனி அவனைத் தடுக்க, மன்னன் கண்ண பிரானுருக்குத் தங்க இடமமைத்து, அவரை எதிர் கோள்ள மற்றவர்களை ஏவி, அரியணை யமர்கின்றனன். அனைவரும் கண்ணபிரானுரை எதிர்கோள்கின்றனர். கண்ண பிரானுர் ஊரிற் புகுந்து, அரண்மனைக் கேகாமல், விதுரர் மனை யிற் சேர்கின்றனர்.)

விதுரர் :—கமலக் கண்ணரே, நீர் விரும்பி வந்த இம் மனையை நீர் விரும்பி அறிதுயி லமர்ந்த பாற்கட லென்னலா மோ ? நும் பாயலாகிய பாம்பென்னலாமோ? அன்றி, ஆலிலை யென்னலாமோ ? நீர் இங்குவர யான் செய்த நல்வினை தான் என்னே ! அறுசுவை யுணவு அமைக்கப்பட் டிருக்கின்றது ; உண்டருளும். (கண்ண பிரானுர் உண்டு மகிழ்கிருர்.) நீவிர் இங்குப் போந்ததேனே ?

கண்ண பிரானுர்:—விதுரரே, காடுறைந்து போந்த ஐவருக்கும் தூதுவனுகி, துரியோதனனிடம் நாடு கேட்டுப் பெற வந்தேன்.

விதுரர் :—அரசன் நாடு கொடா னென்பது திண்ணம்.

கண்ண பிரானுர் :—அவ்வாருனல், கட்டாயம் அமரே நிகழும்.

'விரைந்து பாய்பரி மன்னவர் இதம்பட மேலிவுற்(று),
இரந்து வேண்டினும், கிளைஞருக் கோருபோருள் ஈயார்.
பரந்த போரினில் எதிர்ந்தவர் படப்படப் பகழி
துரந்த போதவர்க் குதவுவர் சோன்னவை எல்லாம்.''

விதுரரே, இஃது உலகிய லன்றே? (கண்ண பிரானுர், அன்றிரவை அங்கேயே கழிக்கின்றனர்.)

அரவக்கோடியோன்:—கண்ணன் இப்போது நமது திரு முன் வருவான். அவனை எவன் எதிர்கொள்வானே, எவன் வணங்குவானே, அம்மன்னவன் ஊரைச் சுட்டெரிப்பேன்! (கண்ண பிரானுர் வரக் கன்னனும் சகுனியும் தவிர, அனை வரும் வணங்குகின்றனர். அரசன் முகம் கொடாமல்,) நீர் நேற்றே நமது நகரடைந்தும், அரண்மனைக்குவராததேன்?

கண்ண பிரானுர்:—மன்ன, என்வீடு, உன்வீடு எனும் வேறுபாடு யான் கருதேன். விதுரர் விருந்துக் கழைத்தார். அதனாலேயே அவர் வீடு சென்றேன். மேலும், தூதனுகிய நான் உனது உணவுண்டு உனக்கு மாறு சொல்லலாமோ? அவ்வாறு செய்யின், எனக்கு நரகல்லவோ கிடைக்கும்?

அரவக்கோடியோன்:—நீர் தூது வரக் காரணமென்?

கண்ண பிரானுர் :—உன் உடன் பிறப்பாளர் நெடுநாள் காட்டிற் போக்கித் தீதிலாது திரும்பி வந்தனர். அவர்கள் தங்கள் நாட்டைப் பெற விரும்புகிறுர்கள். உன் உரிய துணை வரை யழைத்து, அவர்க்குரிய நாட்டை நீ கொடுத்தால், உனது வாய்மையை யாவரும் புகழாதிரார். இல்லையேல், உன்னை உலகினரனைவரும் இகழ்வர். மேலும், நீ அவர்களுக் குரிய நாட்டைத்தர மறுப்பது அறமும் ஆண்மையும் புகழும் அல்ல.

அரவக்கொடியோன்:—ஐவரும் முன்னர் ஆடிய சூதாட்டத்தில் தமது நாடு முழுவதும் இழந்தனர். ஆதலின், அவர்கள் திரும்பவும் காட்டுக்குப் போவதே உறுதி. எனது செயலைப்பற்றி யார் என்ன நினைத்து என்ன பேசினாலும், எனக்குக் கவலை யில்லை. அவர்கள் என்னோடு போர் தொடங்கினாலும், சரியே. நீரிருக்கும் இடமெனினும் இப்புவியில் யான் அவர்க்குக் கொடேன்.

கண்ண பிரானார்:—மன்னவ, அவர்களுடைய நாட்டில் பாதியேனும் அவர்களுக்குக் கொடு.

அரவக்கொடியோன்:—முடியவே முடியாது.

கண்ண பிரானார்:—நாடு வேண்டா. அவர்கள் ஐவருக்கும் ஐந்தூராவது கொடு.

அரவக்கொடியோன்:—அவர்கள் நிலைக்கு நாடும் ஊரும் தரவேண்டுமோ? காட்டிலே போய் மறைந்து திரியும் நிலையினர் நான் ஒரு வீடு கொடுத்தாலும் வெறுப்பரோ? இனி இப்பேச்சை இத்துடன் நிறுத்தும்.

கண்ண பிரானார்:—மன்ன, தம் தம்பியின் பொருட்டுத் தமக்குரிய நாட்டை வெறுத்துத் தம்பிக்கே அதனை ஆக்கிய உனது குலப்பெரியார் வீடுமரும் இதோ உன் முன்னிலையில் உளர். நாட்டுக்கே உரிமையுடையாருக்கு நீ ஐந்தூரேனும் தாராதிருந்தால், உனது அரசியல் என்னாம்? ஒரு குலத்தில் இரண்டு அரசர்கள் உடன் பிறந்து உரிமையை யடைந்தால், இரண்டு திறத்தோரும் ஒக்க வாழ்வடைவது எக்குலத்தினும் இயற்கை. குருகுலத்தார் இயற்கை இருந்தவாறு மிக நன்று!

அரவக்கோடியோன்:–ஐயன்மீர், அரசியல் வீரருடைமை. ஈது நீவிர் அறியாததன்றே? ஆதலின், அரசு பாண்டவர்களுக்கு உரிமை யென்பது வேண்டா.

கண்ண பிரானுர்:—அரசரேறே, அவ்வித மாயின், சண்டைக்குக் கை கொடுத்து உறுதி சொல்லுக.

அரவக்கோடியோன்:–(சினமிகக் கொண்டு) ஏ, கண்ணு, இழிந்த பிறப்படைந்து இடையரோடு மாடு மேய்த்த உன் பிறப்பையும், நீ வெண்ணெய் திருடியதற்காக இடைச்சியர் உன்னைப் பிடித்து உரலோடு கட்டியதையும் மறந்துவிட்டு நீ மேலான குரு குல வாய்மையும் குற்ற மற்ற என் பிறப்பும் உணராமலோ இப்பேரவையில் இவ்விழிந்த பேச்சைப் பேசத் துணிந்தாய்? ஐவருக்கும் யான் அஞ்சியவனு? எனக்குச் சீரொப்ப நீ இப்பேச்சைப் பேசிவிட்டதனுல் உனக்கு மேன்மையாமென நினைத்தனையா? அல்லது நான் கூறிய வாக்கைத் தவறுவேனென் றெண்ணினையா? அரசர் முறைமை மிக நன்று! கண்ணு, அவர்களுடைய மனையாளாகிய பாஞ்சாலியைக் கூந்தல் பிடித்திழுத்து வந்து துகிலுரிந்தபோது பார்த்திருந்த வீரர்கள் அல்லவா அவ்வைவரும்? மானங் கெட்டுச் சோறு தின்று உயிர் வாழ்பவர்கள், மானத்தை உணர்வார்களா? தாய்மார் இருவராம்! பெற்ற தந்தையர் ஐவராம்!! இவர்களுக்குக் குரு குலத்துரிமை வேண்டுமோம்! ஒரு பெண்ணை ஐந்து பேரும் மணந்து வாழ்வராம்! கண்ணு, இவ்வளவு இழிவான பிறப்பினையும் ஒழுக்கத்தையும் உடையவர்களாகிய இவர்களோடும் என்னை ஒரு குலத்தவன் என்றனை! ஈதென்ன வெட்கக்கேடு! (கண்ணபிரானுர் இது கேட்டதும் எழுந்து போய், விதுரர் மனையினை யடைகின்றனர்.)

அரவக்கொடியோன் விதுரரை நோக்கி) அவையோரே, இவ் விதுரன் நம்பகைவர் தூதனுக்கு விருந்திட்டான்; என் வீட்டில் உண்ணமறுத்தவனுக்கு இடங்கொடுத்தான். என்தந்தையொடு பிறந்தும், என் உணவுண்டும், என்னிடம் அன்பிலனானன். என்பகை இவனுக்கும் பகையல்லவா? பொது மடந்தை மகன் இவ்வாறு செய்தது வியப்பன்று.

விதுரர்:—அரவக்கொடியோனே, அறவும் கொடியோனே, இவ்வாறு பேசிய உன் நாவை யறுத்து உன்னையும் கொன்று சாம்பலாக்குவேன்! 'மகனைக் கொன்றான்!' எனும் பழி வருமே என அவ்வாறு செய்யாது உன்னைச்சும்மாவிடுத்தேன். கண்ணபிரானுரை வரவேற்றேனென்றாய்; அவர் திருமாலின் தோற்றம் என்பதை உணராய். பேதாய், நான் பாண்டவர் பக்கம் சேர்ந்தால், யாராவது என்னை இகழ்வாரோ? ஒருநாளும் ஒருவரும் இகழார். உண்மையாக இனிப் போரில் நான் அம்பு தொடேன். (தம் வில்லை முறித்தெறிந்து வீடுசெல்கின்றனர்.)

அவையினர்:—அந்தோ ! வில்லிலே சிறந்த விதுரர் வில்லும் முறிந்ததே! இனி அருச்சுனன்முன் எவ்வில்லி நிற்பன்?

வீடுமர்:—துரியோதனா, வில்வீரனாகிய விதுரனைப்பழித்த நீ எங்ஙனே பகைவெல்லுவாய்? ஐவரே இனி நாடாள்வர்

அரவக்கோடியோன்:—நன்றே கூறினீர்! வில்லுக்கு விதுரனோ? கன்னனுளான். நீங்களெல்லாரும் என் பக்க லிருக்க, இடையனுக்கு விருந்து செய்த அவன் எனக்கேன்? அவன் தன் வில்லை முறித்தால் எனக்காகும் கேடென்ன ?

கன்னன்:—அருச்சுனனுடைய உயிரைவாங்க யானிருக்கின்றேன். இடையன் அவனுக்குத் தேரோட்டினாலும், அவ

னைக்கொல்லாமல்விடேன். என்னிடம்வாழும் பாம்புக்கணையை நான் ஏவினல், அஃது அவனைத் திண்ணமாகக் கொல்லும்.

வீடுமர்:—கன்ன, அவுணர்களாகிய நிவாத கவசர்களை யெல்லாம் வென்றவனாகிய அருச்சுனனுக்கு நீயோ இணை? மதிக்கு வெள்ளி ஈடாமா?

கன்னன்:—இவருடைய உணவை யுண்டு, இவருக்குப் பகைவருடைய புகழையே பேசினீர். எனது கணைக்கு முன் நிற்பார் இவ்வம்புவியில் எவரேனு முளரோ?

வீடுமர்:—கன்ன, இவ்வீரச்சொல்லின் செயலை வெம்போரிற் காணுதும்! (எழுந்து போகின்றனர்.)

அரவக்கொடியோன்:—அவையோரே, நீவிர் எல்லீரும் சென்று வருக. (அவை கலைகிறது.)

## 8. கண்ண பிரானர் தூது: பகுதி—3

கண்ண பிரானர்:—விதுரரே, நீர் உமது சிறந்த வில்லை ஒடித்ததேன்?

விதுரர்:—பெரியீர், இக்கொடியவனுக்காக யான் சண்டை செய்யேன். நீர் வந்து எடுத்தியம்பியும்கூடச் செல்வச் செருக்கால் ஐவருக்கும் நாடு கொடாமல் என்னையும் இகழ்ந்தான். அதனாலேயே எனது வில்லை முறித்தெறிந்தேன்.

கண்ண பிரானர்:—நீர் வணங்கா முடியானோடு நின்று போர் செய்யாதிருந்தால், உமது அன்புக்குரிய மைந்தர் ஐவரும் வெற்றி மாலை புனைந்து நாடு பெறுவது திண்ணம். உமது வில் இற்றதால், மன்னர் மன்னன் மடிவதுறுதி. அவன் புகன்ற கடுமொழிகளைப் பொறுத்துக்கொள்ளும். (பின்பு குந்தி வாழும் மனை புகுந்து அவளைக் காண்கின்றார்.)

குந்தி:—கண்ணு, உன் வரவால் மிக மகிழ்ந்தேன். நீ இங்கு வந்த காரண மென்ன?

கண்ண பிரானுர்:—அத்தையீர், உம் மக்களுக்காகத் துரியோதனனிடம் நாடு கேட்கத் தூது வந்தேன். கொடியோன் கொடுக்க மறுத்துவிட்டான். பல சொல்லி யென்? நாளையே போர் தொடங்கும்.

குந்தி:—(வருந்தி) போரென்னில், வெல்வார் யாரோ? மடிவார் யாரோ?

கண்ண பிரானுர்:—(அவளைத் தேற்றி) நீர் உம் தந்தையார் வீட்டிலிருக்கும்போது மணமாகாத கன்னியராகவிருந்த உமக்குத் துருவாச முனிவர் ஐந்து மந்திரங்கள் தந்தனரன்றோ? அம்மந்திரத்தொன்றால் நீர் பகலவனை நினைக்க, அவன் உம் முன் தோன்றினுக, நீர் அவனை மணந்து ஒரு பிள்ளையைப் பெற்றீரல்லவா? பின் நீர் அவ்வாறு பிள்ளையைப்பெற்றது குற்றமென்றறிந்து, மிதக்கும் தன்மைத்தாய பெட்டியிலே அப்பிள்ளையை வைத்து, ஆற்றில் விடுவித்தீரன்றோ? அந்த ஆறு அப்பெட்டியைக் கொண்டுபோய்க் கங்கையாற்றிற் சேர்த்தது. பின்னர் அப்பெட்டி கங்கையில் மிதந்து வந்ததாக, அதனைக் கண்ட திருதராட்டிர மன்னவருடைய தேர்ப்பாகன் அதனை யெடுத்துத் திறந்து பார்த்து, அப்பேழையினுள்ளிருந்த சின்னஞ் சிறு குழந்தையைக் கண்டு ஆவலுடன் எடுத்து, வளர்த்து வந்தனன். அப்போது அப்பிள்ளையின் தந்தையாகிய பகலவன், "இப்பிள்ளையைக் கன்னன் என்று பெயரிட்டழையுங்கள்," என்று விண் மொழியாற் கூறினன். தேரோட்டியும் அதனைக் கேட்டு, அதுவே தக்கதொரு பெயராமென மனத்திற் கொண்டு, அப்பிள்ளையை அன்று தொட்டுக் கன்னனென்றழைத்து, அருமை பல

செய்து, உண்மை யன்போடும் வளர்ப்பா ஞயினன். அப் பிள்ளே பல கலேகளும் பயின்று, வணங்கா முடி மன்னவ ஞகிய அரவக்கொடியோ னுடைய அருமையாகிய நட்பையும் பெற்றனன். அச்சீரிய நட்பு, கரும்பின் குருத்திற் கெதிர் செலத் தின்றன்ன தகைமைத்தாய் நாடோறும் வளர்ந்ததன் பயஞக, மன்னர் மன்னன் கன்னனே அங்க நாட்டு முடிமன்ன ஞக ஆக்கி மகிழ்ந்தான். இவ்வாறு பெருவாழ்வடைந்த கன் னனுகிய உம் மகனே ஒருவராலும் வெல்ல முடியாது. அவன் உம் இளேயமகனுகிய அருச்சுனனேக் கட்டாயம்கொல்லுவான். ஆகையால், நீர் கன்னனிடம் சென்று, இவ்வுறவினேக் கூறி, அவனே நம் பக்கம் சேர்ப்பீராக. 'அப்பா, மகனே, நீ உன் தம்பி யரோடும் அரசாளலாம். வா,' என நீர் அழைப்பின், அவன் அரவக்கொடியோனிடம் கொண்டுள்ள நட்புக்காரணமாக உம் முடன் வர மறுப்பானேல், அப்போது நீர் இன்றியமையாது செய்யவேண்டுவ தொன்றுண்டு: காண்டவக் காட்டை அருச் சுனன் எரித்தபோது. அதிலிருந்து ஒரு பாம்பு தப்பி ஓடி வந்துவிட்டது. அது கன்னனிடம் அம்பாக வாழ்ந்து வரு கிறது. அதனேக் கன்னன் ஏவினுல், அஃது அருச்சுனனேக் கொல்லாமல் விடாது. அதனேக் கன்னன் ஒரு முறைக்கு மேல் மறு முறை அருச்சுனன்மேல் ஏவாதிருக்க நீர் அவ னிடம் வரம் கேளும். இதனே நீர் கட்டாயம் செய்யவேண்டும்.

குந்தி:—கண்ணு, கன்னன் என் மகனென்பதை முன் னரே நீ என்னிடம் கூறுதிருந்துவிட்டனேயே ! கூறியிருப்பை யேல், கன்னனே வணங்கா முடியனேடும் சேரவொட்டேனே ! இவர்களனேவரும் ஒருவரோடொருவர் பொருது மாளும் வகை செய்து, இப்பொழுது இவ்வுறவு கூறினுய்! நீ என்ன நினேத்து என்ன செய்தனே? பாம்புக்கணே மறுமுறை தொடே

லென்று விலக்கினுல், கன்னன் மடிவான்; தடாதிருந்தால், விசயன் மடிவான்! யான் பட்ட கொடுமை நன்று! நன்று!! (அழுகிருள்.)

கண்ண பிரானுர்:— (அவளைத் தேற்றி) உமக்கு ஐந்து பேரும் ஒருங்கே மடிவது நல்லதோ, கன்னன் ஒருவன் மட்டும் மடிவது நன்ருே? ஐவரும் ஒருவர்போய், ஒருவர் உய்யார். ஆதலின், துன்பத்தை ஒழித்துக் கன்னனிடம் போவது இப்போது இன்றியமையாது நீர் செய்யத் தக்க செயலாம். ஆதலின், அவனிடை ஏகுக. (மறுபடியும் கண்ணபிரானுர் விதுரர் மனையை அடைகிருர்.)

## 9. கண்ண பிரானுர் தூது: பகுதி—4

(நள்ளிரவில் அரவக்கோடியோன் உற்ருர் சூழ மண்டப மடைகின்ருன்.)

அரவக்கோடியோன் :— (திருதராட்டிரனைப் பார்த்து) தந்தையீர், பாண்டவர் பஞ்சைகளைப் போலக் காட்டி லலைந்து திரிந்திருந்தனர். அவர்களை அழைத்து வந்து நாடு கேட்க மூட்டி விட இடையன் வந்தான். என் செய்வது?

திருதராட்டிரன் : — மகனே, வலையிற் பட்ட புலியை வேட்டுவர் விடுவரோ ? கண்ணனைச் சேனையொடு வளைந்து கொல்வாயாக.

விகர்னன் :— தந்தையீர், ஈதென்ன பேச்சுப் பேசினீர் ? இதற்குமுன் யாரேனும் அரசியல் தூதரைக் கொன்ற வரலாறு கேட்டுளீரோ ? இம்மதி எங்கே கற்றது ? தூதரைக் கொல்வோர் கொடுநரகடைவர். பழியுடைப் பகைஞரேனும், தம் பதியில் வருவரேல், அவரைக் கொல்லுதல் பெரும்பழி

யும் தீவினையு மாகவன்றோ முடியும்? இப்போது செய்யத் துணிவது ஆண்மையுமன்று. நீங்கள் சேனையோடு வளைந்தாலும், கண்ண பிரானுர் அகப்படார்.

துர்ச்சாதனன் :— (சினந்து) மந்தணத்தில் சிறியோர் செய்வதென்ன? இச்சிறுவனை யார் இங்கே அழைத்தது? அவர்கள் வாழும் மனையிலே தீயிட்டுச் சூழ்ந்து, கண்ணனையும் விதுரனையும் கொல்லுவதே இப்போது செய்யத் தகுந்த செயலாம்.

கன்னன் :—மன்னர் மன்னரே, அஞ்சற்க. தீயிடுதல் வேண்டா. நான் ஓர் அம்பாலேயே அவனுயிரைப் போக்குவேன்.

சகுனி :—கள்ளனுகிய கண்ணனை நாம் இப்போது விட்டுவிட்டால், அவன் நம்மை வெற்றி மாலை சூட விடமாட்டான். ஆதலால், அவனைக் கொல்லாமல் விடுதல் கூடாது. ஆனுலும், தூதனைக் கொல்லுதல் தகாது. அதனுல், ஒரு பெரிய குழி பறித்து, அதனுள் அரக்கர் பலரை வைத்து மூடி, மேலே பொய்யணையிட்டுக் கண்ணனை வரவழைத்து அவ்வணையில் இருக்கச் செய்து, அப்படுகுழியில் வீழ்த்தி, அவனைச் சிறை செய்வதே இப்போது செய்யத் தகுந்தது. வணங்கா முடி மன்னவரே, இதனைச் சிந்தித்துத் தகுந்ததை உடனே செய்யும்.

அரவக்கொடியோன்:—மாமா, இதுவே மிகப் பொருத்தமான சூழ்ச்சி! உமது மதியே மதி! ஏவலாளரை யழைத்து, உடனே குழியொன்று வெட்டுவித்து, மல்லரையும் அரக்கரையும் அதனுள் வைத்து, மூங்கிற் பிளப்பால்அதனை மூடி, அதன்மேல் அழகானதொரு அரியணையிடுவியுங்கள். அக்குழி வெட்டியிருப்பது வெளிக்குப் புலனுகாவண்ணம் வேண்டும்

மாறுபாடுகளெல்லாம் அழகுறச் செய்யுங்கள். (அவ்வாணைப் படி வேண்டுவனவெல்லாம் செய்யப்பெறுகின்றன. பொழுதும் விடிகிறது. துரியோதனன் தூதரை விளித்து,) நீவிர் சென்று கண்ணனை விதுரன் மனையிலிருந்தும் இங்கே அழைத்து வாருங்கள். (தூதுவர் சென்று கண்ணபிரானுரை அழைக்க, அவர் சேனை சூழ வருகின்றார். மன்னன் அதனை யுணர்ந்து அவரோடு வருகின்ற சேனையை உள்ளே வாராதபடி தடுத்துவிடக் கட்டளை யிடுகின்றான். கண்ண பிரானர் தம் முடன்வந்த சேனை தடுக்கப்பட்டதுணர்ந்து சிரித்து, உள்ளே வருகின்றார்.)

அரவக்கொடியோன்:—பெரியீர், அந்த உயரிய அரியணையில் வீற்றிரும்.

கண்ண பிரானர்:—மன்னவ, அவ்வாறே ஆகுக. (அரியணையில் ஏற அது நெறுநெறெனக் கீழே செல்கின்றது. கண்ண பிரானர் அச்சூழ்ச்சியை உணர்ந்து, பேருருக் கொண்டு நிற்கின்றார். அதனால், குழியுள்ளிருக்கும் மல்லரும் அரக்கரும் மடிகின்றனர்.)

அவையோர்:—கமலக் கண்ணரே, முனியற்க! முனியற்க!! (வணங்குகின்றனர்.)

கண்ண பிரானர்:— (தம் இயல்புருக்கொண்டு) கொடியோனே, நீ என்னைக் கொல்ல நினைத்தது மிக நன்று! உங்களெல்லோரையும் இப்பொழுதே நொடிப்பொழுதில்கொன்று விடுவேன்! நான் போர்க்கருவி யெடுப்பதில்லையென வாக்குறுதி செய்தேன். மேலும், ஐவர் உங்களைக் கொல்வான் கூறிய வஞ்சின முண்மையாலும், உங்களை இப்போது கொல்லாது விடுத்தேன். (இவ்வாறு கூறி நடந்து, தம்மைப் பின் தொடர்வோரை நிறுத்தி, அவர்களுள் கன்னனை நோக்கி,)

அன்புமிக்க கன்ன, மதி குலத்தவரான பாண்டவர் ஐவரும் உன் தம்பிமார். உன்னை இரவியங் கடவுள் குந்தி வயிற்றி டைப் பெற்றனன். எமதருமன் தருமனை யீன்றான். காற்றா சன் வீமனையும், விண்ணவர் தலைவன் விசயனையும், மருத்து வக்கடவுளர் இருவரும் நகுலனையும் சகாதேவனையும் பெற் றெடுத்தனர். உன் தாயாராகிய குந்திமாதேவியாருக்குத் துரு வாச முனிவர் ஐந்து மந்திரங்களை உதவினர். அவைகளால் நீங்கள் அறுவரும் தோன்றினீர்கள். உங்களைவிட நிலத்துக் குரியார் யாவரே உளர்? ஆதலின், நீ உன் தம்பிமாரோடு சேர்ந்து, இம்மாநிலத்தை ஆண்டு, நீடு வாழ்வாயாக.

**கன்னன்:**—ஐயன்மீர்,உம்மால் இன்று யான் என்பிறப் புணர்ந்தேன். பிறப்புணராது கவலைக்கடலில் ஆழ்ந்திருந்த எனக்கு இப்போது கரை கிடைத்தது. யானின்று என் தம்பி மாரோடு சேர்வேனேல், உலகம் சிரிக்கும். இன்ன இனத்தவ னென்றுகூட அறியாத எனக்குப் பல செல்வமும் தந்து, அரசனுக்கி, தன் உற்ற நண்பனுகக் கொண்டிருக்கும் அரவக் கொடியோனை, நாளை அவனுக்கும் ஐவருக்கும் போர்தொடங்க இருக்க, இன்று நான் அவன் செய்த நன்றியை மறந்து கை விட்டுப் போகேன்.

**கண்ண பிரானுர்:**—(கன்னனை நீங்கி, அசுவத்தாமனை அருகழைத்து) அசுவத்தாமா, மன்னர்மன்னன் ஐந்தூரும்தர மறுத்தது சொல்ல, நீயே போர்க்களத்துக் கரியாவாய். (அவை யோருக்குக் கேட்குமாறு சத்தமிட்டு,) போர்க்களத்தில் நீ சேனைத் தலைவனுக மறுத்தால்மட்டும் பாண்டவர் உய்வர். உனக்கு அவர்களிடத்திலும் அன்புண்டல்லவா? (தம் கணை யாழியைத் தரையில் நழுவவிடுகிருர். அசுவத்தாமன் அதனைக் குனிந்து எடுத்துத்தர, அதை வாங்காமல்) அசுவத்தாமா, இர

வியைப் பரிவேடம் சூழ்ந்தது! பார். மழை வருமோ? (அசு வத்தாமன் கணையாழியுடன் இரவியை நோக்குகிறான்.)

அவையோர்:—மன்னர் மன்னவரே, கண்ணன் அசுவத் தாமனைப் பிரித்தான். அவனும் ஆழி தொட்டு வாக்குறுதி செய்கிறான். பாரும்.

அரவக்கொடியோன்:—தனியே வந்துபோமவனிடம்வலி யச்சென்று ஆழி தொட்டு வாக்குறுதி செய்கிறான் இவன். இனி இவன் நம்மிடம் வந்து உறவாடினாலும், இவனை நாம் நம்புவதெப்படி?

அசுவத்தாமன்:—(இப்பேச்சுகளைக் கேட்டு) இவர்கள் என்னை நம்பாதபடி கண்ண பிரானார் என்னைப் பிரித்துவிட் டார்! இதற்கு என்ன செய்வது? (கண்ண பிரானார் விதுரர் மனையை யடைந்து, விண்ணவர் கோனை நினைக்கின்றார்.)

விண்ணவர் கோன் :—(கண்ண பிரானாரைப் பணிந்து) இறைவீர், என்னை நினைந்ததென்ன?

கண்ண பிரானார்:—வானவர்கோனே, காண்டவக்காட்டி லிருந்து தப்பிய பாம்பு உன் மகனாகிய விசயனைக் கொல்லக் கன்னனுக்கு அம்பாகி உறைவதை நீ அறிதியன்றோ? உன் மக னைக் கன்னன் கொன்றால், உனக்கே வசையாம். கன்னன் தன்னுடன் தோன்றிய கவசத்தையும் குண்டலத்தையும் புனைந்திருப்பனேல், அவனோடு அளவற்ற காலம் அமர் செய்தாலும் அவனுயிர் செகுப்பார் உண்டோ? ஆதலின், குரக்குக் கொடியவனாகிய உன் மகன் அவனால் மடிவது திண் ணம். அதனால், அவ்விரண்டையும் கன்னனிடமிருந்து பிரித் தல் வேண்டும். கன்னனோ, சிறந்த வள்ளல். அவனை வள்ளன் மையில் ஒப்பாரும் மிக்காரும் இம்மாநிலத்தில் இலர். நீ ஒரு முனிவனைப்போல அவனுழைச் சென்று, அவைகளை

இரந்துகேள். தனது உயிரையும் மறுத்தறியாத தலை சிறந்த அருட்கடலாகிய கன்னன், அவைகளை உனக்குத் தருவான். அவ்வாறு நீ அவைகளைப் பெற்று வருவையேல், உன் மகன் கன்னனைக் கட்டாயம் கொன்றுவிடுவான்.

**விண்ணவர் கோன்:**—செந்தாமரைக் கண்ணரே, உமது உற்றுழி யுதவும் தன்மையை மிகப் பாராட்டுகின்றேன்! நீர் கூறியபடியே மிக விரைவில் கன்னனிடம் சென்று, அவனுடைய கவச குண்டலங்களைப் பெற்று வருவேன். இதோ போகிறேன். (போகிருன்.)

## 10. கண்ண பிரானுர் தூது: பகுதி-5

**கன்னன்:**—(காவலாளிகளைப் பார்த்து) காவலரே, நண்பகல் கழிந்தது. வேறு யாரேனும் இரவலர் வருகின்றனரா? பாருங்கள்.

**காவலர்:**—தலைவரே, ஒருவரும் வரவில்லை. (கன்னன் உள்ளே போகிருன். அப்போது வானவர் கோன் ஒரு கிழ முனிவ உருவுடன் வருகின்ருன்.)

**விண்ணவர் கோன்:**—காவலரே, என் வருகையை உம் தலைவரிடம் தெரிவியுங்கள். (கன்னன் ஆணைப்படி அவன் முன் சென்று) வள்ளலே, உம்மை வழக்கமில்லாத இக்காலத்தில் வந்து கண்டேன். நான் கிழவனுனபடியால் நடந்துவர இந்நேரமாயிற்று. இரவலர் விரும்பியதெல்லாம் தருவதென்பது கற்பக மரத்துக்கும் அரிது. நான் விரும்புவதை நீர் தருவீரோ?

**கன்னன்:**—பெரியீர், நீர் என்னுடைய உயிரைக் கேட்டாலும் மறுக்காமல் உமக்குத் தருவேன். தாரேனேல், உல

ரும்புவதைக் கேளும்.

விண்ணவர் கோன்:—மன்னரே, நீர் மார்பில் அணி
க்கும் கவசத்தையும் காதிலணிந்திருக்கும் குண்டலங்க
ம் யான் விரும்புகின்றேன். அவைகளை எனக்குக் கொடு

கன்னன்.—இவ்வளவுதானா? இவைகளை இதோ
தன். பெறுக.

பகலவன்:—(விண்மொழியாக) மகனே, கன்னா, விண்
ர்கோன் கண்ணன் ஏவலால் இவ்வாறு வேற்றுருவுடன்
ான். ஆதலின், அவைகளைக் கொடுக்காதே.

கன்னன்:-இரவலர் யாவரேயாயினும், எச்சூழ்ச்சிை
ருதி அவர்கள் எதனைக் கேட்டாலும், இல்லை யென்னா
ருவேன்; யாவர் தடுத்தாலும் மனம் கலங்கேன். (கவசத்
ம் குண்டலங்களையும் கழற்றி முனிவனிடம் தருகிறான்.)

விண்ணவர் கோன்:-(தன்னுருக்காட்டி) அப்பா, கன்
னது செயற்கருஞ்செயல் கண்டு மிக மகிழ்ந்தேன். (
வல் தருகிறான்.) உனக்கு இவ்வேல் தந்தேன். இதனை
ன்மேல் ஏவாமல் கடோற்கசன் மேல் ஏவுக. இஃது அவ
ிரைத் தவறாது வாங்கும். நீ வாழ்க. (கண்ண பிரானை
டைந்து) கமலக் கண்ணரே, நினைத்தது முடிந்தது. இ
ன்னனுடைய கவச குண்டலங்களைப் பாரும்.

கண்ண பிரானார்:—போர்க்கருவிகளை மேலே விழவொ
ாமல் தடுக்கும் கவச குண்டலங்களையும் கன்னன் த
ிட்டனனா? என்னே அவனது பெருங்குணம்! பிறந்த

மையாளரோ, தம் ஆருயிரை மாற்றலரே கேட்பினும், மறுக்கிலார். விண்ணவர் தலைவ, நீ வந்த காரியம் முட்டின்றி இனிதின் முடிந்தது. ஆதலின், நீ உனதுலகேகுக.(விண்ணவர் தலைவன் போகிறுன். கண்ணபிரானுர் குந்தியைக்கண்டு) கன்னனிடம் போதற்கு இதுதான் தகுந்த வேளை. செல்லுக.

குந்தி:—கண்ணு, அவ்வாறே செய்கிறேன். உன் வஞ்சனையை என்னென்பேன்! (கன்னனை அடைகிறுள்.)

**கன்னன்**:—அம்மையீர், உம் வரவு நல்வரவாகுக. நீர் இங்கே வந்தது எதனை விரும்பி?

குந்தி:—அப்பா, மகனே, கன்னு, நான் உன்னைப் பெற்ற தாய். நீ என்னுருயிர் மைந்தன். நான் கன்னியாக மாளிகையிலிருந்தபோது ஒரு முனிவருளிய மந்திர வலியால் வந்த பகலவனுல் உன்னைப் பெற்றேன். பெற்றவுடன் உன்னை ஒரு பேழையுள் வைத்து யாற்றிடை விட்டேன்.

**கன்னன்** :—(தனக்குள்) இது கண்ணன் சூழ்ச்சியே! இருக்கட்டும். (அவளை நோக்கி) அம்மையீர், நீர் கூறுவது உண்மையா யிருக்கலாம். ஆயினும், இதனை நான் நம்பேன். இதன்முன் பல பேய்ச்சியர் என்னிடம் வந்து, என் தாயென்றனர். நான் அவர்களை என்னுடன் பேழையுளிருந்த சேலையை உடுத்துமாறுகூற, அவர்கள் அதனை உடுத்தினர்கள். உடனே அவர்கள் தசையெல்லாம் இழந்து, எலும்புருவாகி மடிந்தார்கள். அவர்கள் அடாத செயல்களைச் செய்தமையால், படாத பாடுகள் பட்டார்கள்.

குந்தி:—மகனே, அச்சேலையை என்னிடம் கொடு. நான் உன் ஐயமகல அதனை உடுத்துகிறேன்.

**கன்னன்**:—(அதனை யெடுத்து அவளிடம் தந்து), அம்மையீர், நீர் விரும்பியவாறே செய்க.

குந்தி:—(அதனை அணிந்து, அன்று பெற்ற தாய்போல விளங்குகிறாள்.) மகனே, கன்னா, உன்னை இத்தனை காலமும் அறியாதிருந்தேனே! (அவனை மார்புறத் தழுவி மகிழ்ந்து) என் கண்ணே, நான் உன்னை வளர்க்கும் பேறு பெறாது போயினேனே! குழந்தாய்,என்னோடு வந்து, உன் தம்பிமார் ஐவரும் ஏவல் செய்ய, முடி சூடிக் குரு நாட்டைத் தனிச் செங்கோலோச்சுவாயாக.

கன்னன்:—அம்மையீர், என்னைப் பெற்ற தாயாராகிய நீர், உம் பிள்ளையாகிய என்மேல் அன்பின்மையினாலோ, அன்றி மணமாகாத பருவத்தே பிள்ளையைப் பெற்றதால் வரும் பழிக்கு நாணியோ, என்னை ஆற்று வெள்ளத்திலே விட்டு விட்டீர். அன்று தொடங்கி இன்றளவும் என்னைத் தன் ஆருயிர்த்துணையெனக் கருதி, எனக்குக் கொற்றமா மகுடம் புனைந்து, அங்கநாட் டரசளித்து, ஓரிலையில் உடனுண்டு, தனக்குரிய தம்பிமார் தொண்ணூற்றொன்பதின்மரும் சுற்றத்தாரும் என்னடி பணிந்து ஏவலியற்ற எனக்குத் தோற்றமும் ஏற்றமும் தந்தான் அரவுயர்த்த மன்னர் மன்னன்! ஒரு நாள் நான் அவனுடைய மனைவியுடனே தனி யிடத்திருந்து விளையாட, அப்போது அங்கே அவன் வந்தனனாக, அவள் எழுந்தாள். நான் அதனை யுணராமல், அவளுடைய மேகலையைப்பற்றி இழுத்தனனாக, அதிலே கோத்திருந்த மணிகள் சிதறின. அதனைக்கண்டும், அவன் வந்ததுகண்டும், நான் அயர்ந்திருந்தேன். அதுகண்ட மன்னர் மன்னன்,“நான் இவைகளை எடுக்கவோ,கோக்கவோ?” என்றான்.இத்தகைய குணநலம் சிறந்த அரசர்க்கரசனுக்குச் செருமுனையிலே சென்று செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே எனக்கு இனிப்புகழும் கடமையும் அறமுமாம். பலபேசி யென்ன? நாளையே போர் தொடங்

குவது. அம்மையீர், நீர் வந்த காரணத்தை உள்ளவாறு சொல்லுக. (குந்தி அழ, அவள் கண்ணீரைத் துடைத்து) அம்மையீர், மூண்ட வல்வினையின் பயனலாது யார்க்கும் முயற்சியால் வருவதொன்றுண்டோ? நீர் வேண்டுவனவெல்லாம் தருவேன். கேட்டருள்க.

குந்தி:—அப்பா, மகனே, நீ எனக்கு இரண்டு வரம் தர வேண்டும். ஒன்று, நீ பாம்புக்கணையை உன் தம்பி விசயன் மீது ஒரு முறைக்குமேல் விடுதல் கூடாது; இரண்டாவது, நீ உன்னுடைய தம்பிமாருள் விசயனைத் தவிர ஏனையோரைக் கொல்லுதல் கூடாது. இவைகளே நான் உன்னிடம் வேண்டுவன.

கன்னன்:—அன்னையீர், நீர் வேண்டியன அனைத்தும் தந்தேன். ஓரம்பு தொடுக்க எதிரி பிழைத்தால், அவன்மேல் மறு கணை தொடுப்பது வீரர்களுக்கு ஆண்மை யாகுமோ? மானமோ? மன்னவர்க்கது ஏற்ற செயலாமோ? ஓர் அம்பே விசயன்மேல் தொடுப்பேன். மற்றத் தம்பிமாரும் பிழைப்பார். அஞ்சாதீர். (வணங்கி,) அம்மையீர், எனக்கு நீரும் இரண்டு வரம் தந்தருளவேண்டும்.

குந்தி:—கன்ன, அவைகளை இவை எனச் சொல்.

கன்னன்:—என்னைப் பெற்ற அருமை யன்னையீர், நான் விசயன் அம்பால் மடியும்போது எனக்குப் பாலூட்டி, உம் மகனென்பதை உலகறியச் சொல்லவேண்டும். ஈதொன்று. இரண்டாவது, போர் முடியுமளவும் நான் உமக்கு மகனென்பதை என் தம்பியர் ஐவரும் அறியாதிருக்கச் செய்யவேண்டும். ஏனெனில், இவ்வுண்மை தெரிந்தால், ஐவரும் தமது நாட்டை எனக்கே தருவர். நான் அதை வணங்கா முடி

மன்னவனுக்கே தருவேன். ஆதலின், எனது வேண்டுகோளுக்கு நீர் இசைதல் வேண்டும்.

குந்தி:—அவ்வாறே செய்கின்றேன். மகனே, என்னைப் போலும் தீவினை முதிர்ந்தோர் உளரோ? நிகரிலாக் கன்ன, நான் சென்று வருகிறேன். (மகனைத் தழுவி விடைபெற்றுப் போய்க் கண்ணபிரானாரை யடைந்து) வஞ்சகக் கண்ண, கன்னனைக் கண்டு விரும்பியது பெற்றேன்.

கண்ண பிரானார்:—அவ்வாறாயின், மிக நன்று. இனி உம் மைந்தர் வெற்றி பெறுவது திண்ணம். நான் சென்று வருகிறேன். (விடை பெற்றுச் சென்று, அன்றே ஐவரையும் அடைந்து, குந்தி செயலைத் தவிர ஏனைய நிகழ்ச்சிகளையெல்லாம் விவரித்துரைக்கின்றார்.)

## 11. சிவஞான சுவாமிகள்

கடலை ஆடையாக உடுத்த இம்மண்ணுலகத்திலே முதன்மை பெற்று விளங்கும் மலைகள் நமது இந்தியாவிலேதான் இருக்கின்றன. கங்கை சிந்து முதலிய பெரிய ஆறுகளுக்குப் பிறப்பிடமாக உள்ள இமய மலையைப் போலும் பெரிய மலை இந்த உலகத்திலே வேறு எங்கே இருக்கிறது? அதனுடைய உச்சியைக்காண அறிஞர் பலர் முயன்றும் இன்னும் அஃது ஒருவராலும் முடியாத செயலாக அன்றோ உள்ளது? இமய மலை இவ்வளவு பெருமையுடையதாக இருந்தாலும், அது சிறிது காலத்திற்கு முன்புதான் தோன்றியதெனக் கல்நூல் ஆராய்ச்சிக்கார ரெல்லாரும் கூறுகின்றனர். அவ்வாராய்ச்சியாளர் இமய மலையின் கல்லை ஆராய்ந்துபார்த்தபோது அம்மலை சில காலத்தின் முன்புதான் அமைந்திருக்க வேண்டுமென்ற உண்மை வெளியாயிற்று. அது சில நூற்றாண்டுகளுக்கு முன் கட

லினுள் முழுகியிருந்தது என்பதை அம்மலைமிசைக் காணப் படும் கடல்வாழ் உயிர்களின் உடற்கூடுகள் முதலிய சான்று களைக் கொண்டு அறிஞர் நிலை நாட்டுகின்றனர்.

'ஒப்புயர்வற்ற இமயமலையின் நிலைமையே இவ்வாறாயின், வேறு எம்மலைதான் முதலில் தோன்றிய பெருமையது?' என வினவின், அது தண்டமிழ் நாட்டின்கண் உயர்ந்து விளங்கு கிற பொதிகைமலையே. கல்நூல் ஆராய்ச்சியாளர் இம்மலையின் கல்லை ஆராய்ந்து இம்மலைதான் உலகத்திலேயே மிக முதியது என அறுதியிட்டுரைக்கின்றனர். உயிர்நூல் ஆராய்ச்சிப் புல வர்கள் மக்கள் முதலில் தோன்றிய இடமெனக் கூறும் தமி ழகத்தின் ஒரு பகுதியாக இம்மலை அமைந்திருந்தது. ஆத லின், இமயமலையினும் தொன்மையில் முதன்மை பெற்று, புலவர்களால் பெரிதும் புகழப்பெற்றது பொதிகை மலையே என்பது வெள்ளிடை மலைபோல விளங்கலாயிற்று.

இம்மலை சந்தன மரங்கள் செறிந்து நிற்கும் காரணத் தால், 'சந்தனப்போதிகைத் தடவரை,' எனப் புலவர் இதனைப் புகழ்வாராயினர். இம்மலையிலிருந்து தோன்றும் தென்றற் காற்று, சந்தன மரங்களிலே படிந்து, அவைகளின் நறு மணம் கலந்து உலாவி வரும்போது, தமது உடலில் வீசப் பெற்றோரே நல்வினையாளராவார். சிவபெருமானார் தாம் கூத் தாடும்போது தோன்றும் இளைப்பை நீக்கிக் கொள்ளும்பொ ருட்டு, 'ஆரம்மென்கால் திருமுகத்திடை வீசி மடுக்கவும் தமிழ் திருச்செவி மாந்தவும் அன்றோ தென்றிசை நோக்கி அடுக்க வந்து உவந்து ஆடுவான்?' எனத் திருவிளையாடற் புராண ஆசிரியர் கூறுகின்றார். இம்மலையை அடுத்துள்ள திரு நெல்வேலியில் வந்தருளிய சைவசமயாசாரியராகிய திருஞான

சம்பந்தமூர்த்தி நாயனர் தமது தேவாரத்திலே, 'தென்றல் வந்துலவும் திருநெல்வேலி,' என அருளிச் செய்திருக்கிறார்.

இச்சந்தன மரங்களே அன்றி, ஏனைய தேக்கு, வேங்கை, மா முதலிய மரங்களெல்லாம் இம்மலையில் வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்து நெருங்கி யிருக்கின்றன. பெரிய பெரிய மரங்களெல்லாம் வெட்டப்பட்டு, மலைக்காடுகளெல்லாம் பணம் பற்றி அழிக்கப்படுகிற இக்காலத்திலும் கூடப் பகலவனது ஒளி நுழையப் பெறாத பூமரச்சோலைகள் இம்மலைமேல் அளவிடற்கரியனவாய்க் காணப்பெறுகின்றன. இம்மரச்சோலைகளே பொதிகை மலையின் கைகளைப்போல மேலே போகின்ற மேகக் கூட்டங்களை யெல்லாம் பிடித்து, அங்குமிங்கும் அசைய விடாமற் பிணித்து, மிகுதியாக மழை பொழியச் செய்கின்றன.

யானைகள் மந்தை மந்தையாகக் கூடி மேய்ந்து திரிகின்ற இப்பொதிகையிலேயே தண்டமிழ் முனிவராம் அகத்தியனார் எழுந்தருளி யிருக்கின்றனர் எனப் பெரியோர் கூறுகின்றனர். அவருக்குப் பழைய பாவநாசம் என்னும் இடத்தில் ஓர் அழகான கோவில் திகழ்கிறது. அப்பெரியாருக்கு அம்பாசமுத்திரம் என்னும் ஊரிலும் ஒரு பெரிய தனிக்கோவில் இருக்கிறது. அப்பெரியார் பல அன்பர்களுக்கு நல்வரம் தந்தருளி வாழ்விக்கும் பெருமையுடையவர். அவர் வாழும் பொதிகை முடியிலிருந்தே பொருனைப் பேராறு தோன்றுகின்றது.

பொருனையாறு இம்மலைமிசைத் தோன்றிக் கீழ் நோக்கி ஓடி வருகிறது. இது சிறிது தூரம் வந்தவுடன், கன்னிகட்டி என்னும் ஓரிடம் இருக்கிறது. அவ்விடம் மரச்செறிவுள்ள

தாய், பேரழகினதாய் விளங்குகிறது. அதிலிருந்து சிறிது தூரம் இஃது ஓடி வந்து, வாண தீர்த்தம் எனும் இடத்திலே அதிக உயரத்திலிருந்து அருவியாக விழுகிறது. அவ்வருவி யிலே நீராடுவதற்கு ஆடி மாதத்தில் வரும் இருள் மதியன்று ஆண்டுதோறும் மாந்தர் பலர் பல இடங்களிலிருந்தும் பெருங்கூட்டமாகப் போகின்றனர். இதற்குக் கொஞ்சம் கீழே கட்டளைமலை என்னும் இடம் இருக்கிறது. இவ்விடத்தி லிருந்து வாண தீர்த்தத்தை நோக்குவார் உள்ளம் அடையும் இன்பத்திற்கு ஓர் எல்லையும் உண்டோ? இதற்கும் கீழே சேர்வையாறு என்னும் சிற்றாறு பொருநையில் வந்து சேர் கிறது. அவ்விடம் முண்டந்துறை எனப் பெயர் பெறும்.

பொருநையாறு பின்னும் கீழ் நோக்கி வந்து, கலியாண தீர்த்தம் என்னும் இடத்திலே அருவியாக விழுகிறது. இவ் வருவியில் நீராடுவது கடினம். ஏனெனில், இது மிகவும் சிக்கலான இடத்திலே இரண்டு பனைமர உயரத்துக்கு மேலி ருந்து விழுகிறது. இதற்குக் கொஞ்சம் கீழே வந்தபோதும் இது பழைய பாவநாசம் என்னும் இடத்தில் அருவியாக விழுகிறது. இவ்வருவியில் தலையைக் கொடுத்து முழுகுவது மிக இன்பந் தருவதாகும். இங்கிருந்து சிறிது தூரம் சென்ற வுடன், பொருநை, மலையிலிருந்து நிலத்தில் இறங்குகிறது. இவ்விடம் பாவநாசம் எனப் பெயர் பெறும். இவ்விடத்திலே தான் முக்களாலிங்கர் கோவில் இருக்கிறது. இப்பாவநாசத்திற் குச் சித்திரை மாதப் பிறப்புத்தோறும் அளவிறந்த மாந்தர் போய் நீராடிப் பெருமானாரைப் போற்றி வருகின்றனர். கோவிலின் வாயிலில் அமைந்துள்ள மண்டபத்திலே நிறை மதியிலே இருந்துகொண்டு யாற்றை நோக்கின், புலனாகும் இயற்கை யழகு எடுத்தியம்ப முடியாத மேன்மையுடையது.

இப்பாவநாசத்திலிருந்து அரைநாழிகைத்தூரம் நடந்து சென்றால், ஆற்றின் கரையிலே ஒரு பேரூர் இருக்கிறது. அது விக்கிரம சிங்க புரம் எனப் பெயர் பெறும். விக்கிரமசிங்கன் என்னும் மன்னவன் பெயரால் வழங்கப்பெறும் அவ்வூரின் நாப்பண் சிவபெருமானுருடைய பெருங்கோவில் இருக்கிறது. அந்நகரிலே தேரோடும் தெற்குத்தெருவில் பொருநையாற்றிலிருந்து பிரிந்து வரும் வாய்க்காலின் வட கரையிலே ஒரு சிறு கோவில் காணப்படுகிறது. பாவ நாசத்துக்குப் போகிறவர்களில் ஒருவரேனும் அக்கோவிலைக் காணாமற் போக முடியாது. ஏனெனில், அத்திருப்பதிக்குப் போகும் வழியே அத்தெரு. அக்கோவில் சிறியதாக இருந்தாலும், பார்ப்பவர்களுடைய கண்ணைக் கவரும் பேரழகினதாய்த் தெய்வத் தன்மை வாய்ந்ததாய் அமைந்துள்ளது. அதற்கு அடுத்து வடபுறம் ஒரு சிறு வீடு தெருவடியில் இருக்கிறது. அதனருகே செல்வார் ஒவ்வொருவருக்கும், 'இக்கோவில் யாருடையது? இச்சிறு வீடு யாருடையது?' என்று அறிந்து கொள்ள அவா எழாமலிராது. அப்பேரூரில் ஐந்து வயதுச் சிறு பிள்ளையை வினவினும், 'இக்கோவில் ஒரு பெரியாருடையது; இவ்வீடும் அவருடையதே. அப்பெரியார் தாம் பிறந்தருளிய வீட்டின் தலை வாயிலிலேயே தெய்வமாக அறிஞர்களாலே கும்பிடப் பெற்றும் புகழப் பெற்றும் விளங்குகின்றார். அவரே எங்கள் குல தெய்வமாகிய மாதவச் சிவஞான சுவாமிகள்,' என்னும் விடையை நாம் அக்குழந்தையிடமிருந்து பெறாமல் இருக்க முடியாது. 'இம்மாதவச் சிவஞான சுவாமிகள் யார்? இவருடைய வரலாறு என்ன? இவ்வளவு பெருமையை இப்பெரியார் எவ்வாறு பெற்றார்?' என்னும் செய்திகளை விவரமாக ஆராய்வோம்:

விலும் விடும் இருக்கும் இடத்திலே ஒரு சிறு மாளி
ருந்தது. இடம்பட வீடெடாமல் சிறிதாகக் குடும்பவா
க்குப் போதுமான முறையில் அமைந்திருந்த அம்ம
யிலே ஒழுக்கத்திற் சிறந்த பெரியார் ஒருவர் வாழ்
தனர். அவர் சைவ வேளாள மரபினர். அவர் மு
ய்த நல்வினைப் பயனாலே அகத்திய முனிவரை நோ
ருந்தவம் புரிந்து, தமது குடும்பத்திலே எழு தலை மு
வும் அருட்புலமை நிரம்பும் வண்ணம் வரம் பெற
ருட்புலவராக ஆயினர். அவர் வழியிலே ஆறாவது
றையாக ஆனந்தக் கூத்தர் என்பவர் தோன்றினர். அ
வி அறிவு ஒழுக்கங்களில் நிரம்பிய தன்மையுடையவ
ர்ந்து வந்தனர். அவருக்குத் தகுந்த வயது வந்தவுட
த குல வாழ்க்கையையுடைய உயரிய குடும்பத்தி
ந்த மயிலம்மையார் என்ற பெண் மணியை அவரு
வருடைய தந்தையார் திருமணம் செய்வித்து, அவ
லற வாழ்க்கையிலே நிறுத்தினர்.

தம்மைக் காத்து, தம்மைக் கொண்டவரைப் பே
க சான்ற சொற்காக்கும் சோர்விலாப் பெண்ண
ாகிய மயிலம்மையார், தம் கணவர் குறிப்பறிந்து ஒழு
மையார். அவரது திருமணி வயிற்றிலே ஏழாவது
றையாக உலக மெல்லாம் செய்த அருந்தவப்பயனாக
ண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு முக்களாலி

தார். முக்களாலிங்கர் நாடோறும் தவருமல் பள்ளிக்கூடத் துக்குப் போய்க் கல்வி பயின்று வருவாராயினர். அவர் ஆண்டில் இளையவராக இருந்தாலும், அறிவில் முதியவராகப் பள்ளிக்கூட ஆசிரியர் முதலிய அனைவராலும் பெரிதும் மதிக்கப் பெற்று வந்தனர். அவரது அறிவு நுட்பத்தை இருமுதுகுரவரும் நன்முக உணர்வார்களேனும், அதனைப் பிறர் எடுத்துச் சொல்லக் கேட்ட போதெல்லாம் களிப்புக் கடலுள் மூழ்குவாராயினர். முக்களாலிங்கர், "அன்பே ஒருருவெடுத்து வந்ததோ? ஒழுக்கமுடைமைக்கு இவர் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்முர். இவரைப் பெற இவர் தந்தையார் என் நோற்முர்கொல்?" எனப் பிறர் பாராட்டும்படி இயல்பிலே சீரிய நடையுடையவராக ஆர்வத்தோடு படித்து வந்தார்.

ஒருநாள் முக்களாலிங்கர் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்துகொண்டிருந்தார். அவருக்கு எதிரே சில தம்பிரான் சுவாமிகள் வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் தங்கள் ஞானசிரியரைப் பணிந்து விடை பெற்று, சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பதிகடோறும் சென்று வழிபட்டு வருபவர்களாய், பாவநாசத்தில் முக்களாலிங்கரையும் வணங்கித் திரும்பிச் சென்றுகொண்டிருந்தார்கள். அப்பெருமானுடைய திருப்பெயரைத் தாங்கிய சிறுவராகிய முக்களாலிங்கர் தம்பிரான்களைக் கண்டதும், தம்மையறியாதே அவர்களிடத்திற் சென்று ஈடுபட்ட மனமுடையவராகி, ஓடோடிச் சென்று வணங்கி, அவர்களை நோக்கி, "சுவாமிகளே, நீங்கள் நெடுந்தூரத்திலிருந்து வருபவர்களாகத் தோற்றுகிறீர்கள். இப்போது அடியேனுடைய சிறு குடிலுக்கு எழுந்தருளி, உணவுண்டு செல்ல வேண்டுகிறேன்.

அடியேனுடைய வேண்டுதலுக்கு இசைந்தருளவேண்டும்,'' எனக் கேட்டுக் கொண்டார். அவர்கள் அவருடைய பெருங் குணத்தைக் கண்டு வியந்து, மறுது இசைந்து, அவருடன் சென்றார்கள்.

அவர் அடியார்களைத் தமது அகத்துக்கு அழைத்தேகி, இருக்கையில் எழுந்தருளச் செய்து பணிந்து, தம் தாயாரை அணுகி, "அம்மா, நான் திருவாவடுதுறை மடத்துத் தம்பிரான் சுவாமிகள் சிலரை அழைத்து வந்திருக்கிறேன். அவர்கள் பசித்திருக்கின்றார்கள். அவர்களுக்கு அன்பு கூர்ந்து இனிய உணவு படைத்தருளவேண்டும்,'' என வேண்டிக் கொண்டார். தம்பிரான்களுடைய வருகையைத் தெரிந்த அம்மையார், அவர்களைக் கண்டு வணங்கி, தாமும் தம் மைந்தருடைய வேண்டுதலைத் திரும்பவும் புகன்று, அவர்களுக்கு இன்னடிசில் அறுசுவையோடும் விரைந்தமைத்து, உண்பித்தனர். அத்தம்பிரான்கள் உண்டு, மகிழ்ந்த சிந்தையரானார்கள். அப்பொழுது முக்களாலிங்கர் தம் அன்னையாரைப் புகழ்ந்து,

"அருந்ததிஎன் அம்மை அடியவர்கட் கென்றும்
திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
மானம் தவாத மயில்.''

என்னும் திருப்பாடலை இயற்றினார். அவர்கள் அவ்வம்மையாரையும் முக்களாலிங்கரையும் வாழ்த்திப் புறத்தே சென்று ஆங்குள்ள ஒரு திருமடத்திலுற்று வைகினார்கள்.

வெளியிற் சென்றிருந்த ஆனந்தக் கூத்தர், வீட்டுக்குத் திரும்பிவந்து, நிகழ்ந்த செய்திகளை உணர்ந்தார்; தம் மைந்

தரை இரு கரங்களாலும் வாரியெடுத்து மார்போடணைத்துக் கொண்டார். அவர் முக்களாலிங்கரை அன்புடன் மடியில் வைத்துக்கொண்டு, "அப்பனே, உன்னைப்பெற யான் என்ன தவம் செய்தேனோ? உன் தாய் யாது நோற்றாளோ? அத் தம்பிரான் சுவாமிகள் யாண்டுச் சென்றார்கள்? அவர்கள் இருக்கும் இடத்தைக் காட்டு," எனக் கேட்டனர். அதற்கு அத்திருமகனார், "தந்தையீர், அவர்கள் நமது ஊர் மடத்தி லிருக்கின்றார்கள். காண்பிக்கிறேன்," எனத் தம் தந்தை யாரை அழைத்துக்கொண்டு அவர்கள் இருந்துழிச் சென்ற னர். ஆனந்தக் கூத்தர் அவர்களைத் தமது வீட்டிற் கழைத் தேகி, அன்று தங்கிப் போமாறு பணிந்து கேட்டுக்கொள்ள, அவர்களும் இசைந்து தங்கினார்கள்.

மறுநாட் காலையில் தம்பிரான் சுவாமிகள் விடைபெற்றுச் செல்லப் புறப்பட்டார்கள். அப்போது முக்களாலிங்கர் அவர்களை வணங்கித் தம்மையும் உடனழைத்துச் செல்லும் படி வேண்டிக்கொண்டதோடு, தம் தந்தையாரது அடிமிசை வீழ்ந்தெழுந்து, "தந்தையீர், அடியேன் இப்பெரியாரோடு ஏக விரும்புகின்றேன். பிறவி நோயறுப்பான் ஞானாசிரியரை அடையும் தேட்டமே எனக்குப் பெரிதும் முன் நிற்கின்றது. அடியேனுடைய மனம் இல்லற வாழ்க்கையிற் செல்லாதது டன், அதனை இயல்பிலேயே வெறுக்கவும் செய்கின்றது. ஆத லின், அருள் கூர்ந்து சிறியேனைச் சுவாமிகளோடும் அனுப்பி யருளவேண்டும். மறுத்தருளற்க," எனப் பலவாறு கேட்டுக் கொண்டார். பார்த்தார் ஆனந்தக் கூத்தர். அவர் ஒரு மைந் தரே தம் குலத்துக்குள்ளார்; அவரைப் பிரிய அவருடைய மனம் எவ்வாறு இடந்தரும்? இருந்தாலும், அவர் அறிவிற் சிறந்த புலவராதலின், ஒருவாறு சிந்தித்து, உளம் தேறி,

"மகனே, உன்னைப் பிரிய என் மனம் இடந் தருகின்றிலது. ஆயினும், உனது வேண்டுதல் அறிவின்பாற் பட்டதாதலின், உன்னைத் தடுப்பதும் சரியன்றென்று அது முடிவுகட்டுகிறது. ஆதலின், நீ ஞானசிரியரைக் கண்டு, வீட்டு வழி யுணர்ந்து, அந்தமில் பேரின்பப் பெருவாழ்வை அடைவாயாக," என வாழ்த்தி, வழியனுப்பினர். இதனை யுணர்ந்த மயிலம்மையார் மனத்தில் அடக்க முடியாத கவலை தோன்றினும், அதனைத் தமது அறிவால் வென்று, தம் ஒரு மகனாரை அம்முனிவர்களு டன் திருவாவடுதுறைக்கு அனுப்ப இசைந்தனர். முக்களா லிங்கர் தம் ஒப்புயர்வற்ற தந்தையாரையும் தாயாரையும் அடி பணிந்து, அவர்களைப் பிரிய மாட்டாமை ஒருபக்கமும், வழிச் செலவு ஒருபக்கமுமாக இழுக்க, ஒருவாறு தெளிந்து, அவர் களிடம் விடை பெற்றுச் சென்றார்.

தம்பிரான் சுவாமிகள் அவரைத் தங்களுடன் அழைத் துச் சென்று, சேர நாட்டிலுள்ள சுசீந்திரத்தைச் சேர்ந்தார் கள். அவ்வூரில் திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த ஈசான மடம் இருக்கிறது. அம்மடத்திலே புகுந்து, அங்கே கோவில் கொண்டு விளங்கும் மடத்து முதலாசிரியராகிய நமச்சிவாய மூர்த்திகளைக் கும்பிட்டு, திருவருள் நோக்கம் பெற்றுக் கொண்டு, அவர்க்ள் ஒடுக்கத்திலே போய், அங்கே மடத்தின் இரண்டாம் ஆசிரியராக எழுந்தருளியிருக்கும் வேலப்ப தேசிக சுவாமிகளைக் கண்டு, பேரன்போடு வணங்கினர்கள். அவ்வாசிரியர் அவர்களை வாழ்த்தி, அவர்களுடன் வந்திருந்த முக்களாலிங்கரைப் பார்த்தருளி, அவரை யாவரென வின வினர். முனிவர்கள் நடந்த செய்திகளைப் புகன்றார்கள்.

வேலப்ப தேசிக சுவாமிகளுக்கு அச்சிறுவர்மீது திரு வருள் பதிந்தது. அதனால், அவர் முக்களாலிங்கரைத் தம்

அருகிலே அழைத்து, இன்னுரை பகர்ந்து, அவருக்குச் சமயம் சிறப்பு எனப்பெறும் இரு வகைத் தீக்கைகளையும் இயற்றி, கல்லாடை தந்து, வாழ்த்தி யருளினர். சிறிது காலம் கழித்து, அப்பெரியார், அச்சிறுவர் துறவொழுக்கம் விதித்த சிறு நூல்களை யெல்லாம் ஐயந்திரிபின்றிக் கற்று வல்லவரா கித் தென்மொழி வடமொழிகளிலும் வல்லமையும் புலமையும் நிரம்பப் பெற்றுக் குன்று ஒழுக்கத்தோடும் இருப்பக்கண்டு, அவருக்கு நிருவாண தீக்கை செய்து, சிவஞானத் தம்பிரான் எனத் தீக்கைப்பெயர் வழங்கி, மெய் கண்ட நூல்களையும் பண்டார நூல்களையும் போதித்து, வீட்டு நெறி காட்டியரு ளினர்.

மெய் கண்ட நூல்கள், சிவஞான போதம் முதலாக உள்ள பதினன்கு. அவை மெய்கண்ட தேவராலும் அவரு டைய வழி மாணவர்களாலும், இயற்றப்பெற்றமையாலும், மெய் காணச் சென்று படித்தாரை மெய் கண்டவராகச் செய் வதாலும், மேய்கண்ட நூல் எனப் பெயர்பெற்றன. பண்டார நூல்கள் சன்மார்க்க சித்தி முதலாக உள்ள பதினன்கு. அவை பண்டாரம் எனப்படும் ஞானசிரிய மூர்த்திகளாற் செய்தருளப் பெற்றமையாலும், அரிய பெரிய சித்தாந்த நற் பொருள்களெல்லாம் ஒருங்கடங்கியுள்ள மூல பண்டாரம் எனப்படும் ஆகையாலும், பண்டார நூல்கள் என அடிப்பட்ட சான்றோர்களால் வழங்கப்பெற்று வருகின்றன. சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அம்மெய்ந்நூல்களைக் கேட்ட துணை யானே சிந்தித்துத் தெளிந்து, மெய்யுணர்வின் முற்றுப் பேறு டையராய், முனிவர் பெருமானாய் அமர்ந்தருளினர்.

வேலப்ப தேசிக சுவாமிகளுக்குத் திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் தம் ஞானசிரியரைக் கண்டு வணங்

கப் பேராவல் எழுந்தது. அதனால், அவர் சிவஞான சுவாமிகளையும் ஏனைய தம்பிரான்களையும் தம்முடன் அழைத்துக்கொண்டு, சுசீந்திரத்தை விட்டுப் புறப்பட்டு, பாண்டி நாட்டிற் சென்று, பல பதிகளையும் கண்டு, திருநெல்வேலியில் சில நாள் தங்கி, அதற்கடுத்துள்ள சேப் பறையை அடைந்து, அம்பலவாணர் செம்பவள மேனியையும் திருக்கூத்தையும் கண் குளிரக் கண்டு வணங்கி, இராசவல்லி புரத்திலே தங்கியிருந்தனர். அவ்வூரில் கோவில்கொண்டிருக் கும் இராசவல்லியாராகிய அகிலாண்டேசுவரியம்மையார்மேல் சிவஞானசுவாமிகளைக்கொண்டு ஒரு பதிகம் செய்விக்கவேண் டுமென எண்ணிய தேசிக சுவாமிகள், அதனை அவருக்குக் குறிப்பித்தனர். உடனே சிவஞான முனிவர் அகிலாண்டேசு வரி பதிகம் என்னும் அரிய பத்துப் பாக்களைப் பாடிமுடித்துத் தம் ஆசிரியர் முன்பு அரங்கேற்றினர். ஞானாசிரியர் அவரை உடனழைத்துக்கொண்டு கோவிலுக்குப் போய், சிவபெரு மானையும் அகிலாண்டேசுவரி யம்மையாரையும் பணிந்து, அம்மையார் திருமுன்பு அப்பதிகத்தைப் பாடஆணை தந்தனர். சுவாமிகள் அவ்வாறே கேட்டார் உள்ளமுருக, அதனை ஓதி நின்றனர். அவ்வூரை விட்டுச் சென்ற ஞானாசிரியர் தம் மாண வரோடும் கொங்குநாட்டுத் தலங்களையும் வணங்கி, ஆதி சிதம் பரம் எனப்படும் திருப்பேரூரை அடைந்து, அங்குப் பெருமா னுரை வணங்கிக்கொண்டு, தங்கியிருந்தனர். வேலப்ப தேசிக சுவாமிகள் அவ்வூரிலே சிவபெருமானுருடைய பொன்னடி நீழலில் இரண்டறக் கலந்தருளினர்.

சிவஞான சுவாமிகள் தம் ஞானாசிரியருக்குப் பத்து நாளும் குரு பூசை சிறக்கச் செய்தனர். பின்பு அவ்வாசிரி யருக்குப் பூசனைபுரிய ஒருவரை அங்கே வைத்து, அவர் ஏனைய

அடியார்களோடும் திருவாவடுதுறையை அடைந்து, ஒன்பதாம் ஆசிரியராக எழுந்தருளியிருந்த வேலப்ப தேசிகசுவாமிகளைப் போற்றித் திருவருள்பெற்று, இரண்டாம் ஆசிரியராக இருந்த வேலப்ப தேசிக சுவாமிகள் திருப்பேரூரில் இறைவ னடியிற் சேர்ந்தமையைச் செப்பினர். அதனைக் கேட்ட ஞானசிரியர், தம் தம்பிரான்கள் பல்லோருள்ளும் சிறந்த வேலப்பத் தம்பிரானுக்கு இரண்டாம் ஆசிரிய பட்டம் சூட்டியருளினர். இந்த இரண்டாம் ஆசிரியர் **பின்** வேலப்ப தேசிகர் என்னப் பெறுவார்.

ஞானசிரியர் தம் துணையாசிரியரையும் சிவஞான சுவாமிகள் முதலிய தம்பிரான்களையும் அழைத்துக்கொண்டு, தென்னாடு சென்று, சுசீந்திரத்தில் துணையாசிரியரை வைத்துவிட்டு, திருக்குற்றாலம் சென்று பணிந்து, சங்கரநயினார் கோவிலுக்கு வந்து, அங்கே நெற்கட்டுஞ் செவ்வில் மன்னராக இருந்த சிவஞானப்பூலித்தேவருக்கு ஏற்பட்டிருந்த குன்ம நோயை நீக்கி ஆட்கொண்டு தங்கும் நாளையிலே சிவபெருமானார் பொன்னடி நீழலை அடைந்தருளினர். சிவஞான சுவாமிகள் இது செய்தியைச் சுசீந்திரத்திருந்த ஞானசிரியராகிய பின் வேலப்ப தேசிக சுவாமிகளுக்குத் தெரிவிக்க அடியார்களை அனுப்பிச் சங்கர நயினார் கோவிலிலேயே ஆசிரியருக்குப் பத்துநாளும் குருபூசை செய்து பின்னரும் பூசித்திருந்தனர்.

இது செய்தி யறிந்த பின் வேலப்ப தேசிகர் விரைந்து வந்து, சங்கர நயினார் கோவிலில் தம் ஆசிரியரை வணங்கி, சிவஞான சுவாமிகளையும்உடனழைத்துக்கொண்டு திருவாவடுதுறையை யடைந்து, ஞானசிரியராக எழுந்தருளியிருந்தனர். அவர் தம் அடியாரிற் சிறந்த **திருச்சிற்றம்பலத் தம்பி**

ரானைத் தமக்கடுத்த இரண்டாம் ஆசிரியராகப் பட்டஞ் சூட்டியருளினர். அப்போது சிவஞான சுவாமிகள் பஞ்சாக்கர தேசிகர் மாலை என்ற ஒரு புகழ் மாலையை இயற்றினர்.

சிறிது காலம் சென்ற பின்பு, தென்னாடு சென்று, தம் இளவலாகிய திருச்சிற்றம்பல தேசிகரைச் சுசீந்திரத்தில் இருத்திப் பல பதியும் வணங்கி வந்த பின் வேலப்ப தேசிகருடனே சிவஞான சுவாமிகளும் சென்று, திருவாவடுதுறைக்கு மீண்டனர். அவர் துறைசையில் ஞானாசிரியரை வழிபட்டுத் தங்கி யிருந்தனர். அவரைச் சில நண்பர்களும் மாணாக்கர்களும் வேண்டிக்கொண்டபடி சுவாமிகள் நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் இயற்றிய விருத்தியுரையைத் திருத்தினர்; திருவாரூர் வயித்தியநாத நாவலர் இயற்றிய இலக்கண விளக்கத்தில் உள்ள வழுக்கள் பலவும் வெளிப்படுமாறு இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் ஒரு நூல் இயற்றினர். மரபட்டவணை என வழங்கும் சித்தாந்த மரபு என்னும் ஒரு சிறுநூல் இருக்கிறது. தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த ஒருவர் இந்நூலைத் திருவாவடுதுறை ஆதின சம்பிரதாயக் கட்டளை எனக் கொண்டு, சித்தாந்த மரபு கண்டனம் என மறுப்புரை எழுதினர். அக்கண்டன நூலைக் கண்டவுடன் சுவாமிகள் சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம் என்னும் ஒரு மறுப்பெழுதி வெளிப்படுத்தினர். தம்மிடம் கல்வி பயின்றுவந்த மாணாக்கர்களுடைய வேண்டுதலின்படி சுவாமிகள் சிவஞான போதத்திற்கு ஒரு சிற்றுரை எழுதியதோடு, சிவஞானசித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரையும் அருளிச் செய்தனர்.

இவ்வாறு அருட்பணி யாற்றியிருந்த முனிவர் பெருமான் ஒரு நாள் ஞானாசிரியரை அடைந்து, அருள் விடை

பெற்றுத் தம் மாணுக்கர்கள் சூழச் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் கோவில்களை வழிபடுமாறு புறப்பட்டுச் சென்றனர். அவர் திருத்துருத்தி, மாயூரம் என்னுந் தலங்களை வணங்கிக் கொண்டு, சிதம்பரம் சேர்ந்து, பொன்னம்பலவரைத் தொழுது, சில நாள் தங்கியிருந்தனர். அந்நாட்களில் அவர் கொற்றவன் குடியிற்போய் உமாபதி சிவத்தையும் அருணமச்சிவாய தேசிக ரையும் வணங்கியதோடு, திருக்களாஞ்சேரி சென்று மறை ஞானசம்பந்தரையும் வணங்கி வந்தார். சிதம்பரத்தின் நீங்கிய முனிவர், திருப்பாதிரிப்புலியூரை யடைந்தனர். இவ்வூரி லேயே திருநாவுக்கரசு நாயனுர் கடலிலிருந்து கற்றாணைத் துணையாகக் கொண்டு கரையேறினுர்.

சிவஞான முனிவர் அந்நகரிலே தங்கியிருந்தனர். ஒரு நாள் கோவிலின்முன் ஒரு பேரவை கூடிற்று. அதில் பல பெரும்புலவர்களும் செல்வரும் குழுமியிருந்தார்கள். அப் போது புலமையும் செல்வமும் ஒருங்கே அமையப்பெற்ற ஒரு பெரியார், நூறு பொன் கொண்ட ஒரு பொற்கிழியை அச்சபைமுன் வைத்து, "கரையேறவிட்ட முதல்வா, உன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ?" எனும் ஈற்றடி கொடுத்து, "இதனைப் பாடி முடிப்போர் இக்கிழியைக் கொள்க," எனச் சொல்லினர். அப்பாடல் அன்று மாலை வரை முடிக்கப் பெருதிருந்தது. அங்கே சுவாமிகள் சென்றபோது செய்தி யறிந்து, அங்கிருந்த ஓர் ஏழையை நோக்கி, அப்பொற் கிழியை எடுத்துக்கொள்ள ஏவி, அப்பாடலை முடித்தனர். அது பின் வருவது :

"வரையேற விட்டமுதம் சேந்தனிட வருந்தினைவல்
லினமேன் றுலும்

உரையேற விட்டமுத லாகுமோ எனைச்சித்தேன்
றுரைக்கில் என்னும்
நரையேற விட்டமுத ஞளவனுக் கோண்டேறும்
புலிசை மேவும்
கரையேற விட்டமுதல் வா!உன்னை அன்றியுமோர்
கதிஉண் டாமோ?''

சில நாட்களின் பின் சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூரை விட்டுப் புறப்பட்டுப் பல பதிகளையும் வணங்கிப் போய்க் காஞ்சிமாநகரைச் சார்ந்தார். அங்கே ஏகாம்பர நாதரையும் திருக்காமகோட்டத்தில் காமாட்சியம்மையாரையும் பணிந்து, அருள் பெற்று, அவர் அவ்வூரில் சில காலம் தங்கியிருந்தனர். அவ்வூரிலுள்ள அறிஞர் பலரும் நாடோறும் சுவாமிகளை வந்து கண்டு போயினர். அவர்களில் சிலர் திருமால் அடியார். அவர்கள் ஒரு நாள் அவரை நோக்கி, "எங்கள் கம்ப ராமாயணம் ஒன்றுமே தமிழில் சிறந்து விளங்குவது,'' என்றுரைத்தனர். அதனைச் செவியேற்ற சுவாமிகள் அவர்களுடைய தருக்கை ஒழிக்க எண்ணி, "அற்றன்று. அக்கம்ப ராமாயணத்தின் நந்திச் செய்யுளாகிய 'நாடிய பொருள் கை கூடும்' என்னும் செய்யுளே முற்றும் குற்றம்,'' எனக் கூறி, அச்சங்கைகளை யெல்லாம் அவர்களுக்கு விரித்தருளினர். அவர்களால் அச்சங்கைகளுக்குத் தகுந்த விடை கூற முடியவில்லை. அதனால், அவர்கள் மனம் கலங்கி, "தெரியாது கூறினோம்,'' எனப் பணிந்தார்கள். அப்போது சுவாமிகள் தண்ணளிகூர்ந்து, அவர்கள் உவப்புற, அச்சங்கைகளுக்குத் தாமே விடைவிரித் தருளினர். அந்நூல் கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி என்னும் பெயரால் வழங்கப்பெறுகிறது.

திருவண்ணுமலேயில் தேய்வ சிகாமணி தேசிகர் ஆதீனம் என்னும் திருமடம் ஒன்று இருக்கிறது. அது திருவண்ணுமலே ஆதீனம் என்றும் சொல்லப்பெறும். அவ்வாதீனத்தைச் சேர்ந்த ஞானப்பிரகாச முனிவர் என்பவர் சிவஞான சித்தியாருக்குத் தமது சிவசமவாதக் கொள்கைக்கேற்ப ஓர் உரை எழுதியிருக்கிறுர். ஒரு சமயம் அவ்வாதீனத்துப் பண்டார சந்நிதிகளில் சிவஞான சுவாமிகளுடைய காலத்திலிருந்த பெரியார் காஞ்சி நகருக்கு வந்தனர். அவர் தம் அடியார் ஒருவரைச் சுவாமிகளிடம் அனுப்பி, "சிவஞான சித்தியாரினுள்ள, 'என்னே யிப்பவத்திற் சேராவகை எடுத்து,' என்னும் செய்யுளில் 'எடுத்து' எனும்சொல்லுக்குப்பொருள் என்னே?" என வினவி வருமாறு செய்தனர். சிவஞான முனிவரும் சிவஞான சித்திக்கு உரை யெழுதியிருந்தா ராதலின், அவருடைய உரையினும் தம்முடைய மடத்து ஞானப்பிரகாசருடைய உரை சிறந்தது என்பதைச் சுவாமிகளுக்குச் சுட்டிக் காட்டவே அப்பண்டார சந்நிதியார் அவ்வாறு செய்தனர். இதனே நுண்ணறிவா னுணர்ந்த சுவாமிகள், உடனே 'எடுத்து' என்னும் சோல்லுக்குச் சிவசமவாதவுரை மறுப்பு என்ற நூலே இயற்றினுர். அதற்கு அப்பண்டார சந்நிதிகள் மறுப்பு வெளிப்படுத்தவும், சுவாமிகள் எதனுலும் போழ்படாதவாறு, 'எடுத்து' என்னும் சோல்லுக்கு இட்ட வயிரக் குப்பாயம் என்ற அரிய நூலே இயற்றியதோடு சிவஞான சித்திக்கு ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய உரை முற்றும் போலியுரை என விளக்க, சிவசமவாதவுரை மறுப்பு என்னும் கண்டன நூலேயும் இயற்றியருளினுர்.

காஞ்சீ புரத்தில் தங்கிய காலத்தில் சுவாமிகள் செய்த நூல்கள் பல. பெருமை பொருந்திய சித்தாந்த சைவ ஆசிரி

யராகிய சர்வாத்ம சம்பு சிவாசாரிய சுவாமிகள் வடமொழியில் அருளிச் செய்த சித்தாந்தப் பிரகாசிகையைச் சுவாமிகள் தமிழில் மொழி பெயர்த்து, வெளிப்படுத்தினர். கஞ்சனூரில் பிறந்தருளிய அரதத்த சிவாசாரிய சுவாமிகள் வைணவமத கண்டனம் செய்து, சைவ சமயத்தை நிலை நிறுத்தும்பொருட்டு, தீயிலே பழுக்கக் காய்ச்சிய இருப்பு முக்காலியிலே இருந்து கொண்டு, சிவபெருமானே பரம்பொருள் என இருபத்திரண்டு ஏதுக்களாலே நிலை நாட்டிய சுலோக பஞ்சகம் என்ற வடமொழி நூலைத் தமிழிலே அவர் மொழி பெயர்த்துச் செய்யுளாக வெளிப்படுத்தினர். மேலும், சைவப் பெரியாராகிய அப்பய்ய தீக்கிதர் வடமொழியில் பாடியுள்ள சிவ தத்துவ விவேகம் என்ற நூலையும் அவர் அருமையான கவிகளாகவே மொழிபெயர்த்தருளினர். தமிழ் மொழிக்கு இப்பொழுது காணக் கிடைக்கும் முதல் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்துக்கு இளம்பூரணர்,சேனவரையர்,நச்சினார்க்கினியர் என்னும் மூன்று உரையாசிரியர் உரை யெழுதி யிருக்கின்றனர். அவ்வுரைகளிலுள்ள ஐயந் திரிபுகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு, அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும் முதற் சூத்திரத்திற்கும் சூத்திர விருத்தி என ஓர் அரிய விரிவுரையையும் அவர் அருளிச் செய்தனர். மேலும், தருக்க சங்கிரக அன்னம் பட்டீயங்களையும் அவர் தமிழில் மொழி பெயர்த்தார்.

மாதவச் சிவஞான சுவாமிகள், ஒருநாள், திருவொற்றியூர் முதலிய பல ஊர்களையும் சென்று காண வேண்டுமென்று விருப்பங் கொண்டார். அதன்படி அவர் தம் மாணாக்கர் பல்லோருடனும் காஞ்சிபுரத்தினின்றும் புறப்பட்டுப் பலபதிகளிலும் பணிந்து சென்று, திருவொற்றியூரை அடைந்தார். அவ்

லூரில் மணலி சின்னையா முதலியார் என்பவர் ஒருவர் இருந் தார். அவர் அளப்பருஞ் செல்வம் படைத்ததோடு, அதனி னும் மிக்க அன்பும் அருளும் உடையவர். அவர் சுவாமிகளைப் பணிந்து, அவ்வூரில் தங்கியிருக்க வேண்டுமென்று பலவாறு வேண்டிக்கொண்டார். சுவாமிகளும் அதனை மறுது, இசைந் தருளினர்.

சுவாமிகளுக்கு நெடுநாளாக சிவஞான போதத்துக்கு ஒரு விரிவுரை இயற்றவேண்டுமென்ற எண்ணம் இருந்தது. அதற்கு ஆகமங்களை நன்கு ஓதுதல் வேண்டுமென்றுநினைத்த அவர், தமது நினைப்பைச் சின்னையா முதலியாரிடம் சொல் லினர். அந்த அன்பர் உடனே ஆகமங்களை நன்குணர்ந்த பல சைவ அந்தணர்களை வரவழைத்து, அவைகளை ஓதுவித்த னர். சுவாமிகள் அவைகளை நன்கு கேட்டுச் சிந்தித்து, முன் னெடுபின் மலைவின்றி, முற்றத் தெளிந்துகொண்டனர். அவ் வந்தணர்கள் அவருடைய பேரறிவாற்றலைப் பெரிதும் பாராட் டிச் சென்றார்கள்.

சுவாமிகள் அவ்வூரிலே நித்தல் விழாவணி கண்டு, சிவ பெருமானைப் போற்றி இருந்தனர். சிறிது காலம் சென்றபின் அவருக்குக் காஞ்சிமாநகரம் போக நினைவு தோன்றிற்று. அத னைத் தம் அன்புப் பெருக்குடைய முதலியாரிடம் தெரிவித்து விடைதருமாறு அவர் விரும்பினர். முதலியாருக்குச் சுவாமி களைப்பிரிய எவ்வாறு மனம் இடந்தரும்? அவர் சிந்தைகலங்கி நின்றார். இருந்தாலும், சுவாமிகள் வற்புறுத்தியதனாலே அவர் வழி அனுப்ப இசைந்து, நெடுந்தூரம் நடந்து வந்து, வழியனுப்பினர். சுவாமிகள் அவரை நீடு வாழ வாழ்த்திச் சென்று, காஞ்சீ புரத்தைச் சேர்ந்தனர்.

உலகெலாம் செய்த பெருந்தவப்பயனைப் பிறந்தவரா கிய மாதவச் சிவஞான சுவாமிகள், ஒருமாவின் கீழுறை ஓதி, அவ்வூரிலே வாழும் நாளையிலே இறைவர் திருவருள் ஆற்றல் வந்து சேரச் சிந்தித்து சிவஞான போதத்திற்கு உலகம் போற் றும் விரிவுரை இயற்றியருளினர். அது மாபாடியம் எனவும், சித்தாந்தமாபாடியம் எனவும், சிவஞானமாபாடியம் எனவும் அறிஞரால் வழங்கப் பெறுகிறது. வடமொழிப் பிரம்ம சூத் திரங்களுக்கு வடமொழியிலேயே எத்தனையோ விரிவுரைகள் வகுத்திருந்தாலும், அவைகளையெல்லாம்விட மிகச் சிறந்து ஒப்புயர்வற்றதாக விளங்குகின்றது இச்செந்தமிழ் நூல். அதுமுதல் சுவாமிகளும் மாபாடியம் சிவஞான சுவாமிகள் எனச் சிறப்புப் பெயராலே அழைக்கப் பெறுவாராயினர்.

சுவாமிகள் தமது சிவஞான போத விரிவுரையைப் பூசித்து எடுத்துக்கொண்டு, காஞ்சியை விட்டுப் புறப்பட்டு, திருவெண்ணெய் நல்லூர், சிதம்பரம் முதலிய பதிகளையெல் லாம் வணங்கி அருள் பெற்று வந்து, திருவாவடுதுறை எய் தினர். இரண்டாம் ஞானசிரியராகிய திருச்சிற்றம்பல தேசி கரும் அதுசமயம் சுசீந்திரத்திலிருந்து துறைசைக்குப் போந் திருந்தனர். சுவாமிகள் ஞானசிரியரைப் பணிந்து, தமது பேரு ரைச் சுவடியை அவர் திருவடிகளிலே வைத்து, வழிபட்டு நின்றார். ஆசிரிய சுவாமிகள் திருவுள மகிழ்ந்து, அவருக்குத் திருவருட்பேறு நல்கி, பின் அவரைத் தமது அருகிருக்கப் பணித்து, நல்வரவு வினவி, களிப்பு மீதூர வீற்றிருந்தருளி னர். சிவஞான சுவாமிகள் பின்பு வடக்கு மடத்திற் சென்று, திருச்சிற்றம்பலதேசிகரைப் பணிந்து, அடியார்களோடும் அள வளாவி, அன்பும் இன்பும் உற்று இருந்தனர்.

ஒரு நல்ல நாளையிலே ஞானசிரியருடைய திருமுன்பு அவருடைய ஆணைப்படி ஒரு பேரவை கூடிற்று. அத்திருச் சபையிலே திருச்சிற்றம்பல தேசிகரும் அடியார்களும் புலவர் களும் வந்து ஞானசிரியரை வணங்கி இருந்தார்கள். சிவ ஞான சுவாமிகள் ஆசிரியரைப் பணிந்து, தமது சிவஞான போத மாபாடியத்தைப் படித்துப் பொருள் விரித்துரைத்த னர். சில நாட்களில் அப்பேருரை வாசித்து முற்றுப்பெற்றது. ஞானசிரியர் திருவுள மகிழ்ந்து, "இம்மாபாடியந்தான் நம் திருச்சிற்றம்பலவர்க்கே முற்றிலும் உரிமை யாகற்பாலது," என்று வினய மொழியாகத் திருவாய் மலர்ந்தருள, அதனைக் கேட்டு யாவரும் பெருமகிழ்ச்சி எய்தினர். சில நாட்களின் பின் சிவஞான சுவாமிகள் ஞானசிரியர்களைக் கும்பிட்டு, விடை பெற்று, அரிதின் நீங்கிக் காஞ்சியை அடைந்து, தம் மாணக்கர்களுக்கு அறிவு நூல்களைக் கற்பித்து வருவா ராயி னர்.

தென்னாட்டு வழிபாட்டுக்காகச் சென்றிருந்த பின் வேலப்ப தேசிகர் திருப்பெருந்துறையில் தங்கியிருந்தபோது இறைவருடைய இணையடி மலர்களை எய்திப் பேரின்பமுற்ற னர். திருச்சிற்றம்பல தேசிகர் அவருக்குக் குரு பூசை வழி பாடுகளைச் செம்மையுறச் செய்து, திருவாவடுதுறையை யடைந்தனர். அவர் அங்கே தம் அடியார்களுட் சிறந்த அம்பலவாணத் தம்பிரானைத் தமது இரண்டாம் ஆசிரியரா கப் பட்டம் சூட்டி யருளினர். அப்பெருவிழாவினைக் காணச் சிவஞான சுவாமிகளும் வந்திருந்தனர். அவர் தம்மாணவருட் சிறந்த சிதம்பரநாதர் என்பவருக்கு ஞானசிரியர்பால் மூவகைத் தீக்கையும் செய்வித்துத் துறவு பூணச் செய்தனர். பின்பு சுவாமிகள் ஆசிரியர்களிடம் விடை பெற்றுக் காஞ்சியை

அடைந்து, சிதம்பரநாதத் தம்பிரான் முதலிய மாணக்கர் களுக்கு அருள் மொழி தந்திருந்தனர்.

மார்கழித்திருவாதிரை விழா வந்தது. அப்போது வழக் கம்போல் தேவார முதலிய அருட்பாக்கள் ஐந்தும் திருக்காப் பிட்டு, தமிழ்மறையாகிய திருவாசகம் என்னும் எட்டாந் திரு முறையிலுள்ள திருவெம்பாவை மட்டுமே சிவபூசைக் காலங் களிலெல்லாம் ஓதப்பெறுவதாயிற்று. அதனல், நாடோறும் முறையாகத் திருத்தொண்டர்களுடைய பெயர்களை ஓதி உய்ய வேண்டுவோர் சிலர் கருத்துத் தடையுறுவது கண்டு, சுவாமிகள் திருத்தொண்டர் திருநாமக்கோவை என்னும் பெயர் தந்து ஒரு திருப்பாடல் இயற்றியருளினர்.

ஞானசிரியராகிய திருச்சிற்றம்பல தேசிகர் தென்னடு சென்று, சுசீந்திரத்திலே தம் துணை ஆசிரியராகிய அம்பல வாண தேசிகரை இருத்தி, மீண்டு துறைசை யடைந்தனர். திருத்தணிகையைச் சேர்ந்தவராகிய கச்சியப்பர் என்பாரும், காட்டு மன்னர் கோவிலைச் சேர்ந்த சுப்பிரமணியர் என்பவரும் துறைசையை யடைந்து, தீக்கைகள் பெற்றுக் கல்லாடை யணிந்து, ஒழுக்கத்திற் சிறந்தாராய், அம்பலவாண தேசிக ருடனே தென்னடு சேர்ந்திருந்தனர். ஞானசிரியரிடத்திலே கசடறக் கற்று முற்றிய அறிஞராக இருந்த கச்சியப்பத் தம்பிரானும் சுப்பிரமணியத் தம்பிரானும் மாதவச் சிவஞான சுவாமிகளுடைய பெருமையைக் கேள்வியுற்று, அவரிடம் கல்வி பயில ஆவலுடையவர்களாய், ஆசிரியரிடத்தே விடை பெற்றுத் திருவாவடுதுறையை அடைந்து, முதன்மையா சிரியரிடத்திலும் விடைபெற்றுப் போய்க் காஞ்சியில் சுவாமி களைக் கண்ணாரக்கண்டு, அவருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினர்கள். சுவாமிகள் அவர்களை வாழ்த்தி யருளி,

அவர்களுக்குப் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்தையும் சைவ சித்தாந்த நுண்பொருள்களையும் கற்பித்து, தாம் இயற்றிய சிவஞானபோத மாபாடியத்தையும் பாடஞ் சொல்லியருளினர்.

சுவாமிகள் அந்நாட்டின்கண் உள்ள பல பதிகளையும் வணங்க எண்ணிக் காஞ்சியின் நீங்கித் தம் மாணுக்கர்கள் சூழ்ந்து வரச் சென்றனர். அவர் பல இடங்களுக்கும் சென்று, திருமுல்லைவாயிலிலே சில நாள் தங்கியிருந்தனர். அங்கே அவர் மாசிலாமணிப் பெருமானைக் கும்பிட்டு, அவர் மீது வட திருமுல்லைவாயில் அந்தாதி என்னும் நூலை இயற்றினர். பின்பு அவர் குளத்தூருக்குச் சென்றார். அங்கே சுவாமிகள் சோமேசர்மீது குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் ஒரு புகழ் மாலையும், சோமேசரை முன்னிலைப்படுத்தித் திருவள்ளுவநாயனருடைய திருக்குறள் அதிகாரங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குறளை எடுத்துக்கொண்டு ஈற்றடியாக வைத்து, முதலிரண்டடிகளில் அக்குறள் விளங்க ஒரு வரலாறு குறித்தமைத்து சோமேசர் முதுமொழி வெண்பா என்னும் நூலும் செய்தருளினர். மேலும், அக்குளத்தூர் அமுதாம்பிகை யம்மையார்மேல் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் என்ற ஒப்புயர்வற்ற நூலையும் அவர் பாடினர். இளங்காடு என்ற ஊருக்குச் சென்று, அகத்திய நாதரைப் பணிந்து, சுவாமிகள் இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி என்ற அருங்கவி நூலை இயற்றினர். அவர் திருப்பேரூர் முதலிய பதிகளைக் கும்பிட்டுத் திரும்பிக் காஞ்சிமாநகரை யடைந்தார். அங்கே சுவாமிகள் ஏகம்பரைப் பணிந்து, கம்பரந்தாதி என்ற நூலையும் ஆனந்தக் களிப்பையும் பாடியருளினர். அன்றியும், அவர் ஆனந்த ருத்திரேசர்மீது கச்சி ஆனந்த ருத்திரேசர் பதி

கம் என்ற பாமாலையும் இயற்றினர். மேலும், அவர் காஞ்சிப் புராணத்தில் முதற் பகுதியையும் பாடி முடித்தனர்.

திருத்தொட்டிக்கலை மாநகரிலே அக்காலத்தில் செல்வ வான்களில் முதல்வராய் விளங்கிய வீரப்ப முதலியாருடைய திருமகனர் கேசவ முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவஞான சுவாமிகளுடைய பெருமைகளைக் கேள்வி யுற்று, காஞ்சிக்கு வந்து பணிந்து, தமது பேரூருக்கு வந் தருளுமாறு வேண்டிக்கொண்டார். சுவாமிகள் தம் மாணக் கருடனே அவ்வூருக்குப் போய்ச் சில நாள் தங்கியிருந்தனர். அக்காலத்து அவர் முதலியாருடைய வேண்டுகோளின் வண் ணம் அங்கே கோவில்கொண்டு எழுந்தருளியிருக்கும் சிதம்ப ரேசுரர்மீது கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலை இயற்றினர் ; மேலும், அவ்வூர்ப் பிள்ளையார்மேல் சேங்கழு நீர்ப் பிள்ளையார் பிள்ளைத்தமிழ் என்னும் கவி மாலையும் அவர் புனைந்தருளினர். அப்பிள்ளைத் தமிழ் இயற்றிய காலம் சாலி வாகன சகாப்தம் 1694 என்பது அந்நூலின் பாயிரச் செய் யுளால் இனிது விளங்குகின்றது.

இங்ஙனம் உலகத்தார் உய்யுமாறு பலவுரைகளையும், பல மறுப்புகளையும் செய்து, பல நன்மாணக்கர்களுக்கு இயற் றமிழ் நூலும் வீட்டு நெறி நூலும் கற்பித்து, வடமொழி யினும் தென்மொழியே சிறந்ததென்பதை நிலை நாட்டி வீற் றிருந்தருளிய தமிழ் மாபாடியம் வகுத்த மாதவச் சிவஞான சுவாமிகளுக்குத் தாம் இறைவருடைய சீரடிக்கமலம் சேரும் காலம் அணித்தாதல் திருவுளத்தில் தோன்றிற்று. அதனால், சுவாமிகள் தம் மாணக்கருடனே கலைசையை விட்டுப் புறப்பட் டுத் திருவாவடுதுறையை அடைந்தார். அங்கே அவர் திருக் கோவிலுக்குப்போய்க்கறைமிடற் றண்ணலாருடைய கழலிணை

களைக்கண்டு கும்பிட்டு, அருள் பெற்று, தமது திருமடத்திற் கெழுந்தருளி, சிவப்பிரகாசப் பிள்ளையாரையும் திருமாளிகைத் தேவரையும் ஆதீன முதலாசிரியராகிய நமச்சிவாய தேசிகரையும் வழிபட்டு, ஒடுக்கத்திற் சென்று, ஞானாசிரியராகிய திருச்சிற்றம்பல தேசிகரையும் கும்பிட்டு, அடியார்களோடு வாழ்ந்திருந்தனர். அப்போது மாதவச் சிவஞானசுவாமிகள் சித்திரை மாதம் எட்டாம் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று ஆயிலிய நாளிலே சிவபெருமானுருடைய திருவடி நீழலில் இரண்டறக் கலந்தருளினர். அது மெய்கண்டான் யாண்டு 562க்குச் சரியான கி. பி. 1785 ஆகும்.

சுவாமிகளிடத்தில் கல்வி பயின்ற மாணாக்கரிற் சிறந்தவர்கள் கவிச்சக்கரவர்த்தியாகிய திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர், மதுரகவி-தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், காஞ்சிச் சிதம்பர முனிவர், இலக்கணம் சிதம்பரநாத முனிவர், காஞ்சி முத்துக்குமாரசாமி தேசிகர், காஞ்சிச் சரவணப்பத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரப்பிள்ளை, திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், கரவாந்தண்டலம் அடைக்கலம்காத்த முதலியார், கடம்பார் கோவில் கலியாணசுந்தர உபாத்தியாயர் ஆகிய இவர்கள். சுவாமிகளுக்கு இவ்வுலகம் என்றும் கடப்பாடுடைய தென்பதற்கு ஐயப்பாடும் உண்டோ? சுவாமிகள் உலகத்தாருக்குச் செய்த பேருதவிபோல் வேறு யார் செய்தார்? இதனாலன்றோ அவர் தாம் எந்த இடத்தில் பிறந்தனரோ, எந்த வாசலில் தவழ்ந்துவிளையாடித் தம் மழலைச் சொற்களால் இருமுதுகுரவரையும் மகிழ்வித்தாரோ, அந்த வீட்டின் தலைவாயிலிலேயே தெய்வமாகத் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருந்து தம்மை வந்து மெய்யன்போடு வணங்கும் அடியார்களுக்குப் பேரருளின்பம் நல்கும் தெய்வத் தன்மையைப் பெற்றார்?

சித்திரை மாதந்தோறும் வரும் ஆயிலிய நாளையில் விக்கிரம சிங்க புரத்திலேயே சென்னை மாகாணத்தில் பல விடங்களிலுமுள்ள அறிஞர் பலர் வந்துகூடி, சுவாமிகளுடைய குருபூசையை மிகச் சிறப்பாகச் செய்து மகிழ்கின்றனர். கோவில் முன்பாக ஒரு பெரிய பந்தல் அழகாக அமைக்கப்பெற்றுப் பல இன்னியங்களும் முழங்கும். தேவார ஒலி விண்ணிலும் பரந்து இன்பம் பயக்கும். சுவாமிகளுடைய திருவுருவத்தை அழகுபெறப் பலவாறு அணி செய்து, பூசனை நிகழ்ந்தபின் பூசித்த தம்பிரான் சுவாமிகள் அடியவரனைவருக்கும் திருநீறு நல்குவார். அதன்பின் மகேசுர பூசை நடைபெறும். அதில் ஆயிரவருக்குக் குறையாத அடியார்கள் அறுசுவை உணவு உண்பார்கள். மாலையில் சுவாமிகளைப்பற்றிப் பல புலவர்கள் பெருஞ்சொல் நிகழ்த்துவார்கள். இரவில் சுவாமிகளுடைய திருவருவத்தையும் மாபாடியத்தையும் பல்லக்கில் வைத்து வீடுகள்தோறும் அன்பர்கள் பூசிக்க நகர் வலம் நிகழும். நிகழும் மெய்கண்டான் யாண்டு 706 க்குச் சரியான சுக்கில ஆண்டு (கி பி. 1929) சித்திரைத் திங்களில் சுவாமிகளுடைய நூற்றுநாற்பத்தைந்தாவது குருபூசை விழா, சிறப்பாக நடைபெற்றது.

சிவஞானசித்திக்குப் பதவுரை யியற்றியருளிய மேலகரம் பண்டாரசந்நிதிகள் எனப் புகழப்பெறும் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சிவஞான சுவாமிகளை "ஆதீனகுலதெய்வம்" என்ப் போற்றி வழிபட்டதாக நேரில் கண்ட பெரியோர் கூறுகின்றனர். திருவாவடுதுறை யாதீனத்திற்குக் கல்வி வகையின் ஏற்பட்டுள்ள பெருமை யத்தனையும் சிவஞான சுவாமிகளுடைய பெருமையே! இப்பொழுது பண்டார சந்நிதியாக எழுந்தருளியிருக்கும் வயித்தியலிங்க தேசிக சுவாமிகள் சிவ

ஞான சுவாமிகளிடத்திலே மிகவும் அன்புடையவர்களாய்த் தென்னுட்டில் காறுபாறு சுவாமிகளாகஇருந்தபோது சுவாமி களுடைய திருவுருவத்துக்குச் செய்யும் அணி முழுதும் தங் கள் கைப்படச் செய்துகண்டு தொழுதிருந்தார்கள். இப்போ தும் அவர்கள் குருபூசைவிழாச் செலவு முழுவதும் மடத்தி லிருந்தே நடைபெறுமாறு ஏற்பாடுகள் செய்து, கழிபேரு வகை யடைகின்றுர்கள். ஆதீனகுல தெய்வத்தின் திருவருள் உலகெங்கணும் பரவிப் பெருவாழ்வை நிலைபெறச்செய்வதாக.

## 12. கல்வி யின்பம்

கல்வியாவது ஈண்டு வித்தை யென்னும் பொருள் தந்து நிற்ப தாம். ஒரு பொருளை யறியுங்கால் பிண்டமாக அறியும் நிருவிகற்ப வுணர்ச்சி போலாது அப்பொருளைப்பற்றிய விவ ரணங்களைப் பாகுபாடு செய்து அறியும் சவிகற்ப வுணர்ச்சி யைத் தருதற்குக் கருவியாவது இக்கல்வியேயாம் இக்கல்வி யில்லாதார் சவிகற்ப வுணர்ச்சியைக் கூடப்பெறுர். விலங் கினங்களோடொப்ப அறியும் பஞ்சேந்திரிய வுணர்ச்சியின் வேருய், மனிதர்க்கே யுரியதாய், மனத்தின்கண் நிகழும் பெற் றித்தாய், நல்லதன் நலனும் தீயதன் தீமையும் பகுத்தறிந்து கோடற்குக் கருவியாயுறுவதும் இக்கல்வியேயாம்.

கல்விச் சிறப்பு:—கல்வியே மனத்தைத் தீய வழியிற் புக விடாது நல்வழியிற் செலுத்தி மாட்சி பெறுவிப்பது; மனிதரிடத்துள்ள மிருகத் தன்மையை மாற்றி, அவர்க்கு மனிதத் தன்மையைக் கொடுக்க வல்லது;

"மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்று ரனைத்திலர் பாடு."

என்பதால், உடலோடொழியும் குலச் சிறப்பினும் மிக்க சிறப்புடையது.

" எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடிக் கற்றேரை மேல்வரு கேன்பர்."

என்பதனுலுங் கல்விச் சிறப்பு விளங்கும்.

அது கள்வராற் கவரப்படாதது; தாயத்தாராற் பாகிக் கப்படாதது; அரசராற் கொள்ளப்படாதது; வெள்ள முத லியவற்ருல் அழிக்கப்படாதது; பிறர்க்குக் கொடுக்கக் கொடுக்கக் குறைவெய்தாது நிறைவுறுவது; அறிவை வளர்ப் பது; இவைபோல்வனவாகிய மற்றும் பலவகைச் சிறப்புகளை யுடையது.

" வைப்புழிக் கோட்படா; வாய்த்தீயிற் கேடில்லை;
மிக்க சிறப்பி னரசர் செறின்வௌவார்."

" கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றைய வை."

என்பன வாதியவற்ருல் அதன் பெருமை நன்கு புலப்படும். அன்றியும்,

" ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து."

என்றவாறு, ஒரு பிறப்பின்கண் பயின்ற கல்வியானது அப் பிறவி யொழியினும் ஒழியாது, உயிருடன் எழுமையுந் தொடர்ந்து சென்றுதவுந் தன்மையது. 'நற்பொருள் செய் வார்க்கிடம்; பொருள்செய்வார்க்கு மஃதிடம்,' என நற்பொரு ளென்று திருத்தக்க தேவர் சிறப்பித்துக் கூறலுங் கருதற்பாற் ரும். இதுபற்றி யன்றே,

" அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும் ;
புறங்கடை நல்லிசையு நாட்டும்;—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை."

என்றார் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ? இதைவிட வேறு கூறு தல் மிகையாமென இம்மட்டில் நிறுத்தி மேற் செல்வாம்

கற்றார் பெருமை:—உலகத்தார் அரசனைத் தெய்வாக மதிப்பர். அவ்வரசனினும் பல மடங்கு சிறப்பெய்துவார் கற்றார். அரசனுக்கு அவன் நாட்டில்மட்டுமே சிறப்பாம். கற்றார்க்கோ, சென்ற விடங்களெல்லாம் சிறப்பாம்; எந்த நாடும் நாடாம்; எந்த ஊரும் ஊராம்; எல்லாரும் உறவினரே யாவர். கற்றோர் எல்லாராலும் புகழ்ந்து போற்றப்படுவர்; கடவுள் கருணைக்கு முரியராவர். இவற்றைப் பண்டைப் புலவர் சரித வாயிலானும் நன்கு காணலாம்: சோழமன்ன னால் சிறிது புறக்கணிக்கப்பட்டு, சீர் நாட்டை நீங்கி, மலை நாட் டிலெய்திய கம்பநாட்டாழ்வார் அம்மலை நாட்டு மன்னர் பெரு மானால் மிகப் பாராட்டி மதிக்கப்பட்டு மீண்ட சரிதமொன்றே யிதற்குப் போதிய சான்றாகும்.

"விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.
"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் ; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்பவற்றானும் கற்றார் பெருமை யினிது விளங்கும். அன்றியும்,

"கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்,
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்:—மலரவன்செய்

வெற்றுடம்பு மாய்வதுபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.''

என்பதனானே கற்றார் பெருமை யினைத்தென வொருவாறு தெரிதல் சாலு மென்க.

கற்கத் தக்கன:—

“ அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.''

“ எழுத்தறியத் தீரு மிழிதகைமை; தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்;-மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து,
கட்டறுத்து வீடு பெறும்.''

“ கல்வி கரையில; கற்பவர் நாள்சில;
மெல்ல நினைக்கிற் பிணிபல;—மெல்லவே
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகில் தெரிந்து.''

“ பொருவி லாவிதி காச புராணங்கள்
தெருளு மாந்தர் சிறப்புள ராகுவர்.
தரும நூலும் புராணத்தின் தன்மையும்
கருதி யோர்ந்தவ ரேகலை வல்லரே.''

என்பவாகலின், கற்கப் புகுபவர் அறம் பொரு ளின்பம் வீடென்னும் புருஷார்த்தங்களைப் போதிப்பனவாகிய நூல்களையே கற்கக் கடவர். அன்றியும், அரச நீதி முதலியவற்றை யுணர்த்தும் நூல்களையும் தொழின் முறைகளைக் கற்பிக்கு

நூல்களையும் நல்லறிவைப் பெருக்கும் ஏனைய நூல்களையும் கற்கவேண்டும். இங்ஙன மன்றி, அற்ப விஷயங்களை யுணர்த்தும் நூல்களைக் கற்றல் வீண் காலப் போக்காவதன்றிப் பிறிதில்லை. இக்காலத்தில் ஆங்கிலக் கல்வி பல்கத் தொடங்கவே, பல இடங்களில் நம் முன்னோர் கொள்கை நழுவ விடப்படுகின்றது. ஆங்கிலக் கல்வி மணம் வீசத் தலைப்பட்ட கலாசாலையில் நம் சிறுவர்கள் இளமையில் கற்கும் பாடங்களைப் பார்த்தால், பெரும்பாலும் நாய், பூனை, கழுதை, சிங்கம், ஓநாய் என்பவற்றைப் பற்றியவைகளாக இருக்கின்றன. நம் முன்னோர் ஏற்படுத்திய பாடங்களைப் பார்ப்போம்: அவை **ஆத்திசூடி, கோன்றை வேய்ந்தான், வெற்றி வேற்கை, நல்வழி, நன்னெறி** முதலியனவாகும். இச்சிறு நூல்களி லமைந்துள்ள பொருளமைப்பைப் பார்த்தால் எவரே வியவார்? 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்,' 'சிறுமையிற் கல்வி சிலையி லெழுத்து,' என்றவண்ணம், இந்நீதி நூல்களால் இளமைப் பருவத்தில் கற்றறிந்த நீதிகள் நம்முள்ளத்தே யூன்றிப் பதிவன வாகும். அங்ஙனம் பதியவே, நம்மக்கள் எத்தனை வயது சென்ற பின்னும், இளமையிற் படித்த சிறு நூல்களின் சாரம் அவருள்ளத்தைக் கொள்ளை கொண்டு, பன்னலம் புரிவன வாகும். இச்சிறு நீதி நூல்களின் பொருளமைப்பே வேறு பெரு நூல்களில் பலபட விரிந்து தோன்றுவதாம். ஆதலால், கற்பிக்கும் ஆசிரியர்கள் மாணுக்கர் பருவத்துக்கு ஏற்றவாறு நற்பொருள் போதிக்கும் சிறந்த நூல்களைப் படிப்படியாகக் கற்பிக்கவேண்டும். தமக்கும் பிறர்க்கும் பயன் செய்யாது வினோத மாத்திரையாகச் சிறுபோது மகிழ்வூட்டும் பெற்றி வாய்ந்துள்ள வேடிக்கைப் பாக்களையும் தெம்பாங்கு முதலியவற்றையும் போலிச் சரித்திர

நூல்களையும் போதித்தல் கூடாது. கற்பிப்பாரும் கற்பாரும் நன்கு ஊகித்துணரற்பாலது இது. இவ்விருவருள்ளும் முத லில் இப்பொறுப்புக் கற்பிக்கும் ஆசிரியர்க்கே யுரியதாம். இத னுற்றான் நல்லாசிரியரை யடுத்துக் கற்கவேண்டும் என்று கருதி ஆசிரிய ரிலக்கணத்தை நன்கு விரித்தோதி வைத்துள் ளார் நம் முதியோர். நம்மவர் பலர் இதனைச் சிந்திப்பதில்லை. முன்னர்க் கவனியாது மக்கள் கல்வியின் பொருட்டுச் சிறிது பொருட்செலவிடுதற்கஞ்சிக் கிறித்தவர் கலாசாலைகளில் தம் மக்களை விட்டுக் கற்கச் செய்து, பின்னர் அம்மக்களின் மன நிலை வேறுபட்டு ஒழுக்கம் பிறழ்ந்து போதலைக் கண்டு, கண் ணீர் விட்டுக் கதறி யழுகின்றவர் எத்தனை பேருள்ளார்? அந்தோ! பரிதாபம்!!

**கற்கும் முறை:**—கற்கும்போது துன்பமாகத் தோன்றி னும், 'தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்,' என்ற வாறு, பிற்பயப்பதான இன்பத்தைக் கருதி, வருத்தமுற்று லும் சலியாது, ஊக்கத்துடன் கற்கவேண்டும். காலந் தவ றாது கலாசாலைக்குச் சென்று, ஆசிரியரை மகிழ்ச்சியுடன் வழிபாடுசெய்து, ஆசிரியர் குறிப்பறிந்து, அவராணைக்கடங்கி நின்று, பசித்துண்பவனைப்போலக் கற்பதில் விருப்ப மிகக் கொண்டு, கற்கவேண்டும். கற்ற பாடங்களைத் தனியே யிருந்து நன்றாகச் சிந்திக்கவேண்டும். தம்மோடொத்த மாணவர்களு டன் அளவளாவி யறியவேண்டும். தாம் கற்ற பாடங்களை யெல்லாம் தம்மிற் றாழ்ந்த நிலையிலுள்ள மாணாக்கர்கட்குப் போதிக்க வேண்டும். இவை யெல்லாம் தாம் கற்ற கல்வியை நிலை நாட்டற்குரியன. கற்குங்கால் மனத்தை வேறு வகை யிற் செலுத்தல் கூடாது. இதைப்பற்றி யொரு சிறு கதை கூறுவதுண்டு:

காரிகை நூல் கற்கப் புக்க மாணுக்க னெருவன் மிக்க கவனத்துடன் கற்று வருங்கால், ஒரு நாள் உண்ணும் போது அன்னத்தில் நெய் விடுதற்குப் பதிலாக மறதியால் வேப்ப நெய்யை அவன்றாய் வார்த்தனள். அவன் படிப் பிலேயே கவனத்தைச் செலுத்தியிருந்தானுதலின், கசப்பறி யாது, வழக்கப்படி யுண்டு சென்முன். அவன்றாய் தான் மற தியால் வேப்ப நெய்யூற்றியதையும், தன் மகன் படிப்பின் கவ னத்தால் கசப்பறியா துண்டதையு மறிந்து, அவ்வாறே தின மும் வேப்ப நெய்யை யூற்றி வந்தனள். அவனும் உண்டு வந் தான். காரிகைப் பாடம் முடிந்தது. மனக் கவலை மாறியது. பின்பு வழக்கப்படி யுண்ணும்போது அவன், 'அம்மா, நெய் கசக்கிறதே!' என்முன். அவள், 'அப்பா, இன்றுதான் உனக் குப் படிப்பும் கசந்தது போலும்!' என்முள். பின்னர் நடந்த செய்தியை யறிந்து, பாடம் முடிந்ததை யுணர்ந்து, இருவரு மகிழ்ந்தனர்.

இங்ஙனமாக ஒரு வழிப்பட்ட மனத்துடன் கற்முல் மட்டுமே கல்வி நிரம்புவதாகும். பழைய பாடங்களைப் போற்முது, புதிய பாடங்களையே ஆசிரியரிடம் கேட்டு வரு தல், பயனற்ற செயலேயாம். அது கையிலுள்ள பொருளைப் பாதுகாவாது, கொட்டிவிட்டு, மீட்டும் வருந்திப் பொருள் தேடுவார் செயலையே யொக்கும். இக்கருத்தை,

“ வருந்தித்தாம் கற்றன வோம்பாது, மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்,—கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சோரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.”

என்பதா லறியலாம்.

சிறிதளவாகக் கற்பினும், கற்றமட்டில் சந்தேக மின்றி, இதற்கிதுவே பொருளா மென்று நிச்சயித்துக் கொண்டே மேற் கற்கவேண்டும். முன்னர்க் கற்ற பாடங்களின் பொருளை நன்கு தெளிந்து கொள்ளாமல், ஐயப்பாட்டுடன்விட்டு, மேலு மேலுங் கற்றுப்போதல் கூடாது. உண்மைப் பொருளை நன்கு தெரிந்துகொண்ட பின்னரே மேலே கற்கவேண்டும்.

"கற்க கசடறக் கற்பவை; கற்றபின்
நிற்க வதற்குத் தக."

என்ற முறை கவனிக்கற் பாலது.

கற்றவர் கடமை:—'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்ற வாறு, கற்றறிந்தவர் தாம் கற்ற நூல்களிற் கூறிய வொழுக் கங்களின் வழுவாது நடக்கவேண்டும். கல்வியின் பயன் ஒழுக்கமே யாகும். கற்றும் அதன்படி யொழுகாதவர், கல் லாதவரினும் கடையரே யாவர். ஆதலின், கற்றவர் ஒழுக்கந் தவறாது நடக்கக் கட்டுப் பட்டவராவர் என்பதை நன்றாக அறிந்து நடக்கக் கடவர். மெய்வருத்தம் பாராது, பசி நோக் காது, கண் துஞ்சாது, எவ்வெவர் தீமையும் மேற் கொள் ளாது, அருமையும் அவமதிப்பும் கருதாது, அரிதின் முயன்று கற்ற பின் கற்றவாறொழுகலை விடுத்து, வீண் வாத மிட்டுக் காலத்தை அவமே போக்கல் மதியீனமாம்.

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குறைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்."

எனவும்,

" கற்றதுங் கேட்டதுந்தா னேதுக் காக ?
கடபடமென் றுருட்டுதற்கோ ? கல்லா லெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் குணத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ? "

எனவும்,

“ கற்றதனு லாய பயனேன்கொல் வாலறிவன்
நற்ரு டொழாஅ ரெனின்?”

எனவும் வரும் மேலோர் திருவாக்குகளை யுய்த்துணர்தல் வேண்டும்.

கல்லாமையின் இழிவு:—கல்லாதவர் முகம் சுடுகாட்டை யொக்கு மெனவும், கல்லாதவர் உருவம் மரம்போலு மென வும், கல்லாதவர் கண்கள் முகத்திலிரண்டு புண்களை போலு மெனவும், கற்ருரவையிற் கல்லாதார் போயிருத்தல் நாயிருப் பது போலு மெனவும், அவர் அங்கே யேதேனும் பேசுதல் நாய் குரைப்பது போலுமெனவும், கல்லாதாருடம்பு அவர்க் குப் பாழேயாகும் எனவும் அறிஞர் கூறுவர். இதனை,

“ கற்றி லாய்கலை கற்றுண ரார்முகம்
உற்று நோக்கின் மயானத்தை யொக்குமால்
பேற்று ளார்பெறும் பேறுதங் காதலர்
சோற்ற கல்வியிற் றாயரேன் ருேதலே.”

“ கல்லாது நீண்ட வொருவன் உலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே; இராஅ
துரைப்பினும் நாய்குரைத் தற்று.”

“ கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்;—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்ருன் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.”

என்பவற்ரு லறிக. அன்றியும்,

"எல்லா விடத்து முளனேங்க டம்மிறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே."

"எல்லா வுயிர்க்கு மிறைவனே யாயினும்,
கல்லாதார் நெஞ்சத்துக் காணவோண் ணுதே."

"கல்லா மனிதர் கயவ ருலகினிற்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே."

"கல்லாத மூடரைக் காணவு மாகாது;
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று;
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்;
கல்லாத மூடர் கருத்தறி யாரே."

"கல்லார் நெஞ்சில் நில்லா னீசன்.
சொல்லா தாரோ டல்லோம் யாமே."

என்பவற்ருல் இறைவனை யறிந்து வழிபட்டுய்யுந் தன்மை கல்லாதவர்கட்கில்லை யென்பதும் பெற்ரும்.

கற்றவர்பா லிறைவனருள் :—பஞ்சேந்திரியங்களா லறியப்படும் பொருள்களைப் பற்றிய சவிகற்ப வுணர்ச்சிக்குங் கூடக் கல்வி வேண்டப் படுவதாயின், எங்கும் நிறைந்தும் யாவர்க்குந் தோன்ருது எள்ளினுள் எண்ணெய் போன்று நிற்கும் இறைவனைப்பற்றியறிய வேண்டின், கலை ஞானம் இன்றியமையாதென்பது கூருமலே யமையும். மாய வலையிற் சிக்கியுழன்று எண்ணிலாப் பிறவிகளை யெடுத்தெடுத் துழலும் ஆன்மா, இறைவனை யறிந்து பிறவிப் பெருங்கட னீந்தி அழியாப் பேறு பெற்றுய்தற்கு முக்கியத் துணையா யுதவுவது வித்தையே யாம். "உவமையிலாக் கலை ஞானம்" எனச் சிறப்பித்தோதும் ஸ்ரீ சேக்கிழார் பெருமான் திருவாக்கும் ஈண்டுச் சிந்திக்கற்பாலதாம்! கற்றவர் பக்கல் இறைவனருட் பெருக்கம்

தெற்றென விளங்குதலைப் பற்றி நம் பெரியார் கூறியுள்ள அருமைத் திருவாக்குகளிற் சிலவற்றை யீண்டுத் தருதும்:

" கற்றல் கேட்டலுடை யார்பெரி யார்கழல்
கையாற் றொழுதேத்தப்
பெற்ற சூழ்ந்தபிர மாபுர மேவிய
பெம்மா னிவனன்றே."

" பின்னுவார் சடையான் றன்னைப்
பிதற்றிலாப் பேதை மாக்கள்
துன்னுவார் நரகந் தன்னுள்.
தோல்வினை தீர வேண்டின்
மன்னுவான் மறைக ளோதி
மனத்தினுள் விளக்கோன் றேத்தி
உன்னுவா ருள்ளத் துள்ளா
னொற்றியூ ருடைய கோவே."

" கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமாக் கடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரவென் கண்குளிர்ந் தனவே."

கல்வியாற் பெறும் இன்பம்:—உலகிற் றோன்றிய ஆன்மாக்களெல்லாம் இன்பத்தை விரும்பும். துக்க நிவிர்த்தியையும் இன்பப் பேற்றையும் விரும்பாத வுயிர்கள் கிடையா. ஆகார நித்திரை யாதியவற்றால் வரும் இன்பம், எல்லா வுயிர்

கட்கு முண்டு. அவ்வின்பம் நிலையற்றதாம்; ஆதலின், சிற்றின்பமெனப்படும். இம்மை மறுமை யிரண்டிடத்தும் இன்பமே தந்து, ஆன்றோராற் புகழப்படும் மன்றின்பமொன்றுண்டு. அதுதான் கல்வி யின்பம் என்னப்படுவது. அது தொடங்குங்கால் துன்பமாகத் தோன்றி, பின்னர்ப் பெரிதும் இன்பந் தந்து நிற்கும். இதனை,

"தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கோன் றறிவகற்றுங் கல்வி."

என்பதனு லறிக.

சிற்றின்பம் ஞானத்தைக் கெடுக்கும்; கல்வி யின்பம் ஞானத்தைக் கொடுக்கும். சிற்றின்பங் கவலையை ஆக்கும்; கல்வி யின்பம் கவலையை நீக்கும். சிற்றின்பம் அறம் பொருள் வீடு பேற்றுக்குத் தடையாம்; கல்வி யின்பம் அவைகளை யீட்டற்குத் துணையாம். சிற்றின்பத்தை யடைந்தவர், தாமடைந்தவாறே பிறரடையச் சகியார்; கல்வி யின்பத்தை யடைந்தவர், தாமடைந்தவாறே யுலகமெல்லா மெய்த விரும்புவர். சிற்றின்பாநுபவ நலத்திற் சிறந்ததான தேவருலக வாழ்க்கையைக் கல்வி யின்ப மடைந்தவர் கொள்ளக்கருதார். இவைகளை,

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்."
"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்."
"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி."

என்பனவற்றாற் காண்டலமையும்.

"ஆயுந் தோறுந்தோறு மின்பந் தருங்கல்வி."

"வறுமையால் மடமை தன்னால்
வருந்திநெஞ் சழியுங் காலை
யுறுதிசெய் துணையாங் கற்ற
வுணர்வினை வளர்க்கு மென்றும்
இறுதியில் லாத வின்பம்
ஈட்டுமோ தலினாற் கற்று
மறுவறு மொழுக்க முள்ளார்
வாய்மொழி போற்றல் வேண்டும்."

என்பவற்றால் கல்வியாற் பெறும் இன்பப் பேற்றைப்பற்றி நன்கு தெளிதல் சாலும்.

இங்ஙனம் இம்மையிற் பெறும் இன்பத்தோ டமையாது மறுமைக்கண்ணும் இன்பமுறச் செய்ய வல்லது கல்வியே யாமென்பதனை,

"கற்பக் கழிமட மஃகும்; மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணரும்; கோளுணர்ந்தால்,
தத்துவ மாய நெறிபடரும்; அந்நெறி
இப்பா லுலகத் திசைநிறீஇ அப்பால்
உயர்ந்த வுலகம் புகும்."

என்பது தெளிவிக்கும்.

இங்ஙனம், இம்மை மறுமை யீரிடத்தும் இன்பந் தருதல் பற்றியே கல்வியைக் கற்புடைப் பெண்டிராகவும், கவி பாடுதலை மக்கட்பேறாகவும் பிறவும் ஏற்றவாறு புனைந்து கூறி வைத்தார்போலும்!

"கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு."

என்பது அது.

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே."

## 13. கேள்வி

பெறுதற்கரிய இம்மானிடப் பிறவிக்கு மற்றப் பிறவிகளினு முள்ள விசேடமெல்லாம், நல்லதன் நலனும் தீயதன் தீமை யும் பகுத்தறிதற்குக் கருவியாகிய மனமென்னும் இந்திரி யத்தை இது விசேடமாகப் படைத்திருத்தலேயாம். இம் மன விந்திரியம் இல்லையேல், மக்கட் பிறவியேயாயினும், அது விலங்கின்பாற் பட்டு, மாக்கள் என்ற வேறு சாதியாமென்பது முன்னோர் கொள்கை. இதனை,

" மாவும் மாக்களும் ஐயறி வினவே;
மக்க டாமே யாறறி வுயிரே."

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறிக.

மக்களது பகுத்தறிதற் கருவியாகிய இம்மனப் பொறி யானது ஏனை மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற இந்திரி யங்களை நடத்துந் தலைமையும் இன்றியமையாமையும் உடை யது. இம்மனமொன்றில்லையாயின், ஏனையவை தம் தொழில் களைச் செய்யா. ஐம்பொறிகளுடன் மனம் உடனின்று நடத் துவதாலேதான் இவ்வுலகப் பேறுகள் யாவும் சித்திக்கின்றன. இவற்றுள் ஆன்ம கோடிகள் இம்மை யம்மைப் பேறுகளை அடைந்துய்தற்கு இன்றியமையாத காரணமாயுள்ளது, மன முஞ் செவியும் சேர்தலாகும். இதுவே 'கேள்வி' எனப்படும்.

கேள்வியாவது, கேட்டற்குரிய பொருள்களைக் கற்றறிந் தார் சொல்லக் கேட்டலாம். இது, கற்றார்க்கும் கல்லாதவர்க்

கும் ஒப்ப வேண்டத்தக்க தொன்று. கல்லாதவர் பெரியோர் சொல்லிய உறுதிகளைக் கேட்பாராயின், தாமும் கற்றவர் பெற்றுள்ள அறிவைப்போன்ற அறிவை எளிதிற் பெறுவர்; கற்றோர் அங்ஙனங் கேட்பாராயின், தங் கல்வியினாலாய அறிவைப் பின்னுஞ் சிறப்பித்துப் பெருக்கியவராவர்.

இங்ஙனம் கற்றார் கல்லார் இருவர்க்கும் ஒப்ப உயர்தர ஞானத்தை ஊட்ட வல்ல கேள்வி விளையும் நிலங்கள், கற்று முதிர்ந்த அறிஞர் குழுமிய கழகங்களேயாகும். ஞானங்களின் பிறப்பிடமாதல் பற்றியே அவையையும், அவைத் தலைவரையும், " நமஸ் ஸதஸே நமஸ் ஸதஸஸ் பதயே, " என்று வேதமும் வாழ்த்தி வணங்குவதாயிற்று. நம் வேத வேதாங்கங்களும், இதிகாச புராணங்களும், இக்கேள்வியாலன்றோ, புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டத்தை இன்றுவரை அலங்கரித்து வருகின்றன? வேதத்துக்குக் கேள்வி எனப் பொருள் கொண்ட சுருதி என்பது பெயராக வழங்குவது கண்டு கொள்க. இக்கேள்வியானது முதற்பொருளாகிய கடவுளை அறிந்துய்தற்குரிய உபாயங்களுள் முதலாவதாம். சிரவணமாகிய இதன் சிறப்பு,

" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்,
மற்றீண்டு வாரா நெறி. "

என்னும் பொது மறையால் அறியத் தக்கது.

பல நூல்களைப் பலகாலும் கற்றும் கேட்டும் துருவியாராய்ந்த பெரியோர் அவையினின்று கேட்கப்பெறும் விஷயங்கள் எத்துணை அருமை பெருமை வாய்ந்தனவாதல் வேண்டும்? நல்லூழும் பெருமுயற்சியுங்கொண்டு பல்லாண்டு பயின்று தெரிதற்குரிய அரும்பொருள்களை எளிதிற் பெறச்

செய்வது இக்கேள்வியேயன்றே? ஆதலால், கல்வியினும் சிறப்பு வாய்ந்தது இக்கேள்வி என்பது பெறப்படும். இது பற்றியே,

"—கணக்கினை
முற்றப் பகலு முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று."

என்றார் முன்னோரும். ஞான விருத்தி குறைந்து விட்ட இக் கலி யுகத்தே, கேள்வியின் நிலைக்களமாகிய சங்கங்களினின்றே நம் சக்திகளைப் பெருக்க வேண்டி யிருத்தலால், ஞானபி விருத்திக்கு இச்சபைகளே இன்றியமையாத சாதனங்களா கும். 'ஸங்கே சக்தி: கலௌயுகே,' என்ற ஸ்மிருதியின் கருத்தும் இதுவேயாம். இச்சங்கங்களின் வாயிலாக அடை யும் கேள்வியினையே,

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்; அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை."

என்று நாயனாரும் சிறப்பித்தருளினார்.

பெரியோர் குழுவினின்று உயர்ந்த விஷயங்களை எத் துணையாகக் கேட்பினும், அது பெரும்பயனை விளைக்கும்.

"எனைத்தானு நல்லவை கேட்க, அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்."

என்றார் தெய்வப்புலவர். கேட்பவைசிலவேயாயினும், விடாது பெரியோரை அடுத்திருந்து கேட்குமிடத்து அக்கேள்வி மழைத்துளிபோல வந்தீண்டி, அறிவுப் பெருக்கெடுக்கும் என் பது இதன் கருத்து. இங்ஙனம் ஞான விளைவுக்கேதுவாகிய கேள்வி என்னுங் கருவியால் துளைக்கப்படாத செவிகள்,

அவை ஓசை யறியுந் துவாரமுடையவாயினும், செவிடுகளே யாகுமென்க.

" பாட்டும் உரையும் பயிலா தனவிரண்
டோட்டைச் செவியு முள."

என்றார் ஔவையாரும். கேள்வித்துணை பெறாத ஒருவனுக்கு இம்மைச் செல்வமும் இயற்கையறிவும் நிரம்ப விருப்பினும், இருமைப் பயன்களும் அவனுக்கில்லையாம்.

" இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும்
வானிரவி யெழுந்தா லன்றிக்
கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரி
தாம்:உலகிற் கண்போல் யாரும்
பெருகியசெல் வமுமறிவும் பெற்றாலும்
நூற்கேள்வி பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவ மிம்மைமறு
மையும்வீடுந் தெரியா வன்றே."

இதனால், கேள்வியின் ஆவசியகம் வற்புறுத்தப்படுதல் காணலாம். கல்வியாகிய கண்ணில்லாதவர்க்கும் இக்கேள்வியானது ஊன்றுகோலாய் நின்று உதவுவதன்றோ ?

" கண்ணுடைய ரேன்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்றதனால், கல்லாதவரைக் கண்களற்ற முழுக் குருடராகக் குறிப்பிட்ட நாயனார்,

" கற்றில னாயினுங் கேட்க: அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை."

என்றார். இதனால், முன் கூறியபடி கல்லாராகிய குருடர்க்கு, இக்கேள்வியிருப்பின், இஃது அக்குருட்டு நிலையினும் உதவக்

கூடிய ஊன்றுகோல்போ லாகும் என்பது தெய்வப் புலவர் உள்ள மாதலும் காண்க.

இத்தகைய கேள்வி மிகப் பெற்றவர்கள், இதன் ரஸத்தையே பானம் பண்ணி, துன்ப மென்பதறியாது இன்பம் அடைபவராதலின், வள்ளுவனார் இன்னோரை அவியுணவின் ஆன்றோராகிய தேவரோ டொத்தவராகப் புகழ்வர். தம்மை வியத்தலும், பணிந்த மொழிக ளில்லாமையு முதலிய தீக் குணங்களெல்லாம் பெரியாரை அடுத்துக் கேள்வி செய்யாமையால் வருவனவே.

“ நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.”

என்பது பொய்யா மொழி. இத்தகைய செவிச் சுவைகளின் பரமானந்தத்தை யுணராது வாய்ச்சுவை யொன்றையே அறியும் ஐயறிவினராகிய மாக்கள் இருப்பதும் இராததும் ஒன்றே என்னுங் கருத்துப்பட,

“ செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மேன்?”

என்றனர் நாயனார்.

இவற்றால், கேள்வி என்பது, ஆன்மாவின் ஞானபிவிருத்திக்கு உரியதாய் வீட்டிற் கேதுவாமென்பதும், அது கற்றார்க்கும் கல்லார்க்கும் ஒப்ப உறுதி பயப்பதென்பதும், அஃதின்றேல் மானிடப் பிறவி பயனற்றுக் கழியுமென்பதும், நல்லோர் குழுமிய அவைகளே கேள்வித் தானமா மென்பதும் ஒருவாறு விளங்கும். இத்தகைய கேள்விப்பெருக்கு எங்கும் ஓடி வெள்ளமிடும்படி செய்வது, பரமோபகார மென்பது சொல்ல வேண்டா. அதற்குரிய சங்கங்கள் நாடெங்குந் தழைத்து, ஞானம் விளைப்பன வாகுக.

